# நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை

வ. தேனப்பன்



தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர் 613 005

ISBN : 81-7090-361-0

தமிழ்ப் பல்கலைக்கழக வெள்ளி விழா ஆண்டு வெளியீடு -18

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 300

திருவள்ளுவராண்டு 2036, மார்கழி - திசம்பர் - 2005

நூல் : நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை

ஆசிரியர் : வ. தேனப்பன்

மொழி : தமிழ்

பொருள் : சிற்பவியல்

பதிப்பு : முதற்பதிப்பு 2005

பக்கம் : 260

தாள் : டி.என்.பி.எல்.மேப்லித்தோ 18.6 கிலோ

அளவு : டெம்மி 1/8

நூற்கட்டுமானம் : சாதாக்கட்டு

விலை : உரு. 100/-

படிகள் : 1000

அச்சகம் : தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம்
தஞ்சாவூர்



# தமிழ்ப் பல்கலைக்கழகம்
## தஞ்சாவூர்

**முனைவர் சி.சுப்பிரமணியம்**
**துணைவேந்தர்**

### அணிந்துரை

இந்திய நாகரிகத்தை கோயில் நாகரிகம் என்று குறிப்பது வழக்கு. குறிப்பாக தென்னிந்திய நாகரிகம், கோயில் வழி நாகரிகம் என்று அடையாளம் காட்டப்படும். சங்க காலத்தில் நாகரிகம் என்ற சொல்லாட்சி நகரம், நகரியம் என்ற பொருளுடையதாக வழங்கப்பட்டுள்ளது. இந்நகரம் என்ற சொல்லுக்கு கோயில் என்ற பொருளைக் கொடுக்கின்ற மரபு தமிழ் மரபாகும். சுந்தரச் சோழ விண்ணகரம் போன்ற நகரம் என்ற சொற்கள் கோயில்களைக் குறிப்பது தமிழகத்தில் இன்றும் காணக்கூடிய பெரும்பான்மையான வழக்காகும்.

இவ்வடிப்படையில் தமிழர்களின் குடியிருப்புப் பகுதியை ஆய்வு செய்கின்றபொழுது. அக்குடியிருப்புத் தோற்றங்கள் அவ்வழிப்பாட்டுக் குறியீட்டை மையப்படுத்தியே தோன்றி வளர்ந்துள்ளன என்பதை அறிய முடிகிறது. அவ்வடிப்படையில்தான் கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று தமிழ் மூதாட்டி குறித்துள்ளார். தமிழர்களின் வாழ்வியல் பண்பாட்டு நிலைக்களங்களாக இக்கோயில்கள் சமுதாய மேன்மைக்கும். ஒழுங்கிற்கும் அமைதிக்கும் ஒருங்கே பணியாற்றியதோடு தம்முடைய இறையியல். கலையியல், தொழில்நுட்பவியல் போன்ற தனிப்பெரும் தகுதிகளோடு அவ்வட்டார மக்களின் பண்பாட்டுச் சான்றாக விளக்கம் கொண்டுள்ளமையையும் ஆய்வுகள் வழி அறிய முடியும்.

தமிழகத்தைப் பொறுத்தவரை சங்க காலம். சங்கம் மருவிய காலம். பல்லவர் காலம். பாண்டியர் காலம். சோழர் காலம். நாயக்கர்கள் காலம். மராட்டியர்கள் காலம். ஐரோப்பியர் ஆட்சிக்காலம். தற்காலம் என்ற நிலையில் வளர்ந்து வந்திருக்கக்கூடிய இக்கோயிற்கலைகள் அறுபத்தி நான்கு என அளவிடப்பட்டுள்ளமையை நாம் அறிவோம். உலகளாவிய பார்வையில் கலைகள் என்ற பொருண்மையில் அமைந்திருக்கும் ஆழ்பொருள்களின் அளவீட்டின் நிறைவு அறுபத்தி நான்குதான் என்பதனையும் இதன்வழி அறிய முடியும். அத்தகைய நிறைபொருள் அடங்கிய கோயில்களைப் படைப்பதிலே உலகின் ஒட்டுமொத்தப் பார்வையில் தனிப்பெரும் ஆற்றலுடன் திகழ்ந்தவர்கள் தமிழர்கள்தான். எனவேதான், தமிழர்களை அறிமுகப்படுத்தும் முகத்தான் பிரித்தானியக் கலைக் களஞ்சியம் "தமிழர்களை கோயில்கள் கட்டுவதில் தலைசிறந்தவர்கள்" என்று குறிக்கிறது.

பூம்புகாரில் தொடங்கி வாழ்ந்து, தம்முடைய உழைப்பால் களத்தினும், காலினும் வணிகம் செய்து பொருள் ஈட்டி, ஈட்டியனவற்றை வகுத்து, வாழ்ந்து அரைசு விழை திருவினராகத் திகழ்ந்தார்கள் நகரத்தார்கள் ஆவர். அணி நகர் முழுவதும் அலைகடல் கொண்டபின் புலம்பெயர்ந்த இம்மக்கள் தமக்கென ஒரு மேட்டுப் பகுதியைக் குடியிருப்பாக்கிக் கொண்டு வாழ்ந்த பகுதியை நகரத்தார் நாடு என்று நாம் அறிவோம். இப்பகுதியைச் செட்டிநாடு எனக் குறிப்பது வழக்கு.

இந்நகரத்துச் செட்டிமார்கள் இறைமை உணர்வோடும், சமூக ஈடுபாட்டுடனும், நிலைபேறுடைய கட்டுமானங்களைத் தம்முடைய வணிக ஈட்டத்தால் ஆற்றி வந்த மரபு தொன்மையுடையது. அவ்வாறு, இந்நகரத்தார் நாட்டில், நகரத்தார் படைத்துள்ள ஒன்பது கோயில்களைப் பற்றி முனைவர் வ. தேனப்பன் அவர்கள் படைத்தளித்துள்ள நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை என்னும் இந்த நூல் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் அவர் மேற்கொண்ட முனைவர் பட்ட ஆய்வேட்டைத் தழுவியதாக அமைந்து தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக இன்று வெளி வருகிறது.

இந்நூலில் நகரத்தார் கண்டு காட்டிய சிற்பக்கலை வளர்ச்சி ஆழ்புல ஆய்வு பெற்றுள்ளது. ஆய்வு முறைமைகளை முறையாகக் கொண்டு தரமான நம்பகத்தன்மை வாய்ந்த தரவுகளோடு கூடியதாக இந்நூலின் இயல்கள் நமக்குக் கருத்து விருந்து அளிக்கின்றன. தமிழகம் முழுவதும் காணப்படுகின்ற நகரத்தார் திருப்பணிகளை மதிப்பீடு செய்வதற்கு வாய்த்த ஒரு பெரு நூலாக இந்நூல் காணப்படுகிறது. இந்நூலைக் கலைவல்லார், கலை ஆர்வலர்கள் கண்டு, அறிந்து. ஆய்ந்து தமிழ்க் கலைகளுக்கு ஆக்கம் தரவேண்டும் என்று தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் சார்பில் தமிழ் மக்களை அன்புடன் வேண்டுகிறேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டு வெளிக்கொணர்ந்த தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர் மற்றும் பதிப்புத்துறை யினருக்கு நெஞ்சு நிறை நல்வாழ்த்துக்களை உரித்தாக்குகின்றேன்.

வாழ்க தமிழ்க்கலை! வாழ்க தமிழ்!

**(சி.சுப்பிரமணியம்)**

# 1. முன்னுரை

கோயில் என்னும் சொல் இறைவன் தங்கியிருக்கும் இடம் எனும் பொருளில் இன்று வழங்குகிறது. கோயிலில் உள்ள சிற்பங்கள் இறைவனின் குணங்களையும், தத்துவங்களையும் விளக்கிக் கூறும் சாதனங்களாக அமைந்துள்ளன. இச் சிற்பங்கள், கோயில் வரலாறு, புராண விளக்கம், பண்பாட்டுச் சிறப்பு, கலைநுட்பம், இலட்சிய வாழ்க்கை ஆகியனவற்றையும் விரித்து கூறும் பாங்கில் வடிவமைக்கப்பட்டுள்ளன.

கோயில் சமயப் பணிக்கும் சமுதாயப் பணிக்கும் களமாக அமைந்தது. இவ்வாறு கோயில் மூலமாக நாகரிகத்தை வளர்த்தவர்கள் தமிழர்கள். 'கோயில் வழி நாகரிகம்', நம் பண்பாட்டு வரலாறாக இருப்பதாலேயே சங்க காலத்திலிருந்து இன்று வரை தொடர்ந்து கோயில்களைக் கட்டிக் காத்து வருகின்றனர்.

முன்பு பல்லவர், பாண்டியர், அதியமான், சோழர், விஜயநகர வேந்தர்கள், நாயக்கர்கள் செய்த கோயில் திருப்பணியை இப்பொழுது நகரத்தார்கள் தொடர்ந்து செய்து வருகின்றனர்.

### 1.1. கோயில் பற்றிய ஆய்வுகள்

கோயில் பற்றிய ஆய்வுகள் தமிழில் வளர்ந்து வருகின்றன. இன்றுவரை ஆறு ஆய்வு நூல்கள் வெளிவந்துள்ளன. அவையாவன:

#### 1.1.1. அச்சிடப்பெற்ற ஆய்வு நூல்கள்

1. சுசீந்திரம் கோயில் - கே.கே.பிள்ளை.
2. காஞ்சி வரதராஜ ஸ்வாமி கோயில் - கே.வி.இராமன்
3. மதுரைக் கோயில் - டி.தேவகுஞ்சரி
4. திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு -ந.கலியாணசுந்தரம்

#### 1.1.2 அச்சிடப்பெறாத ஆய்வு நூல்கள்

1. திருவொற்றியூர்க் கோயில் - சி.கிருஷ்ணமூர்த்தி
2. அழகர் கோயில் - தொ.பரமசிவன்

#### 1.1.3 தொல்பொருள் ஆய்வுத்துறை நூல்கள்

தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறையினரும் பலகோயில் பற்றிய நூல்களை வெளியிட்டுள்ளனர். அவற்றுள் ஏழு நூல்கள் குறிப்பிடதக்கன. அவையாவன:

1. மாமல்லை - இரா.நாகசாமி
2. திருவையாறு - சு..இராஜகோபால்
3. திருவெள்ளறை - வெ.வேதாசலம்
4. திருமழபாடி - எஸ்.இராமச்சந்திரன்
5. திருப்பரங்குன்றம் - செ.போசு
6. திருப்புத்தூர் - வள்ளி சொக்கலிங்கம்
7. குடுமியான்மலை - சொ. சாந்தலிங்கம்

## 1.2. சிற்பக்கலை பற்றிய ஆய்வுகள்

கோயிலில் காணப்படும் சிற்பக்கலை, கட்டடக்கலை, ஓவியக்கலை, வழிபாடு முறை ஆகியனபற்றி ஆய்வு நூல்கள் தமிழில் பெருகி வருகின்றன.

சிற்பக்கலையினை மட்டும் ஆராய்ந்து நூல் எழுதியவர்கள் சிலரே. அவர்களுள் இரண்டு வகையினரைக் காண முடிகின்றது.

1.2.1. சிற்பகலை பற்றிய பொதுவாக நூல் எழுதியவர்கள்
1.2.2. சிற்பக்கலையினைக கால வரிசைப்படி எழுதியவர்கள்
1.2.1.1. ஆங்கில மொழியில் சிற்பக்கலை பற்றிப் பொதுவாக நூல் எழுதியவர்கள்:

ஜேம்ஸ் பர்கூசன் (James Fergusson)
ஜேம்ஸ் பர்கெஸ் (James Burgess)
பிருந்தாவன் சி.பட்டாசார்யா (Brindavan V.Battacharya)
எச்.கிருஷ்ண சாஸ்திரி (Krishna Sastri.H)
டி.ஏ.கோபிநாத ராவ் (T.A.Gopinatha Rao)
ஈ.பி.ஹாவெல் (E.B.Havell)
ஜி.ஜூவியூ - தூபிரியல் ((G.Jouveau-Dubreuil)
பானர்ஜி ஜிதேந்திர நாத் (Banerjee Jitendranath)
ஸ்டெல்லா காம்ரிஷ் (Stella Karmrisch)
தின்கர் கோஷிக் (Dinkar Kowshik)
எலியட் மர்சியா ( Eliat Mircea)
ஆர்.கே.தாஸ் (Das R.K.)
கே.ஆர்.சீனிவாசன் (K.R.Srinivasan)
ஹெச். டேனியல் ஸ்மித் (H.Daniel Smith)
கிருஷ்ண தேவா (Krishna Deva)
எஸ்.பத்மநாபன் (S.Padmanaban)
கே.வி.சௌந்தர்ராஜன் ((K.V.Soundararajan)

டோனால்டு (Donald)

ஜீன்.ஜான்சன் (Jean Johnson)

டாக்டர் என்.எல்.மாத்தூர் (Dr.N.L.Mathur)

கல்பனா. எஸ்.தேசாய் (Kalpana S.Desai)

பிரமோட். சந்திரா (Pramod Chandra)

பகவந்த் சாய் (Bhagwant Sahai)

பி.பால் (P.Pal)

பி.சுரேஷ் பிள்ளை (Suresh B.Pillai)

லீடன் ஈ.ஜே.பிரில் (Leiden E.J.Brill)

பிரடிரிக் ஹார்ட் (Frederick Hartt)

பி.என்.சர்மா (B.N.Sharma)

சி.சிவராம மூர்த்தி (C.Sivaramamurthi)

டாக்டர் வித்யா தேகிஜா (Dr.Vidya Dehejiya)

எம்.ஏ.தாகி (M.A.Dhaky)

டி.சத்தியமூர்த்தி (T.Satyamurti)

டாக்டர் டி.வி.மகாலிங்கம் (Dr.T.V. Mahalingam)

பர்டன் ஸ்டீன் (Burton Stein)

டிபாலா மித்ரா (Debala Mitra)

என்.பி.ஜோஷி (N.P.Joshi)

எஸ்.பி.திவாரி (S.P.Tiwari)

காஞ்சன் சின்கா (Kanchan Sinha)

ஊர்மிளா அகர்வால் (Urmila Agarwal)

என்.எஸ்.நிகம் (N.L.Nilgam)

ஆர்.டி.திரிவேதி (R.D.Trivedi)

பீமல் பாண்டியோபாத்யாய் (Bimal Bendyopadhyay)

முதலியோர் அங்கில மொழியில் சிற்பக்கலை பற்றிப் பொதுவாக நூல் எழுதியுள்ளனர்.

### 1.2.1.2. தமிழ் மொழியில் சிற்பக்கலை பற்றிப் பொதுவாக நூல் எழுதியவர்கள்

எம்.ராதாகிருஷ்ண பிள்ளை, தொ.மு பாஸ்கரத் தொண்டைமான், இ.மு.சுப்பிரமணிய பிள்ளை, பி.டி.ராஜன், நா.சுந்தரம், சிவகளை சுப்பையா, எஸ்.பத்மநாபன், அ.இராசேந்திரன், தி.இராசமாணிக்கம், இரா.இளங்குமரன் முதலியோர் கோயில்களைப் பற்றித் தமிழில் பொதுவாக எழுதியுள்ளனர்.

வை.கணபதி ஸ்தபதி, டாக்டர் இரா.நாகசாமி, மே.சு.இராமசுவாமி, கே.எம். துரைசாமி முதலியோர் சிற்பக்கலை பற்றிக் குறிப்பிடத் தகும்படியாக எழுதியுள்ளனர்.

### 1.2.2. சிற்பக்கலையினைக் கால வரிசைப்படி எழுதியவர்கள்

சிற்பக்கலையின் வளர்ச்சியை அனைவரும் அறியும் வண்ணம் கால வரிசைப்படி - பல்லவர்காலம், பாண்டியர் காலம், சோழர் காலம் என வரிசைப்படுத்தி எழுதியவர்கள் சிலரே.

### 1.2.2.1. பல்லவர்காலச் சிற்பங்கள்

பல்லவர்காலச் சிற்பக்கலை பற்றிய டாக்டர் இரா.நாகசாமி தமது "மாமல்லை" நூலிலும், "ஓவியப்பாவை" நூலிலும், கே.ஆர்.சீனிவாசன் தமது "பல்லவர் குகைக் கோயில்கள்" (Pallava Cave Temples) நூலிலும் எழுதியுள்ளனர்.

### 1.2.2.2. முற்காலப் பாண்டியர் காலச் சிற்பங்கள்

முற்காலப் பாண்டியர்காலச் சிற்பக்கலை பற்றி சி.சிவராமமூர்த்தி Early Pandian Rock-cut Caves நூலிலும் ஜே.எம் சோமசுந்தரம் "பாண்டியர் பெருமாட்சி" நூலிலும் எழுதியுள்ளனர்.

### 1.2.2.3. சோழர் காலச் சிற்பங்கள்

சோழர்காலச் சிற்பங்களைப் பற்றித்தான் அதிகமான நூல்கள் வெளிவந்துள்ளன. சி.சிவராமமூர்த்தி (The Chola Temples), ஜே.எம். சோமசுந்தரம் சோழர் கோயிற் பணிகள், இராசராசேச்சுரமும் பிற சோழர்

கோவில்களும். பி.வெங்கட்ராமன் (Temple Art under the Chola Queens). (Laddingam-A later Chola Temple) எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியம் (சோழர் கலைப்பாணி, Early Chola Art and Architecture, Early Chola Art, Later Chola Temples, Middle Chola Temples, Later Chola Temples, Four Chola Temples) பி.ஆர் சீனிவாசன் (Important works and Art of the Early Chola period from near Tanjore) முதலியோர் சோழர் காலச் சிற்பக கலையினைப் பற்றிச் சிறப்பாக எழுதியுள்ளனர்.

### 1.2.2.4. பாண்டியர் காலச் சிறபங்கள்

பாண்டியர் காலச் சிற்பங்கள் பற்றிப் பாலூர் கண்ணப்ப முதலியார் எழுதிய "பாண்டி நாட்டுக் கோயில்கள்" என்னும் ஒரு நூல் மட்டுமே கிடைக்கின்றது.

### 1.2.2.5. பிற்காலச் சிற்பங்கள்

விஜய நகர மன்னர் காலச் சிற்பங்கள் பற்றியும் நாயக்கர் காலச் சிற்பங்கள் பற்றியும் தனி நூல்கள் வெளிவந்ததாகத் தெரியவில்லை.

நகரத்தார் காலச் சிற்பக்கலை பற்றிய முதல் நூலாக இந்த ஆய்வு அமைந்துள்ளது.

### 1.3. ஆய்வு நோக்கம்

நகரத்தார் அமைத்துள்ள கோயில்களில் உள்ள சிற்பங்கள் தெய்வ தத்துவம், புராண விளக்கம், பண்பாட்டுச் சிறப்பு, கலை நுட்பம், இலட்சிய வாழ்க்கை ஆகியவற்றை விளக்கிக் கூறும் தன்மையில் சிற்ப, ஆகம இலக்கணப்படி அமைந்துள்ளன. இவை சிற்பக் கலையின் வளர்ச்சியாக அமைந்துள்ள பாங்கினை ஆராய்வதே ஆய்வின் நோக்கமாகும்.

### 4. ஆய்வுப்பரப்பு

4.1. நகரத்தார் தற்பொழுது வாழந்து வருகின்ற 78 ஊர்களிலும் கோயில் கட்டியுள்ளனர். 9 கோத்திரங்களாக அமையும் 9 நகரக் கோயில்களிலும் பெரும் திருப்பணி செய்துள்ளனர். 123 தேவாரத் தலங்களிலும் 6 பிரபந்தத்

தலங்களிலும் 33 பிற தலங்களிலும் கோயில் திருப்பணி செய்துள்ளனர். அலைகடலுக்கு அப்பாலும் கோயில் திருப்பணி செய்துள்ளனர். இவ்வாறு அவர்கள் செய்த கோயில் திருப்பணிகளில், அவர்கள் வளர்த்த சிற்பக்கலை பற்றிப் பொதுவாகச் செய்திகள் திரட்டப்பட்டுள்ளன.

4.2. i) வயிரவன்பட்டி (1864இல் கருங்கல் திருப்பணி செய்யப்பட்டது) (நி.ப.எ.1)
ii) கீழச்சிவற்பட்டி (1877இல் கருங்கல் திருப்பணி செய்யப்பட்டது) (நி.ப.எ.2)
iii) இரணியூர் (1944இல் கருங்கல் திருப்பணி செய்யப்பட்டது) (நி.ப.எ.3)

ஆகிய மூன்று ஊர்களிலும் உள்ள கோயில் சிற்பங்களில் சிறப்புக் கவனம் செலுத்தப்பட்டுள்ளது.

4.2.1. சிறப்புக் கவனம் பெறும் மூன்று கோயிலிலும் உள்ள கல், உலோகம், சுதை, மரம் முதலியவற்றால் செய்யப்பட்ட சிற்பங்களின் கலை அழகு, தத்துவ அழகு ஆகியன ஆழ்ந்து ஆராயப்பட்டுள்ளன.

4.3. நகரத்தார் வாழுமிடங்களில் கட்டியுள்ள 78 கோயில்களுக்கும் நேரில் சென்று பேட்டி மூலமாகவும், வினாப்பட்டியல் மூலமாகவும் புள்ளி விவரங்கள் சேகரிக்கப்பெற்றுள்ளன.

4.4. சிற்பக் கலையில் சிறந்து விளங்கும் மாமல்லபுரம் தமிழ்நாட்டுக் கட்டட-சிற்பக்கலைப் பயிலக மேலவர் வை. கணபதி ஸ்தபதி, தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி, மைசூர் தொல்பொருள் ஆய்வுத்துறைத் தலைமைக் கல்வெட்டாய்வாளர் டாக்டர் கே.வி. ரமேஷ் ஆகியோருடன் கலந்துரையாடிப் பல கருத்துக்கள் குறிக்கப்பெற்றுள்ளன.

4.5. நகரத்தார் வகுப்பைச் சேர்ந்த அறிஞர்கள் கம்பன் அடிப்பொடி, சா. கணேசன், டாக்டர் தமிழண்ணல், டாக்டர் சுப. அண்ணாமலை, டாக்டர் அர. சிங்காரவடிவேலன், டாக்டர் கரு. முத்தய்யா, டாக்டர் சபா. அருணாசலம், சோமலெ ஆகியோருடனும், 'அழகர்கோயில்' பற்றி ஆய்வு செய்து டாக்டர்

பட்டம் பெற்ற தொ. பரமசிவன், 'நகரத்தார்' பற்றி ஆய்வு செய்யும் அமெரிக்க ஆய்வாளர் டேவிட் இரட்னர் ஆகியோருடனும் கலந்துரையாடி நேர்காணல் மூலம் பல கருத்துக்கள் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

4.6. சிற்பக்கலை பற்றிய மயமதம், மானசாரம், வாஸ்து சாஸ்திரம், சகளாதிகாரம், காசியப சில்பம், சாரஸ்வதீய சித்திர கர்ம சாஸ்திரம், ஸ்ரீ தத்துவ நிதி, சிற்பச் செந்நூல் மற்றும் பல தமிழ், ஆங்கில நூல்களின் அடிப்படையில் சிற்பங்களின் அமைப்பு ஆராயப்பெற்றுள்ளது.

4.7. சிற்பக்கலை பற்றிய நூல்களையும், கல்வெட்டுக்களையும் கண்டு பிடித்துப் படியெடுக்க ஆய்வாளர், மைசூர் தொல்பொருள் ஆய்வுத்துறை நூலகம், சென்னை தொல்பொருள் ஆய்வுத்துறை நூலகம், மதுரை தொல்பொருள் ஆய்வுத்துறை நூலகம், சென்னை மறைமலையடிகள் நூலகம், உ.வே.சா. நூலகம், கீழ்த்திசை ஓலைச் சுவடிகள் நூலகம், கன்னிமரா நூலகம், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம், மதுரை தெ.பொ.மீ.நூலகம் ஆகிய இடங்களுக்குச் சென்று பல்வேறு குறிப்புக்களை எழுதிவந்துள்ளார். இவற்றின் அடிப்படையில் ஆய்வேடு எழுதப்பட்டுள்ளது.

### 5. அணுகுமுறை

5.1. நகரத்தார்களின் வரலாறும், கோயில் திருப்பணிகளும், நகரத்தாருக்கு முந்திய சிற்பக்கலை வளர்ச்சியும், கல்வெட்டு, இலக்கியங்களின் அடிப்படையில், வரலாற்று முறையில் அணுகப்பட்டுள்ளன.

5.2. கோயிலில் அமைந்துள்ள கல், உலோகம், சுதை, மரம், முதலியவற்றாலான சிற்பங்கள், சிற்ப நூல்களுடன் ஒப்பாய்வு முறையிலும் மதிப்பீட்டு முறையிலும் அணுகப்பட்டுள்ளன.

5.3. சிற்பங்கள் - கோயில் வரலாறு, ஆகமங்கள், புராணங்கள், தத்துவ நூல்கள், பண்பாட்டு நூல்கள், ஆகியவற்றுடன் ஒப்பாய்வு முறையிலும் விளக்க முறையிலும் அணுகப்பட்டுள்ளன.

### 6. அமைப்பு முறை

இந்த ஆய்வு, ஆறு இயல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது.

## 1. முன்னுரை

முன்னுரைப் பகுதியில் கோயில் பற்றியும் சிற்பக்கலை பற்றியும் இன்றுவரை வெளிவந்துள்ள ஆய்வு நூல்களும் குறிப்பிடப் பெற்றுள்ளன. ஆய்வு நோக்கம், ஆய்வுப் பரப்பு, அணுகுமுறை, அமைப்புமுறை ஆகியன சுருக்கமாகக் கூறுப்பட்டுள்ளன.

## 2. நகரத்தாரின் கோயில் திருப்பணி

இரண்டாவது இயலில், நகரத்தார் பற்றிய பொதுச் செய்திகள், கி.மு. 2898 முதல் இன்றுவரையான நகரத்தார் வரலாறு, அவர்கள் வாழும் இடங்கள், சமயப் பற்று, மன்னர் பின்னோராக அவர்கள் தொடர்ந்து செய்துவரும் கோயில் திருப்பணிகள் ஆகியன எழுதப்பட்டுள்ளன.

## 3. நகரத்தாருக்கு முந்திய சிற்பக்கலை வளர்ச்சி

மூன்றாவது இயலில் சிற்பம் பற்றிய சிறப்புச் செய்திகளும் காலவரிசைப்படி சிற்பக்கலை வளர்ந்த முறையும் கூறப்பட்டுள்ளன. சங்க காலச் சிற்பங்கள், பல்லவர் காலச் சிற்பங்கள், பாண்டியர் காலச் சிற்பங்கள், அதியமான் காலச் சிற்பங்கள், சோழர் காலச் சிற்பங்கள், பிற்காலப் பாண்டியர் காலச் சிற்பங்கள், விஜயநகர காலச் சிற்பங்கள், நாயக்கர் காலச் சிற்பங்கள் ஆகியன கால வரிசைப்படி தொகுத்தெழுதப்பட்டுள்ளன.

## 4. நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை

நான்காவது இயலில் நகரத்தார் தோற்றுவித்த கற்சிற்பங்கள், உலோகச் சிற்பங்கள், சுதைச் சிற்பங்கள், மரச் சிற்பங்கள் ஆகியன ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளன.

## 5. நகரத்தார் பாணிச் சிற்பக் கலையின் சிறப்புக்கள்

ஐந்தாவது இயலில் நகரத்தார் தோற்றுவித்த சிற்பங்களில் காணப்படும் தனித் தன்மைகள் தொகுக்கப்பட்டுள்ளன. நகரத்தார்-பல்லவர் பாணி, சோழர் பாணி, பாண்டியர் பாணி, விஜயநகர மன்னர் பாணி, நாயக்கர் பாணி

ஆகியனவற்றை ஏற்றுக்கொண்டு அவற்றின் வளர்ச்சியாகச் சில புது முறைகளையும் புகுத்தியுள்ளனர். இவ்வியலில் அவை தொகுத்து எழுதப்பட்டுள்ளன.

### 6. முடிவுரை

ஆறாவது இயல், இந்த ஆய்வின் சாரமாகக் காணப்படும் முடிவுகளின் தொகுப்புரையாக எழுதப்பட்டுள்ளது.

### 7. பின்னிணைப்பு

### 7.1 நகரத்தார் வாழிட வரைபடம்

நகரத்தார்கள் வாழ்ந்து வருகின்ற எழுபத்தெட்டு ஊர்கள் அமைந்துள்ள இடங்களை காட்டும் 'செட்டிநாடு' வரைபடம் இணைக்கப் பட்டுள்ளது.

### 7.2. நகரத்தாரின் கோமில் திருப்பணிப் பட்டியல்

நகரத்தாகள், தங்களது ஒன்பது கோத்திரங்களாக அமைந்த ஒன்பது நகரக் கோயில்களிலும் தாங்கள் வாழும் 78 ஊர்களிலும், தத்தம் ஊர்களுக்கு அண்மையில் உள்ள 33 ஊர்களிலும், காசியிலும், சோழநாட்டு தலங்களான 105 ஊர்களிலும், பாண்டிநாட்டுத் தலங்களான 24 ஊர்களிலும், கொங்குநாட்டுத் தலங்களான 10 ஊர்களிலும், நடுநாட்டுத் தலங்களான 11 ஊர்களிலும், தொண்டை நாட்டுத் தலங்களான 20 ஊர்களிலும், ஈழநாட்டில் திருக்கேதீச்சுரத்திலும் பிற ஊர்களிலும் செய்துள்ள திருப்பணிகளின் பொருளளவு விவரம் தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

நகரத்தார்கள் இலங்கை, பர்மா, மலேசியா, சிங்கப்பூர், வியட்நாம், தாய்லாந்து, இந்தோனேசியா, மொரீசியசு, அமெரிக்கா ஆகிய வெளிநாடுகளில் செய்துள்ள கோயில் திருப்பணிகள் பற்றிய புள்ளி விவரங்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## 7.3. கல்வெட்டுக்கள்

நகரத்தார் வாழிடங்கள், நகரக் கோயில்கள் பற்றிய கல்வெட்டு எண்கள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. இந்த ஆய்விற்கு உதவும் இரணியூர்க் கல்வெட்டின் நகல் இணைக்கப்பட்டுள்ளது.

## 7.4. கோயில் வரைபடங்கள்

சிறப்புக் கவனம் பெறுகின்ற வயிரவன்பட்டி வயிரவன் கோயில், கீழச்சிவற்பட்டி ஸ்ரீ மீனாட்சி உடனாய சுந்தரேசுவரர் கோயில், இரணியூர் ஸ்ரீ சிவபுரந்தேவி உடனாய ஆட்கொண்ட நாதர் சோயில் ஆகிய மூன்று கோயில்களின் அமைப்பு முறையினைக் காட்டும் கோயில் வரைபடங்கள் இணைக்கப்பட்டுள்ளன.

## 7.5. நிழற்படங்கள்

ஆய்விற்கு அடிப்படையான 56 சிற்பங்களின் நிழற்படங்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## 7.6. வினாப்பட்டியலும் விடை அளித்தோரும்

நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை என்ற இந்த ஆய்விற்காக ஆய்வாளர் தயாரித்த வினாப்பட்டியலும், விடை அளித்தோர் பெயர்ப் பட்டியலும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## 7.7. துணை நூற்பட்டியல்

இந்த ஆய்விற்கு உறுதுணை புரிந்த நூல்களின் பட்டியல் தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

# 2. நகரத்தாரின் கோயில் திருப்பணி

## 2.1. நகரத்தார்

நகரத்தார், நாட்டுக்கோட்டை நகரத்தார், இரத்தின தனமகுட வைசியர், பூபாலதன வைசியர், பிரதான வைசியர், உபயகுல பூபால வைசியர், சந்திர கங்காகுல வைசியர், சிவகோத்திர வைசியர், இளையாற்றங்குடி நகா வைசியர், நாட்டுக்கோட்டைச் செட்டியார் எனப் பல பெயர்களால் அழைக்கப்பெற்றனர்.[1] இப்பொழுது நகரத்தார், நாட்டுக் கோட்டைச் செட்டியார் என்ற பெயரிலேயே பரவலாக வழங்கப்படுகின்றனர்.

நகரத்தார் கி.மு. 2898க்கு முன்பே நாக நாட்டில் சாந்தியாபுரி என்ற நகரில் வாழ்ந்து வந்தனர் எனப் பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டு கூறுவதாகப் பல அறிஞர்கள் எழுதியுள்ளனர்.[2] எனினும் அப்படி ஒரு கல்வெட்டு காணக் கிடைக்கவில்லை எனத் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் கூறுகின்றனர்.[3]

சாந்தியாபுரியிலிருந்து குடிபெயர்ந்த அவர்கள் கி.மு.2897 முதல் கி.மு.790 வரை காஞ்சிபுரத்தில் வாழ்ந்தனர். பிறகு காஞ்சிபுரத்திலிருந்து புறப்பட்டு கி.மு. 789 முதல் கி.பி. 706 வரை காவிரிப்பூம்பட்டினத்தில் குடியேறினர். பின்னர் கி.பி. 707ஆம் ஆண்டு பாண்டிய நாட்டிற்கு வந்தனர். இராமநாதபுரம் மாவட்டத்தில் 18ஆம் நூற்றாண்டு வரை 96 கிராமங்களில் வசித்து வந்தனர்.

கடந்த இரண்டு நூற்றாண்டுகளாக நகரத்தார், தொழில் காரணமாகத் தென் இந்தியாவின் பல பகுதிகளிலும், தென்கிழக்கு ஆசிய நாடுகள் பலவற்றிலும் குடியேறியதனால் இப்பொழுது 78 கிராமங்களில் வாழ்ந்து வருகின்றார்கள். அவற்றில் 58 ஊர்கள் இராமநாதபுரம் மாவட்டத்திலும் 20 ஊர்கள் புதுக்கோட்டை மாவட்டத்திலும் உள்ளன.

நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வாழ்ந்த 96 கிராமங்களுக்கும் 'செட்டிநாடு' என்ற பொதுப்பெயர் உண்டு. அது 656.7 சதுர மைல் (1,700 சதுர கிலோ மீட்டா) பரப்பளவுள்ளது.[4]

இப்பொழுது நகரத்தார் வாழும் 78 ஊர்களும் திருப்புத்தூர், சிவகங்கை, திருவாடானை, திருமயம் ஆகிய நான்கு தாலூக் காக்களுக்குள் அடங்கும். நகரத்தார்களின் இப்போதைய மக்கள் தொகை சுமார் ஒரு லட்சம் ஆகும்.

## 2.2 நகரத்தாரின் சமயப்பற்று

நகரத்தார்கள் சங்க காலச் சைவ மரபினர். சங்க காலச் சமயக் கொள்கைகளும், பழக்க வழக்கங்களும் இவர்களிடம் இன்றும் நிலவி வருவதே இதற்குச் சான்றாகும்.

சங்க இலக்கியங்களான பரிபாடல்[5], பரிதிரட்டு[6], கலித்தொகை[6A], புறநானூறு[7] ஆகியவற்றில் கோயிலைக் குறிக்கும் சொல் 'நகர்' என்பது. கோயிலையே மையமாகக் கொண்டு இவர்கள் வாழ்வதால் இவர்களுக்கு 'நகரத்தார்' என்ற பெயர் ஏற்பட்டது. இந்நகரத்தார் திருவள்ளுவ நெறியில் நின்று, தென்புலத்தார் வழிபாட்டினையும் தெய்வ வழிபாட்டினையும் செய்து வருகின்றனர்.

தென்புலத்தார் வழிபாட்டில் இல்லுறை தெய்வ வழிபாடு, நடுக்கல்லாகக் கருப்பர், நாச்சியார் வழிபாடு, ஐயனார், கொற்றவை வழிபாடு ஆகியவற்றை மேற்கொண்டுள்ளனர். தெய்வ வழிபாட்டில் மர வழிபாடு, மரகத விநாயகர் வழிபாடு, நாக வழிபாடு, சிவன் வழிபாடு, சக்தி வழிபாடு, முருகன் வழிபாடு, திருமால் வழிபாடு ஆகியனவற்றை மேற்கொண்டுள்ளனர். அருவ உருவ வழிபாடு செய்யும் நகரத்தார்கள் சைவதீட்சை பெற்றவர்கள்.

சைவமும் வைணவமும் ஒன்றெனும் சமயப் பொறை உடையவர்கள். பல்வேறு உருவ வழிபாடுகளைச் செய்தாலும் 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்;' என்னும் கடவுள் தத்துவத்தை முழுமையாக உணர்ந்தவர்கள்.

சைவ சமயத்தில் இவர்களுக்குள்ள ஆழ்ந்த பற்றுதல், இவர்களுடைய பெயர்களிலிருந்தே நன்கு தெரியவரும். அழகம்மை, அழகப்பன், நாகம்மை, நாகப்பன், அங்கம்மை, அங்கப்பன், சாத்தம்மை, சாத்தப்பன் முதலிய எல்லாப் பெயர்களிலும் இறைவனின் திருக்குணப் பண்புப் பெயரோடு அம்மை அப்பன் என்ற திருப்பெயரும் சேர்ந்து வருவதே இதற்குச் சரியான சான்றாகும்.

நகரத்தாரின் சமயப் பற்று அவர்களது நடைமுறை வாழ்க்கையில் மிகத் தெளிவாகத் தெரிய வருகின்றது. நகரத்தார்கள் கடிதம், கணக்கு, கட்டுரை முதலிய எதை எழுதினாலும் முதலில் 'உ' 'சிவமயம்' (பிள்ளையார் சுழி, சிவமயம்) என்று எழுதிவிட்டுத்தான் தொடங்குவார்கள். கடிதத்தை முடிக்கும்போது தங்கள் ஊர்க் கோயிலில் உள்ள இறைவன் துணை என்று எழுதுவார்கள் (உ-ம்: ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் துணை). நகரத்தாரின் தினசரி வாழ்விலிருந்தும் அவர்களது சமயப் பற்று நன்கு தெரிய வருகின்றது. விடிகாலையில் எழும்போது,

"பொழுதும் விடிந்தது; பூவும் மலர்ந்தது
சிவனார் வருவார்; பலனைத் தருவார்!"

என்று சிவனை வணங்கியவாரே எழுகின்றனர். குளித்து முடித்ததும் சூரிய வணக்கம், சிவபூசை வழிபாடும் செய்கின்றனர். ஒவ்வொரு வேளை உணவினையும் இறைவனுக்குப் படைத்தப் பிறகே உண்கின்றனர்.

இறைவனே எல்லா உயிருமாக இருக்கின்றான் என்னும் அத்வைதக் கொள்கையின்படி எறும்பிற்கு உணவிடுவதற்காக அரிசி மாவினால் வாசலில் கோலம் போடுகின்றனர். ஒவ்வொரு வேளையிலும் காக்கைகளுக்கு உணவிடுகின்றனர். புதிய வழி போக்கர்களுக்கும், சாமியார்களுக்கும் பல்வேறு மக்களுக்கும் விருந்தளிக்கின்றனர்.

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்ற கொள்கையின் ஊற்றமாக இயற்கையின் அசைவுகள் ஒவ்வொன்றையும் இறைவனின் திருஉள்ளச் செயல் என்று நம்புகின்றனர். இதன் அடிப்படையிலேயே நகரத்தார்கள் சகுனம் பார்க்கின்றார்கள்.

மாலையில் கோயிலுக்குச் சென்று வழிபட்டு வருவதுடன். வீட்டிலும் திருவிளக்கு ஏற்றிக் குடும்பத்துடன் கூட்டு வழிபாடு செய்து வருகின்றனர்.

குழந்தை பிறந்ததும் குல தெய்வத்திற்கு முடி இறக்குவார்கள். திருமணத்தைக் கோயிலில் பதிவு செய்து, அக்கோயில் மாலை வந்த பிறகுதான் திருமணத்தை நடத்துவார்கள்.

ஒவ்வொரு வீட்டிலும் இறந்த மூதாதையர்களுக்குப் படைக்கும் தென்புலத்தார் வழிபாட்டினைச் செய்து வருகின்றனர். பலருக்கும் பொதுவான படைக்கும் வீட்டினைப் படைப்பு வீடு, கோயில் வீடு என்று வழங்குகின்றனர்.பிள்ளையார் நோன்பு முதலிய பல்வேறு சமயச் சடங்குகளையும் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர். மதம் மாறாமை ஒன்றே நகரத்தார்களின் தீவிரமான சமயப்பற்றினைக் காட்டும்.

நகரத்தார் ஒவ்வொருவரும் கோயில் திருப்பணிக்காகவே தங்கள் தொழிலில் இறைவனுக்கும் பங்கு வைத்துள்ளனர். எனவே கோயில் திருப்பணிக்கான பணம் வளர்ந்துகொண்டே இருக்கின்றது. அதனால் நகரத்தார்களின் கோயில் திருப்பணிகளும் தொடர்ந்து நடைபெறும் என்று உறுதி கூற முடிகின்றது.

## 2.3. நகரத்தாரின் கோயில் பணி

கோயில் உள்ள ஊரில்தான் குடியிருக்க வேண்டும் என்பது பெரியோர் வகுத்த மரபு. ஆனால் குடியிருக்கும் ஊரிலெல்லாம் கோயில் கட்டுவது நகரத்தார் இயல்பு. நகரத்தார் புதிதாகக் குடியேறும் ஊரிலெல்லாம் முதன் முதலில் கோயில் கட்டும் திருப்பணியிலேயே ஈடுபட்டுள்ளார்கள்.

கி.பி. 1501 ஆம் ஆண்டில் கல்வாச நாட்டில் இளையாத்தன் குடியான குலசேகரபுரத்திலிருந்து இரணியூருக்கு வந்த நகரத்தார்கள், ஓர் அம்மன்

கோயிலை அமைத்து வழிபடுவதற்காக இரணியூர் மக்களால் கோயில் கட்டுவதற்கான இடம் சுதந்திரமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை ஒரு கல்வெட்டு (1926ஆம் ஆண்டுக் கல்வெட்டு எண்-3) குறிப்பிடுகிறது. (கல்வெட்டு நகல் பின்னிணைப்பில் உள்ளது).

நகரத்தார் வாழும் 78 ஊர்களிலும் நகரச் சிவன் கோயிலைக் கட்டியுள்ளனர். அக்கோயில்கள் தொடர்ந்து செயல்பட அறக் கட்டளைகளையும் திருக்குளம், பசுமடம், நந்தவனம், தண்ணீர்ப்பந்தல், தென்னந்தோப்பு, நன்செய், புன்செய் நிலங்களையும் அமைத்துக் கொடுத்துள்ளனர்.

கோயில்களுக்கு அறப்பணி செய்வதற்காகவே நகரத்தார்கள் தங்கள் தொழிலில் இறைவன் பெயரிலும் பங்கு வைத்து அதில் வரும் இலாபத்தைக் கோயில் பணிகளுக்கே செலவிடுகின்றனர். இது தவிர, கோயில்களில் வழபாடு தொடர்ந்து நடைபெற 'புள்ளி வரி' என்ற பெயரில் ஒவ்வொரு குடும்பத்தினரும் பணம் கொடுத்து வருகின்றனர். கும்பாபிஷேகம் முதலிய பெரும் பொருட்செலவு வரும்போது 'ஆஸ்தி வரி' என்ற பெயரில் தங்கள் சொத்திற்கு ஏற்ற வகையில் (1,000 ரூபாய்க்கு 50 பைசா என்ற முறையில்) பெரும் நிதி உதவியினைச் செய்கிறார்கள்.

இந்த 78 ஊர்களிலும் 1953 வரை நகரத்தார்கள் செய்துள்ள அறச் செயலின் பொருளளவு ரூபாய் 3,83,14,700 ஆகும்.

நகரத்தார்கள் தங்களுக்குள் ஒன்பது பிரிவினராக ஒன்பது கோத்திரங்களைக் கொண்டு வாழ்கிறார்கள். அந்த ஒன்பது கோத்திரங்களையும் ஒன்பது கோயிலின் அடிப்படையிலேயே அமைத்துக் கொண்டுள்ளனர்.

இளையாத்தன்குடி, மாத்தூர், வயிரவன்பட்டி, நேமம், இலுப்பைக்குடி, சூரைக்குடி, வேலங்குடி, பிள்ளையார்பட்டி, இரணியூர் என்னும் ஒன்பது கோயிலின் அடிப்படையிலேயே திருமணம் முதலியவற்றை மேற்கொள்கின்றனர்.

இந்த ஒன்பது கோயில்களுக்கும் 1953ஆம் ஆண்டுவரை நகரத்தார் செய்துள்ள அறச் செயல்களின் பொருள் மதிப்பீடு 1,05,42,500 ஆகும். ஒன்பது

நகரக் கோயில்களுக்கும், தங்கள் சொந்த ஊரில் உள்ள கோயில்களுக்கும் உதவியது தவிர, தங்களது ஊர்களுக்குப் பக்கத்தில் உள்ள பிற ஊர்களில் கோயில் திருப்பணிக்காகச் செலவிட்டுள்ள தொகை ரூபாய் 64,92,500 ஆகும்.

123 தேவாரத் தலங்களிலும், 6 பிரபந்தத் தலங்களிலும், 33 பிற தலங்களிலும் கோயில் திருப்பணிக்காக இவர்கள் செலவிட்டுள்ள தொகை ரூபாய் 6,40,25,000 ஆகும். 1953 ஆம் ஆண்டுவரை நகரத்தார்கள் கோயில் திருப்பணிக்காக மொத்தம் செலவிட்டுள்ள தொகை ரூபாய் 11,28,82,200 ஆகும். (கோயில் திருப்பணியின் பொருள் அளவுக் குறிப்பு விளக்கம் பின்னிணைப்பில் உள்ளது).

1953க்குப் பின்னரும் தொடர்ந்து இவர்கள் நம் நாட்டிலும், இலங்கை, பர்மா, மலேசியா, சிங்கப்பூர், வியட்நாம், தாய்லாந்து, இந்தோனேசியா, மொரீசியசு நாடுகளிலும் கோயில் திருப்பணிக்காக அதிகமாகச் செலவிட்டு வருகின்றனர். எனினும் நன்கொடையாகக் கொடுத்த பணத்தைக் கூறி, விளம்பரமோ, தற்பெருமையோ தேடிக் கொள்ள விரும்பாததால் பின்னர் அவர்கள் திருப்பணிக்காகச் செலவிட்டத் தொகை சரியாகத் தெரியவில்லை.

## 2.4. மன்னர் பின்னோர்

தன வணிகர்களைச் சிலப்பதிகாரம் "மன்னர் பின்னோர்" என்று குறிப்பிடுகிறது. மன்னரைக் காட்டிலும் செல்வ வளம் பொருந்திய வணிகர்களுக்கும் மன்னர்களுக்கும் ஏற்பட்ட முரண்பாட்டையும் அது நுட்பமாகக் கூறுகிறது என்பார் ரகுநாதன்.[8] பாண்டியனின் முத்துவளத்தைக் காட்டிலும் வணிகர்களின் மாணிக்க வளம் உயர்ந்தது என்பதையும், மன்னனைக் காட்டிலும் வணிகர்கள் உயர்ந்தவர்கள் என்பதையும் கண்ணகியின் காற்சிலம்பு புலப்படுத்தி விடுகின்றது.

இவ்வாறு நான்கு வருணக் கொள்கையில் மன்னருக்குப் பின்னவராகவும், செல்வ வளத்தில் மன்னருக்கு மேலானவராகவும் விளங்கிய தன வணிகர்கள் மன்னவர்கள் விட்டுச் சென்ற கோயில் திருப்பணியை, அவர்களைக் காட்டிலும் மேலாகச் செய்து வருகின்றார்கள். மன்னர்கள், மக்களிடமிருந்து வரியாக வசூலித்தப் பொருளைக் கொண்டுதான்

கோயில்களைக் கட்டினர். ஆனால் நகரத்தார்கள் பொது மக்களிடம் நன்கொடையோ, உண்டியல் வசூலோ செய்யாமல் தங்களது சொந்தப் பணத்தைக் கொண்டே கோயில்களைக் கட்டித் தொடர்ந்து பராமரித்து வருவது, மன்னர்களின் செயலைக் காட்டிலும் அதிகம் பாராட்டததக்கது. எனவே மன்னர்களைக் காட்டிலும் மேலாகக் கோயில் திருப்பணியை நகரத்தார்கள் தொடர்ந்து செய்து வருகிறார்கள் என்பது மெத்தச் சரியே.

இதனை ஜே.எம். சோமசுந்தரம், டாக்டர் இரா. நாகசாமி, வை.கணபதி ஸ்தபதி, கம்பன் அடிப்பொடி சா. கணேசன் ஆகியோர் விளக்கியுள்ளனர்.

சரித்திர வல்லரசுகள் தமிழ் நாட்டில் இறைவனுக்கு எண்ணற்ற கோயில்களைக் கட்டி, மக்களின் பக்திக்கும், கலை நோக்கத்திற்கும் இலக்காயினர். அவர்கள் காலத்திற்குப் பின்னர், பழந்தமிழ்க் குடிகளாகிய நகரத்தார்கள் அவ்விறைப் பணியை ஏற்றனர் என்பார் ஜே.எம். சோமசுந்தரம்.[9]

பல்லவர்கள், அதியமான் மன்னர்கள், சோழர்கள், விஜயநகரப் பேரரசர்கள், நாயக்கர்கள் ஆகியோரின் சிற்பக் கலையினைக் கூறியபிறகு, அதற்குப் பின்னர் நாட்டுக்கோட்டை நகரத்தார் சிற்பப் பணி புரிந்துள்ளனர் எனச் சிறப்பித்துள்ளார் டாக்டர் இரா.நாகசாமி அவர்கள்.[10]

அரசர்கள் தங்கள் பெருமையைக் காட்டவே கோயில் கட்டினர். ஆனால் நகரத்தார்கள் பக்தியை வளர்ப்பதற்காகவே பெரும் பணத்தையும், தங்கம், வெள்ளியையும் கொடுத்து அழகாகவும் செம்மையாகவும் கோயில்களைக் கட்டியுள்ளர் என்பார் வை.கணபதி ஸ்தபதி.[11]

கோவிலூர்க் கோயிலைப் பற்றி எழுதும்போது ராஜகோபுரங்கள் நாயக்கர் பாணியைச் சார்ந்தவை; தூண்களில் உள்ள போதிகை முதலியவை நகரத்தார் பாணியைச் சார்நதவை என்பார் கம்பன் அடிப்பொடி சா. கணேசன்.[12]

நகரத்தார் பாணி - என்று தனியாகச் சுட்டிக் கூறும் வண்ணம், நகரத்தார்களின் கோயில் பணியும் அதனுள் சிற்பப் பணியும் வளர்ந்து வருகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. ராம. சோம. கதிரேசன், தன வணிகர் தன்மை, ப. 13.

2. வீர.லெ. சின்னையச் செட்டியார், தன வைசியராகிய நாட்டுக் கோட்டை நகரத்தார் சரித்திரம், ப.7.
   அ.இராமநாதன் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, ப. IX.
   Dr.V.Sp. Manickam, Colleted Papers. p. 99.

3. Dr.K.G. Krishnan, Interview, Mysore, 18.10.82
   Dr. Suresh, Interview, Mysore, 18.10.82.

4. Dr. S.Chandrasekhar, The Nagarathars of South India, p.15.

5. படுமணியானை நெடியாய் நீ மேய
   கடிநகர் சூழ்நுவலுங்கால். பரி. 19:28-29.

6. விளைந்தார் வினையின் விழுப்பயன் துய்க்குந்
   துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையும்
   இருகே முத்தி அணிந்து எருத்தின்
   வரைகெழு செல்வ னகர். பரி. திரட்டு 1:46-49
   அனையவை யெல்லாம் இயையும் புனையிழைப்
   பூமுடி நாகர் நகர். பரி. திரட்டு 1:58-59
   நல்லவையெல்லா மியைதருந் தொல்சீர்
   வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
   குளவா யமர்ந்தா னகர் பரி. திரட்டு 1:62-64

6. . . . . . . . . . . . . . . . . . . . . . எல்லா
   கடவுட் கடிநகர் தோன்றும் இவனை
   வலங்கொளீஇ கலி. 84:5-7

7. பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
   முக்கண் செல்வர் நகர் வலஞ் செயற்கே
   இறைஞ்சுக பெரும நின் சென்னி.புறம் 6:17-19.

8. ரகுநாதன். "நகரத்தார் வரலாறும் சிலப்பதிகாரக் கதையும்" - ஆராய்ச்சி, ஜூலை 1969, ப.22.

9. ஜே.எம். சோமசுந்தரம், சிற்பமும் கலைவாழவும், ப.66.

10. டாக்டர் இரா. நாகசாமி, தமிழகக் கோயிற்கலைகள், ப. 92.

11. வை. கணபதி ஸ்தபதி, மாமல்லபுரம், நேர்காணல், நாள்: 13.9.1982.

12. கம்பன் அடிப்பொடி சா. கணேசன், "சிற்பச் சிறப்புமிக்க திருக்கோயில்." கோவிலூர் திருக்குட நீராட்டு மலர் (1978), ப. 22.

# 3. நகரத்தாருக்கு முந்திய சிற்பக்கலை வளர்ச்சி

## 3.1. சிற்பம்

சிற்பங்கள் தெய்வத்தை அணுகுவதற்குரிய சாதனங்கள் ஆகும். தெய்வ உணர்வு பெற்ற நமது ஆன்றோர் மனத்திற்கு எட்டாப் பரம் பொருளையும், அளவு கடந்த அழகினையும் தமது சிந்தனையில் உருவகப்படுத்தினார்கள். அன்பும் தன்னம்பிக்கையும் ததும்பிய அவர்கள் உள்ளத்தில் பக்தி என்ற கடவுளன்பு தானே உதித்தது. ஆண்டவனும் அடியார்க்கு எளியன் ஆதலால் தமது தத்துவப் பொருள்களை அவர்களுக்குத் தோற்றுவித்து அவர் இதயத்தில் இடம் கொண்டான். ஆகவே, சான்றோரிடத்துத் தத்துவப் பொருள் புலப்பட்டது. அழகிய கருத்துக்கள் நிரம்பின. தான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்ற மனப்பான்மையுடையோர் சான்றோர். எனவே, அன்பில் தோய்ந்த அவர்கள், தாம் கண்ட இன்பக் கருத்துக்களை, கலை ஞானத்தை, தத்துவக் கருத்துக்களை உலகம் அனுபவிக்க வேண்டுமென நினைத்தனர். பெரியோராதலின் அவ்வெண்ணங்கள் இசையான மாறின. இவ்விசை ஆகமங்களாயின. அதன் விதிகள் சிற்ப சாத்திரங்களாயின.[1]

ஆகமங்களில் உள்ள இறைவன் தத்துவத்திறகு ஓர் உருவம் கொடுப்பதையே கோயிற் சிற்பங்கள் என்கிறோம்.

"மண்ணிலும் கல்லிலும் மரத்திலும் சுவரினும்
கண்ணிய தெய்வதம் காட்டுநர் வகுக்க"

என்ற மணிமேகலை அடிகள், சிற்பங்கள் எவ்வெப்பொருள் துணைகொண்டு உருவாக்கப்பட்டன என உணர்த்துகின்றன.

"கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்
மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்
கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவை
பத்தே சிற்பத் தொழிலுக்கு உறுப்பாகும்"

என வழிபாட்டிற்குரிய தெயவத் திருவுருவங்கள் சமைப்பதற்குப் பத்து மூலப் பொருள்கள் பயன்படுத்தப்பட்டதைப் பிங்கலந்தை கூறுகிறது.

## 3.2. சங்ககாலச் சிற்பங்கள்

சிற்பங்களைக் குறிக்கும் தொல்காப்பியச் சொல் 'படிமை' என்பதாகும். தொல்காப்பியம் அகத்திணை இயல் இருபத்தெட்டாம் சூத்திர உரையில் 'படிமை' என்னும் தமிழ்ச் சொல், 'பிரதிமா' என்னும் வடமொழிச் சொல்லின் திரிபு என்று கூறப்படுகிறது. படிமை என்பது தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின்கண் செய்து அமைத்த தேவர்மேல் வந்தது என இளம்பூரணர் குறிக்கிறார்.

சிலப்பதிகாரத்திலும் இச்சொல்லாட்சியைப் பார்க்கின்றோம். 'கைவினை முற்றிய தெய்வப் படிமத்து' என்னும் தொடருக்கு 'கைத்தொழில் மிகுந்த படிமத்திலே' என உரை கூறுகிறார் அரும்பத உரை ஆசிரியர். வாழ்த்துக் காதையில் 'நில அரசர் நீண் முடியால் பலர்தொழு படிமம் காட்டித் தடமுலைப் பூசல் ஆட்டியைக் கடவுள் மங்கலம் செய்த பின்னால்' என்று இளங்கோவடிகள் கூறுகிறார்.

மணிமேகலை வஞ்சிமாநகர் புக்க காதையில் "கடவுள் எழுதிய படிமம் காணிய" எனக் கூறப்படுகிறது.

இவற்றால் படிமம் என்பது தெய்வ வடிவாகவோ, கடவுள் மங்கலம் பெற்ற தெய்வத்திரு உருவாகவோ, மனித உருவமாகவோ இருக்கலாம் எனப் பெறப்படுகிறது.[2]

### 3.2.1. இறைவனின் பல உருவங்கள்

இறைவன் ஒருவனே எனினும் அவனைப் பலவேறு வடிவங்களில் வழிபட இந்து சமயம் ஒப்புதல் அளிக்கிறது. இப் பல உருவ வழிபாடு சங்க காலத்திலும் இருந்திருக்கிறது எனக் கருத இடமிருக்கின்றது.

"வேறுபல்லுருவில் கடவுட் பேணி" வழிபட்டதைக் குறிஞ்சிப்பாட்டு தெளிவுறுத்துகிறது.[3]

சங்க காலத்தில் சிவன், திருமால், முருகன், கொற்றவை, இலக்குமி, பலராமன், பிரமன், இந்திரன், வருணன், மன்மதன் ஆகியோரை வழிபட்டுள்ளனர்.

#### 3.2.1.1. சிவன்

நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகியவற்றின் கடவுள் வாழத்துப் பகுதியில் சிவமெனும் செம்பொருளையே பாடிப் பணிந்துள்ளனர்.

சங்க இலக்கியங்கள், சிவனைக் கந்து எனும் லிங்க வடிவத்திலும் உமையொரு பாகன், பிட்சாடனர் முதலிய உருவங்களிலும் சங்க காலத்தார் வழிபாடு செய்திருப்பார்கள் என்று எண்ண இடம் தருகின்றன.

கந்து எனும் லிங்க வடிவில் வழிபட்டதை அகநானூறு, புறநானூறு, திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை ஆகிய இலக்கியங்கள் சொற்படம் எடுத்துள்ளன.[4]

சிவபெருமானின் உருவத் திருமேனி இலக்கணங்களையும் சங்கப் பாடல்கள் சரியாகக் கணக்கிட்டுச் சொல்லியுள்ளன.

சிவபெருமான் நீலமேனி உடையவர்[5]. தாழந்த சடையும்[6], எண்தோளும்[7], நெற்றிக் கண்ணும்[8], மணிமிடறும்[9] கொண்டவர். உமையொரு பாகனாக[10] உறைபவர்.

உடுக்கையும்[11] கணிச்சப் படையும்[12] உடையவர். பிறை சூடியவர்[13] அயன் தலையைக் கையில் ஏந்தியவர்.[14] சுடுகாடு உறையும் தன்மையுடையவர்.[15] கொன்றை மலர்களை விரும்பி அணிபவர்.[16] ஆனேற்றுக் கொடியை உடையவர்[17] எனச் சிவபெருமானின் உருவத் திருமேனி இலக்கணங்களைக் காணமுடிகிறது.

### 3.2.1.2. திருமால்

திருமாலின் நின்ற மேனித் தோற்றத்தைவிடக் கிடந்த மேனித் தோற்றத்தையே சங்கப் பாடல்கள் அதிகமாகக் குறிப்பிடுகின்றன. உருவங்களுக்கு வண்ணமும் பூசி இருப்பார்கள் என்றும் கருத இடமுள்ளது.

மாயோன் நீல நிறத்தவன்.[18] பாற்கடலில் பள்ளி கொண்டவன்[19] தன் கைகளில் சங்கையும்[20] சக்கரத்தையும்[21] வைத்துள்ளார். ஆதிசேடன் என்ற அரவுப் பாயில்[22] அறிதுயில் கொண்டுள்ளார்.

திருமால் திருமகளைத் தன் மார்பிடத்தே[23] கொண்டவர். கருடக் கொடியை[24] உடையவர். துளசி மாலையை[25] விரும்பி அணிபவர்.

### 3.2.1.3. முருகன்

செம்மையான நிறம் வாய்த்தமையால் சேயோன்,[26] எனப்பட்டார். ஆறுமுகம்[27] கொண்டவர். பன்னிரு கைகள் உடையவர்.[28] நெடிய வேலினைக்[29] கையில் கொண்டவர். சேவல் கொடியையும்[30] யானை ஊர்தியினையும்[31] உடையவர்.

தெய்வானை[32] வள்ளியம்மை[33] என்னும் இரண்டு மனைவியரைக் கொண்டவர். கடம்பமர் செல்வன்[34] என்று போற்றப்படுபவர். குரவன்மாலை வென்றவர். ஆறுபடை வீடுகளிலும் அன்பர் உள்ளக் கோயில்களிலும் உறைபவர் என்று பலவிடங்களில் கூறப்பட்டுள்ளார்.

### 3.2.1.4. கொற்றவை

பாலைநிலத் தெய்வமான கொற்றவை காட்டினில் உறைபவளாகவும்[35] மலைகளில் உறைபவளாகவும்[36] குறிக்கப்பட்டுள்ளாள். இவள் சூலத்தை உடையவள்;[37] சினம் மிக்கவள்,[38] பலியை விரும்பிப் பெறுபவள்;[39] வெற்றியினை வாய்க்கச் செய்பவள்,[40] அருள்மிக உடையவள்[41] என்பன போன்ற செய்திகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

### 3.2.1.5. இலக்குமி

திருமாலின் திருமார்பில் உறைபவள்[42] திருமகள். எனவே செல்வமும் வீரமும் மிக்க மன்னர்கள் மார்பிலும் திருமகள் உறைவதாகப்[43] பல பாடல்கள் கூறுகின்றன. திருமகளைத் திரு[44] என்றும், செய்யாள்[45] என்றும், மா[46] என்றும் அழைத்துள்ளனர். யானைகளுடன் வீற்றிருக்கும் 'கஜலெட்சுமி'[47]யின் உருவத்தை வழிபட்டுள்ளனர். வீடுகளின் நிலைகளிலும் மதிற் கதவுகளிலும் இவ் உருவம்[48] அமைக்கப்பட்டிருந்தது.

### 3.2.1.6. பலராமன்

வெள்ளை நிறத்தை[49] உடைய பலராமனைப் பலரும் போற்றி வழிபட்டுள்ளனர். இவன் ஒரு குழையினை[50] அணிந்தவன். கலப்பைப் படையும்[51] பனைக்கொடியும்[52] கொண்டவன். ஓரிரு இடங்களில் யானைக் கொடி[53] உடையவன் என்றும் காணப்படுகின்றது.

### 3.2.1.7. பிரமன்

நீலநிற உருவின் நெடியோன் கொப்பூழில் பிறந்தவன்[54] பிரமன் என்றும், பிரம்மனே படைப்புக் கடவுள்[55] என்றும் உணர்ந்து வழிபட்டுள்ளனர்.

### 3.2.1.8. இந்திரன்

ஆயிரம் வேள்விகள் செய்வது[56] இந்திரன் பதவியைப் பெற்றான். இவன் கவுதமன் சூள் மொழியால்[57] ஆயிரம் கண்களைப் பெற்றான். வச்சிரப் படையையும்[58] வெள்ளை யானையையும் உடையவன். இவனை வழிபடக் கோயில்[59] இருந்து; இந்திர விழாவும்[60] எடுத்தனர்.

### 3.2.1.9. வருணன்

நெய்தல் தெய்வமாகிய வருணன், அணங்கு[61] என்றும் எண்ணப்பட்டுள்ளான். சுறவின்கோடு நட்டு வருணனை வேண்டி வழிபட்டுள்ளனர்.[62]

### 3.2.1.10. மன்மதன்

திருமாலின் மகன் மன்மதன்.[63] இவன் ஐந்து மலரம்புகளை[64] வைத்திருப்பவன். சுறவின் கொடியினை[65] உடையவன் மன்மதன். மன்மதனுக்கு விழாவெடுக்கும் பழக்கம்[66] சங்ககாலத்தில் காணப்படுகின்றது.

## 3.3. பல்லவர் காலச் சிற்பங்கள் (கி.பி. 550-850)

கி.பி. நான்காம் நூற்றாண்டில் சிறபக் கலையினை வளர்த்தவர்கள் பல்லவ மன்னர்கள். அம் மன்னவர்களுள் மகேந்திரவர்மனே முதன் முதலாகச் சிற்பக் கலையினை வளர்த்தவன் என்பர். ஆனால் அவனுக்கு முன் ஆண்ட சிம்ம விஷ்ணு, அவன் தந்தை சிம்மவர்மன் ஆகிய மன்னர்கள் காலத்தில் செதுக்கப்பட்ட கற்சிலைகள் இப்பொழுது கிடைத்துள்ளன என்பார் டாக்டர் இரா.நாகசாமி.[67]

எனவே பல்லவர் காலச் சிற்பக்கலையினைக் கீழ்க் காணுமாறு சிறப்பு மிக்கவர்களின் கால வரிசையில் பகுத்துக் காண்பது பயனுள்ளதாகும்.

### 3.3.1. சிம்ம வர்மன் காலச் சிற்பக்கலை

3.3.2 சிம்ம விஷ்ணு காலச் சிற்பக்கலை

3.3.3 மகேந்திரன் காலச் சிற்பக்கலை

3.3.4 இராஜசிம்மன் காலச் சிற்பக்கலை

3.3.5. பிற பல்லவ மன்னர் காலச் சிற்பக்கலை

### 3.3.1. சிம்ம வர்மன் காலச் சிற்பக்கலை

சிம்ம வர்மன் காலச் சிற்பக்கலைக்குச் சான்றாகக் கோரையாறு முதலிய இடங்களில் சில சிற்பங்கள் கிடைத்துள்ளன. இவை பெரும்பாலும் நடுகற்களே. போரில் வீரமரணம் எய்திய வீரர்களுக்கு எடுக்கப்பட்ட சிலைகள் என்பதால், போர்க் கோலத்தில் நிற்கும் வீரர்கள் உருவத்தையே இந் நடுகற்களில் காணமுடிகின்றது. இச் சிறபங்கள் அதிக அழகுடையனவாகச் செதுக்கப்படவில்லை. இவ் வீரர்களின் காலடியில் 'மண்குப்பியும், கண்ணாடி போன்ற அமைப்பும் காணப்படுகின்றன.

சிம்மவர்மன் காலத்துத் தெய்வத் திருவுருவங்கள் கிடைக்காவிடினும், மகேந்திரனுக்கு முன்னரே கல்லைச் செதுக்கிச் சிலை அமைக்கும் அறிவுத்திறன் தமிழ் மக்களுக்குத் தெரிந்திருந்தது என்பதற்கு இந் நடுகற்கள் சான்றாகின்றன.

### 3.3.2. சிம்ம விஷ்ணு காலச் சிற்பக்கலை

சிம்ம விஷ்ணு காலச் சிற்பக்கலைக்குச் சான்றாக நரசிங்கநல்லூர் என்ற இடத்தில் ஒரு நடுகல் கிடைத்துள்ளது. அதில் எழில் மிகுந்த வீரன் ஒருவன் இடக்கரத்தில் கேடயத்தைத் தாங்கி, வலக்கரத்தில் வாளேந்தி வீசுவதாகச் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. மகேந்திரனது காலத்திற்கு முன்பே சிற்பத்திறன் மிக உன்னத நிலையை அடைந்து விட்டதற்கு இச் சிற்பமும், இது போன்ற பதினைந்து சிற்பங்களும் சான்று பகர்கின்றன.

காஞ்சிபுரம் தான்தோன்றீஸ்வரர் கோயில் அண்மைக் காலத்தில் கட்டப்பட்ட கோயில். எனினும் அதில் மகேந்திரன் காலத்திற்கும் முற்பட்ட பழமையான சிற்பங்கள் சுவரில் பதிக்கப்பட்டுள்ளன. பத்துச் சிற்பங்கள் இவ்வாறு சுவரில் பதிக்கப்பட்டுள்ளன. அவற்றில் பெரும்பாலானவை ஆடுகின்ற மகளிரின் உருவங்கள். ஆண்களும் பெண்களும் இணைந்து நடனமாடுவதாக அச் சிற்பங்கள் அமைந்துள்ளன. சிற்பக்கலையும் ஆடல்கலையும் எவ்வளவு உன்னத நிலையில் இருந்தன என்பதை நமக்கு இவை எடுத்தியம்புகின்றன. இச் சிற்பங்கள் நாகார்ஜுன கொண்டா மரபை நெருங்கியவை. 5ஆவது நூற்றாண்டின் இறுதி, 6ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தைச் சார்ந்தவை என்பார் டாக்டர் இரா.நாகசாமி.[68].

### 3.3.3. மகேந்திரன் காலச் சிற்பக்கலை

மகேந்திரன் பெரும் கலை ஆர்வலன், விசித்ரசித்தன், சேத்தாகாரி, சித்திரகாரப்புலி, லலிதாங்குரன் முதலிய அவன் பெற்ற பட்டப் பெயர்களெல்லாம் அவன் உள்ளக் கிடக்கையும் கலை ஆர்வத்தையும் வெளிக்காட்டுகின்றன.

மகேந்திரன் காலச் சிற்பக்கலைக்கு சான்றாகத் திருச்சிக் குடவரைக் கோயில், மண்டகப்பட்டுக் கோயில், மாமண்டூர்க் குடைவரைக் கோயில், வல்லம் குடைவரைக்கோயில், சீயமங்கலம் குடைவரைக்கோயில் ஆகியன விளங்குகின்றன.

#### 3.3.3.1. திருச்சிக் குடைவரைக் கோயில்

மகேந்திரன், மலையைக் குடைந்து குடைவரையைத் தோற்றுவித்து அதில் பல எழிலார்ந்த சிற்பங்களைத் தோற்றுவித்தான். அவ்வாறு அவன் தோற்றுவித்தக் குடைவரைக் கோயில் திருச்சிராப்பள்ளியில் உச்சிப் பிள்ளையார் கோயிலுக்குப் போகும் வழியில் உள்ளது. அக்கோயிலின் கருவறை பக்கவாட்டில் குடையப்பட்டுள்ளது. அதற்கு எதிரில் உள்ள சுவரில் பெரிய அளவில் கங்கைவார் சடைக்கரந்த அண்ணலின் உருவம் காணப்படுகிறது. மகேந்திரன் தோற்றுவித்த சிற்பங்களுளெல்லாம் தலையாயது இதுவே என்பர்.

குள்ளப் பூதத்தின் தலையிலே காலை இறுத்தி, இடக்கரத்தை இடையிலே சேர்ந்து வலக்கரத்தில் சீறும் பாம்பை ஏந்தி, பாய்ந்து வருகின்ற கங்கையைத் தனது ஒற்றைச் சடையால் நிறுத்தி இவை அனைத்திற்கும் அப்பால் நின்று அருள் பாலிப்பதாக அண்ணலின் சிற்பம் அமைந்துள்ளது.

இச்சிற்பத்தின் மேல் பகுதியில் இருமருங்கும் அமரர் கணம் பறந்தவாறே போற்றி வருகின்றனர். தவமுனிவர்கள் எல்லாம் இக்காட்சி கண்டு வணங்கி நிற்கின்றனர். சிவபெருமானின் காலடியில் இரு அடியார் போற்றிப் பரவுவதாகச் சிற்பம் காணப்படுகிறது.

### 3.3.3.2. மண்டகப்பட்டுக் கோயில்

மண்டகப்பட்டில் மகேந்திரன் தோற்றுவித்த கோயிலில் ஐந்து கோட்டங்கள் பின்புறச் சுவரில் உள்ளன. ஆனால் அவற்றில் சிற்பங்கள் இல்லை. ஆனால் குடைவரையின் புறத்தே இருமருங்கும் இரு துவாரபாலகர் சிலைகள் உள்ளன. ஒன்று கருடனது சிலை. மற்றது மகாகாளன் காலகாலனின் கடைக்காப்பு.

கருடன் இடத்தோளின் கீழே 'சுதை'யை அடக்கி, வலக்கையினால் அதைத் தாங்கி இடக்காலை மடித்து வலக்காலை நடுக்கின்றி ஊன்றிப் பார்க்கின்ற பார்வை, அவனுக்குப் பின்னர் காட்டப்பட்டுள்ள இறக்கை ஆகிய அனைத்தும் கண்டு இன்புறத்தக்கன. மகாகாளன் பெருமிதத்தோடு நிற்கும் காட்சியும் நன்கு சிலை வடிக்கப்பட்டுள்ளது.

### 3.3.3.3. மாமண்டூர்க் குடைவரைக் கோயில்

மாமண்டூரில் மகேந்திரன் தோற்றுவித்த குடைவரைக் கோயில்கள் மூன்று. அவற்றில் வாயிற்காவலர், தவமுனிவர்கள் ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன.

### 3.3.3.4. வல்லம் குடைவரைக் கோயில்

வல்லத்தில் மகேந்திரன் மூன்று குடைவரைக் கோயில்களைத் தோற்றுவித்துள்ளான். இக்குடைவரையின் இருபுறமும் கோட்டங்களில் சிற்பங்கள் உள்ளன. அவற்றில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை ஐங்கரனின் உருவமும், ஜேஷ்டா தேவியின் உருவமும்தான்.

ஐங்கரன் ஒரு காலை மடித்து, மறுகாலைக் கிடத்தித் தனது துதிக்கையை வலத்தே சுழற்றிப் பெருமிதத் தோற்றத்தோடு, அமர்ந்திருக்கின்றார். கி.பி.600இல் பிள்ளையார் உருவம் எவ்வளவு சிறப்பாக இருந்திருக்கிறது என்பதற்கு இச்சிற்பம் சான்று பகர்கின்றது. ஜேஷ்டையின் சிற்பம் சிதைந்து விட்டது.

### 3.3.3.5. சீயமங்கலம் குடைவரைக் கோயில்

சீயமங்கலம் குடைவரைக் கோயிலில் மகேந்திரன் தோற்று வித்த சிற்பங்கள் இரண்டு உள்ளன. ஒன்று ஆனந்தக் கூத்தனின் சிற்பம், மற்றொன்று அருகில் நிற்கும் அன்னையோடு கூடிய முக்கண்ணன் சிற்பம்.

இதில் ஆனந்தக் கூத்தன் சிற்பம் வரலாற்றில் இடம் பெற்றது. இடக் காலைத் தூக்கி நடராசர் சிலை போல் இங்கு செதுக்கப்பட்டுள்ளது. இதில் வலக்கரம் அபயம் அளித்துள்ளது இடக்கரத்தை நடராஜப் பெருமானின் உருவம் போல் உடலின் குறுக்கேயும் பக்கவாட்டிலும் வீசி ஆடுகின்ற உருவைக் காண்கின்றோம்.

மகேந்திரனுக்குப் பிறகு அவன் மகன் வாதாபிகொண்ட நரசிங்க போத்தரசன் மாமல்லன் என்று புகழ் பெற்றவன். தந்தை விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து செய்தான் என்றும், மாமல்லபுரத்துச் சிற்பங்கள் அவன் காலத்தவை என்றும் இதுகாறும் வரலாற்று ஆசிரியர் எழுதி வந்தனர். அவை மாமல்லனால் தோற்றுவிக்கப்பட்டனவல்ல; இரண்டாம் நரசிம்மவர்மன் என்று பெயர் பெற்ற இராஜசிம்மனால் தோற்றுவிக்கப்பட்டவை என்று டாக்டர் இரா.நாகசாமி தெளிவாக்கியுள்ளார்.[69]

### 3.3.4. இராஜசிம்மன் காலச் சிற்பக்கலை

இராஜசிம்மனுக்கு 'அத்யந்த காமன்' என்ற பட்டப் பெயர் உண்டு. இப்பெயர் அவன் கட்டிய கோயில்களிலெல்லாம் செதுக்கப்பட்டுள்ளது. இப் பெயர் மாமல்லபுரத்துக் கோயில்களில் பல இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. எனவே இதன் மூலமாக மாமல்லபுரத்திலுள்ள எல்லாக் கோயில்களையும் தோற்றுவித்தவன் இராஜசிம்மனே என அறிகின்றோம்.

இராஜசிம்மன் காலச் சிற்பக்கலையினை மாமல்லபுரத்திலும், அதன் அருகில் உள்ள சாளுவன் குப்பத்திலும், காஞ்சிபுரத்திலும் காண முடிகின்றது.

### 3.3.4.1. மாமல்லபுரச் சிற்பக்கலை

இராஜசிம்மனின், 'அத்யந்த காமன்' என்ற பட்டப் பெயருக்கு 'எல்லையில்லாத மன எழுச்சிகளை உடையவன்' என்று பொருள்.

மாமல்லபுரத்தில் உள்ள பத்து ஒற்றைக் கற்கோயில்களும் பத்து வகையானவை; புதுமையானவை. இவை, அவனது பட்டப் பெயர் காரணப் பெயராகவே அமைந்தது என்பதைப் பறை சாற்றுகின்றன.

மாமல்லபுரத்தில் உள்ள மகிஷாசுர மர்த்தினி, அரவணையில் துயிலும் அண்ணல், உலகளந்த உத்தமன், கொற்றவை, திருமகள், குன்றெடுத்த கண்ணன், அர்ஜுனன் தவம் ஆகிய பெரிய சிற்பங்கள் உலகப் புகழ்பெற்றவை.

### 3.3.4.2. காஞ்சிபுரச் சிற்பக்கலை

இராஜசிம்மன் காஞ்சிபுரத்தில் தோற்றுவித்த கோயில் இராஜசிம்மேச்சுரம் எனப்படும். கயிலயங்கிரியில் சிவபெருமான் புரிகின்ற விளையாடல்களை எல்லாம் விஞ்சும் வண்ணம் சிற்பங்களை அமைந்துள்ளான் இராஜசிம்மன்.

சங்காரத் தாண்டவம் ஆடுகின்ற சிவன், ஊடல் கொண்டு நிற்கும் தேவியை ஊடல் தவிர்த்த பிரான், பிச்சை புகும் வித்தகன், கங்காதர மூர்த்தி, முப்புரம் எரித்த முதல்வன், என்று சிவனது பல்வேறு தோற்றங்களில் சிற்பங்கள் காணப்படுகின்றன.

கொற்றவையின் பல்வேறு திருமேனிச் சிற்பங்களும் இங்கு உள்ளன. பைரவி, காத்யாயினி, கொற்றவை, உமையன்னை, சிவகாமி, ஆகிய சிற்பங்களும் நாமகள், மலர்மகள், அவள் உடன் பிறந்த மூத்த மகள் எனப் பிற பெண் தெய்வச் சிற்பங்களும் அங்கு செதுக்கப்பட்டுள்ளன.

பரிவார தெய்வங்களாகிய முருகன், ஐங்கரன், துர்க்கை, திருமால், அம்பிகை, ஜேஷ்டை, பைரவி, விஷ்ணு, பிரம்மா ஆகிய அனைத்து தெய்வங்களுடைய சிற்பங்களும் இங்கு உள்ளன.

பல்லவர் காலத்தில் தோன்றிய பெரும் கோயில் அனைத்திலும் இக்கோயிலே உயர்ந்தது என்று பாராட்டும் வகையில் சிற்பக்கலை செழித்தோங்கி வளர்ந்துள்ளது.

### 3.3.5. பிற பல்லவ மன்னர் காலச் சிற்பங்கள்

இராஜசிம்மனைத் தொடர்ந்து அவனது மனைவி ரங்கபதாகையும், மகன் மகேந்திரனும், இருகோயில்களைக் கட்டினர். மகேந்திரன் கட்டிய கோயிலில் உமையன்னையின் மடியிலே தவழ்கின்ற கந்தனையும், அண்ணலையும் சோமாஸ்கந்தர் உருவில் சிற்பமாக்கி வழிபட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

இராஜசிம்மனுக்குப் பிறகு நந்திவர்மன், நந்திவர்மன், தெள்ளாற்றெறிந்த நந்தி, நிருபருங்கன், கம்பவர்மன், அபராஜிதன் என்ற பல்லவ மன்னர்கள் ஏற்படுத்திய சிற்பங்களெல்லாம் மாமல்லபுரச் சிற்பங்களோடும் காஞ்சிக் கயிலாயநாதர் சிற்பங்களோடும் போட்டி போட முடியாமல் போய்விட்டன.

வைகுண்டப் பெருமாள் கோயில் என்னும் காஞ்சிப் பரமேஸ்வர விண்ணகரத்தில் பல்லவர் வரலாறு முழுவதும் தொடர்ச்சியாக சிற்பமாகச் செதுக்கப்பட்டிருப்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

காவிரிப்பாக்கம், திருத்தணி, தக்கோலம் போன்ற இடங்களில் பிற்காலப் பல்லவர்களின் சிற்பக்கலைப் படைப்புக்கள் இருக்கின்றன. எனினும் இராஜசிம்மன் காலத்திய சிறப்பினை அவை பெறவில்லை.

### 3.4. பாண்டியர்காலச் சிற்பங்கள் (கி.பி. 590-800)

கி.பி. ஆறாம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டில் சிற்பக் கலையினை வளர்த்தவர்கள் பாண்டியர்கள். பாண்டியர் காலச் சிற்பக் கலைக்குச் சான்றாக அமைவனவற்றைக் கீழ்க்காணுமாறு பகுத்துக் காணலாம்.

3.4.1. பிள்ளையார்ப்பட்டிச் சிற்பங்கள்
3.4.2. திருமெய்யம் சிற்பங்கள்
3.4.3. திருப்பரங்குன்றச் சிற்பங்கள்
3.4.4. வெட்டுவான் கோயில் சிற்பங்கள்

### 3.4.1. பிள்ளையார்ப்பட்டிச் சிற்பங்கள்

பிள்ளையார்ப்பட்டிக் குடைவரைக் கோயிலில் மூன்று சிற்பங்கள் உள்ளன.

1. துதிக்கையை வலமாக மடித்து, இரண்டே கைகளுடன் அமர்ந்துள்ள கற்பகப் பிள்ளையாரின் உருவம் உள்ளது. (நி.ப.எ.4).
2. இடைவரையில் வெறும் தூணாகவும் மேல் பகுதி மட்டும் உடலாகவும் லிங்கோத்பவர் உருவம் காணப்படுகிறது.
3. ஹரிஹரன் சிற்பம் ஒன்று உள்ளது. இது சிவனும் திருமாலும் சேர்ந்து காணப்படும் சிற்பம். அதனால் தலைமுடியில் ஒருபுறம் சடையும், மறுபுறம் கிரீடமும் உள்ளன.

இப்பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகர் கோயிலில் ஆறாம் நூற்றாண்டு வட்டெழுத்தில் அச்சிலைகளைச் செய்த 'எக்காட்டூர்கோன் பெருந்தச்சன்' எனும் சிற்பியின் கையெழுத்து காணப்படுகின்றது. எனவே, இது பல்லவருக்கும் முன்னதாக மலையைக் குடைந்து அமைக்கப்பட்ட கோயில் ஆகும்.

### 3.4.2. திருமெய்யம் சிற்பங்கள்

திருமெய்யத்தில் இரண்டு குடைவரைக் கோயில்கள் அடுத்தடுத்துக் குடைவிக்கப்பட்டுள்ளன. ஒன்று சிவன் கோயில், மற்றொன்று திருமால் கோயில். சிவன் கோயிலில் உள்ள லிங்கோத்பவர் சிற்பம் அழகு வாய்ந்தது. திருமால் கோயிலில் உள்ள பாம்பின் மீது துயிலுகின்ற பள்ளிகொண்ட பெருமாளின் சிற்பம் மிகவும் எழில் வாய்ந்தது. பள்ளிகொண்டுள்ள பெருமாளைச் சுற்றிலும் பாம்பு, மதுகைடபர், சந்திரன், சூரியன், தும்புரு, நாரதர், சிவகணம் ஆகியோருடைய சிற்பங்களும் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

### 3.4.3. திருப்பரங்குன்றச் சிற்பங்கள்

திருப்பரங்குன்றத்தில் திருமால், முருகன், கொற்றவை, கணபதி, சிவபெருமான் ஆகிய அனைத்துத் தெய்வங்களுக்கும் சிற்பங்கள் இருந்தன.

இதில் பெரும்பாலான சிலைகள் மீது சுதை பூசியதால், புதுப்பாணியில் பழமை மறைந்துள்ளது.

திருமால் கோயிலுக்கு அடுத்த சுவரில் உள்ள கருடனின் உருவமும், சிவன் கருவறைக்கு அருகில் உள்ள கங்காதரர் உருவமும், பக்கச் சுவரில் ஆடுகின்ற, அந்தி நடம் புரிகின்ற அண்ணலின் உருவமும் எழிலார்ந்த சிற்பங்களாக உள்ளன.

நடுப்பகுதியிலே சதுரநடம் ஆடுகின்ற பெருமானும், அவரின் வலப்புறத்தில் அமரர் கணங்களெல்லாம் காண, அன்னை சிவகாமி அமர்ந்து காணவாணன் குடமுழா இசைக்கத் தாய்மார் எழுவரும் உடன் ஆடுகின்ற சிற்பம் மிகவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

### 3.4.4. வெட்டுவான் கோயில் சிற்பங்கள்

கழுகுமலையில் உள்ள வெட்டுவான்கோயில் பாண்டியரின் குடைவரைக் கோயிற்பணிக்குச் சிறந்த சான்றாகும். பாம்பைப் பிடித்து அமர்ந்திருக்கின்ற பரமனின் சிற்பம் மிக எழில் வாய்ந்தது.

இக்கோயிலின் அருகில் சற்றுத் தள்ளி உயர் பாறையில் சமணப் பெரியார்களின் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. யஷி, வாகுபலி ஆகிய பல சிற்பங்களில் எழிலார்ந்த நங்கையர் உருவங்களும் உள்ளன.

இக்கோயில் 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்பார் வெங்கடசுப்பையர் அவர் இக்கோயிலே குடைவரைக் கோயிலுக்கும் சுற்றளிக் கோயிலுக்கும் இணைப்பு பாலமாக அமைந்தது என்பார்.[71]

### 3.5. அதியமான் காலச் சிற்பங்கள் (கி.பி.400-850)

தகடூர் அதியமான் நெடுமானஞ்சி போல் அவன் வழிவந்த அதியமான் சோமன் என்பவன் எட்டாம் நூற்றாண்டில் நாமக்கல்லில் தோற்றுவித்த இரண்டு குடைவரைக் கோயில்கள் குறிப்பிடத்தக்கன.

இரண்டு கோயில்களில் ஒன்று நரசிங்கப் பெருமானுக்கு உரியது. மற்றொன்று பள்ளிகொண்ட பெருமாளுக்கு உரியது.

நரசிங்கப் பெருமாள் கோயிலில் ஐந்து சிற்பங்கள் உள்ளன. அவை ஐந்தும் வரலாற்றுச் சிற்பங்களாக உள்ளன.

### 3.5.1. நரசிங்கப் பெருமாள் சிற்பம்

இது தமிழகத்திலுள்ள நரசிங்கப் பெருமாள் சிற்பங்கள் அனைத்திலும் கம்பீரமான தோற்றம் உடையது. மேலே சந்திரனும் சூரியனும் தோன்ற இருமருங்கும் நான்முகனும் சிவபெருமானும் போற்றுகின்றனர். அமரர் அனைவருக்கும் அருள்பாலித்துக் கையில் அபய முத்திரை காட்டுவதாகச் சிற்பம் அமைந்துள்ளது.

### 3.5.2. இரணிய வதச் சிற்பம்

இரணியனை மடியில் கிடத்தி அவன் கால்களும் கைகளும் தொய்ய, மார்பில் நகத்தினால் வகுக்கின்ற காட்சி சிறப்பாகச் சிலை வடிக்கப்பட்டுள்ளது.

### 3.5.3. ஆதிநாதர் சிற்பம்

ஆதிநாதராக ஐந்தலை அரவில் அமர்ந்திருக்கும் அண்ணலும், அவரது தோற்றமும் மிகப் பெருமிதமான சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

### 3.5.4. உலகளந்த உத்தமன் சிற்பம்

உலகளந்த உத்தமனின் சிற்பம் வேறு எங்கும் காணாத அளவிற்குப் பேரழகு வாய்ந்தது. மேலே அசுவமேதயாகம் புரிந்ததைக் குறிக்கும் யூபத்தூணும், அசுவமேதக் குதிரையும், கீழே மாவலியும், சுக்கிரனும் சுக்கிரனைத் தண்டிக்கும் கருடாழ்வாரும், இதன் ஒரு புறத்திலேயே வாமனனும் நீர் அட்டிக் கொடுக்கும் அசுரனும் உள்ளனர்.

### 3.5.5. பூமகளை ஏந்திய ஏனப்பிரான் சிற்பம்

ஆழ்கடலில் மூழ்கிய நிலமங்கையை வெளிக் கொணர்ந்த வராகப் பெருமாளின் சிற்பம் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. அவரைப் போற்றுகின்ற நான்கு வேதங்கள் சிற்பத்தில் காணப்படுகின்றன. அவர் கடலில் மூழ்கி வெளிக் கொணர்கிறார் என்பதைக் கூறும் வகையில் அவரது கணுக்காலுக்குக் கீழ் காட்டப்பெறவில்லை. நீரில் கால் இன்னும் இருப்பது போன்ற காட்சி கருத்தோடு அமைக்கப்பட்டுள்ளது.

### 3.6. சோழர்காலச் சிற்பங்கள் (கி.பி. 850-1270)

கி.பி. 850லிருந்து கி.பி. 1270 வரை தமிழகத்தை ஆண்ட சோழர்கள் சிற்பக்கலைக்குப் பெரும் தொண்டாற்றியுள்ளனர்.

சோழர் வளர்த்த சிற்பக்கலையினைக் கீழ்க்காணும் முறையில் பகுத்துக் காண்பது பயனுள்ளதாகும்.

3.6.1. விஜயாலயன் காலச் சிற்பக்கலை.
3.6.2. ஆதித்தன் காலச் சிற்பக்கலை.
3.6.3. இருக்குவேளிர் - பழுவேட்டரையர் காலச் சிற்பக்கலை
3.6.4. முதலாம் இராஜராஜன் காலச் சிற்பக்கலை.
3.6.5. முதலாம் இராஜேந்திரன் காலச் சிற்பக்கலை.
3.6.6. முதலாம் குலோத்துங்கன் காலச் சிற்பக்கலை.
3.6.7. இரண்டாம் இராஜராஜன் காலச் சிற்பக்கலை.
3.6.8. மூன்றாம் குலோத்துங்கன் காலச் சிற்பக்கலை.

### 3.6.1. விஜயாலயன் காலச் சிற்பக்கலை

விஜயாலயன் தஞ்சையைக் கைப்பற்றியதும் அவன் செய்த பெரும்பணி நிசும்பசூதனி தேவியைப் பிரதிட்டை செய்ததேயாகும். நிசும்பசூதனிதான் அவனுக்கு வெற்றி அளித்த தெய்வம். இப்பொழுது அதனை வடபத்ரகாளி என வழங்குகின்றனர்.

ஆறு அடி உயரத்திற்கும் மேலுள்ள இந்த அரிய சிலையில் தேவி அமர்ந்த நிலையில் காணப்படுகின்றாள். தலையில் கேசம் தீச்சுடர்போல் மேல் எழுகிறது. இதனை அக்னி கேசம் அல்லது சுடர்முடி என்பர். எட்டுக் கரங்களில் சூலம், வில், மணி, சுத்தி, பாசம், கேடயம், கபாலம் ஆகியன ஏந்தியுள்ளாள். ஓர் இடக்கரம், காலின் கீழே கிடக்கும் அசுரரைச் சுட்டுகிறது. அவளது வலக்கால், துண்டிக்கப்பட்ட ஒரு தலையின் மீது ஊன்றியுள்ளது. அவளது இடக்காலை அசைத்துக் கிடத்தியுள்ளாள். அவ்விருக்கையின் கீழ் நான்கு அசுரர்கள் சிக்கித் தவிக்கிறார்கள். அசுரப் பூச்சிகளை அழிக்க வேண்டும் என்னும் சீற்றம் அவள் முகத்தில் காணப்படுகிறது. வலக் காதில் பிரேத குண்டலம் உள்ளது. இடக் காதில் பெரிய குழை உள்ள. சதை வற்றிய எலும்பு உடல். ஆயினும் திண்மையான நீண்டு தொங்கும் மார்பகங்கள். அதைச் சுற்றிலும் பாம்பு கச்சாகச் சுழல்கிறது. மண்டையோடுகள் பூணூலாக அவள் உடலில் காணப்படுகின்றன. மயிர்க் கூச்செறியும் அமைப்பில் பேராற்றல்களை அடக்கி ஆட்கொண்ட தேவியாகவும் வெற்றியைத் தேடித் தருபவளாகவும் இவள் உருவம் அமைந்துள்ளது. விஜயாலயன் அத் தேவியின் அருளிலே வென்று, நானிலத்தை ஆண்டான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடும், கன்னியாகுமரிக் கல்வெட்டும் கூறுகின்றன. அவ்வெற்றிச் சிலையின் சிற்பமே சோழர் சிற்பக் கலையின் தொடக்கமாக அமைந்துள்ளது.

### 3.6.2. ஆதித்தன் காலச் சிற்பக்கலை

விஜயாலயனின் மகன் ஆதித்தன் தன் தந்தையைப் போலவே பெரும் வெற்றி வீரனாகத் திகழ்ந்ததோடு காவிரியின் இருமருங்கும் கற்றைச் சடைமுடிக் கடவுளுக்கு ஏராளமான கற்கோயில்களை எடுத்தான்.

சோழர்கள் சிற்பத்திறன் மிக உன்னத நிலையை அடைந்தது ஆதித்தன் காலத்தில்தான். அவன் காலச் சிற்பங்களுள் கும்பகோணத்திலுள்ள கீழ்க்கோட்டம் என்னும் நாகேசுவரர் கோயிலில் உள்ள இரு பெண்களின் சிற்பங்கள் தலையாயவை.

ஸ்ரீநிவாச நல்லூரிலுள்ள குரங்கநாதர் கோயிலில் உள்ள இரண்டு பெண்களின் சிற்பமும், ஓர் அரசனின் சிற்பமும், தட்சிணாமூர்த்தி சிற்பமும் மிக அழகானவை.

ஆதித்தன் காலக் கோயில்களின் அதிட்டான வரிகளில் சிறு அளவில் தொடர்ச்சியாக இராமாயணக் கதைகளும், சிவபுராணக் கதைகளும் இடம் பெற்றுள்ளன.

### 3.6.3. இருக்குவேளிர்-பழுவேட்டரையர் காலச் சிற்பக்கலை

சோழ அரசுக்கு உற்ற நல்ல துணையாக இருந்தவர்கள் இருக்குவேளிரும் பழுவேட்டரையரும்.

இருக்குவேளிர் கொடும்பாளூரில் மிக அழகிய கோயில்களை ஏற்படுத்தினர். அவற்றில் மூவர் கோயில் மிக எழில் வாய்ந்தது. அவற்றில் உள்ள அர்த்தநாரி சிலை, திரிபுராந்தகர் சிலை, சதுர தாண்டவம் ஆடுகின்ற பெருமானின் சிலை ஆகியன குறிப்பிடத்தக்கன.

பழுவேட்டரையர் அருணாசலேஸ்வரர் கோயிலில் இரண்டு கோயில்களைக் கட்டியுள்ளனர். அவற்றில் உள்ள நந்தியின் சிற்பம் மிகச் சிறப்பு மிக்கது. இக்கோயிலில் உள்ள சிற்பங்களும் மண்டபத்தைத் தாங்கி நிற்கும் தூண்களும் மிகவும் வனப்புடையவை.

### 3.6.4. முதலாம் இராஜராஜன் காலச் சிற்பக்கலை

முதலாம் இராஜராஜன் கோயிலில் ஏராளமான சிற்பங்கள் உள்ளன. 12 அடிக்கும் மேல் உயரமுள்ள வாயிற்காவல் சிலைகள் உண்டு. விமானத்தில் ஏராளமான கோட்டங்கள் இருக்கின்றன. அவை அனைத்திலும் சிற்பங்கள் இருக்கின்றன. குறிப்பாக மேல் கோட்டங்கள் அனைத்திலும் முப்புரம் எரித்த சிவனின் உருவங்கள் மீண்டும் மீண்டும் வைக்கப்பட்டுள்ளன. அப்படியிருந்தும் இவன் தோற்றுவித்த சிலைகளின் அழகு எல்லாம் கட்டடத்தின் பெருமையிலே இணைந்து மறைந்து தெரியாது நிற்கின்றன.

பல்லவர்களின் கட்டடங்களைக் காணும்போது அவை சிற்பமாகவே கண்ணில் படுகின்றன. சோழர்களின் சிற்பங்களைக் காணும்போது, அவையும் கட்டடப் பகுதியாகவே காணப்படுகின்றன. பல்லவர்களைக் கைதேர்ந்த சிற்பிகள் என்றால், சோழர்களைக் கட்டடக்கலை வல்லவர்கள் என்று கூறலாம் என்பார் டாக்டர் இரா. நாகசாமி.

### 3.6.5. முதலாம் இராஜேந்திரன் காலச் சிற்பக்கலை

முதலாம் இராஜேந்திரன் எடுத்த கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள சிற்பங்கள் பல எழில் வாய்ந்தவை. ஆடும் ஐங்கரன், உமையொரு பாகன், ஹரிஹரன் ஆகியன சிறப்புடையன. அக்கோயிலில் உள்ள சிற்பங்கள் அனைத்திலும் மூன்று சிற்பங்கள் மிகப் பெரும் சிறப்பு வாய்ந்தவை.

1. அம்மை அப்பனாக அமர்ந்த சிவபெருமான், அடியான் சண்டிக்கு முடியிலே மலர்சூட்டும் 'சண்டேஸ அனுக்ரஹமூர்த்தி' சிற்பம்.

2. பத்மாசனமிட்டு வெள்ளைத் தாமரை மீது அமர்ந்திருக்கும் கலைமகள் சிற்பம்.

3. காலைத் தூக்கி ஆடவல்ல பெருமானின் அற்புதத் திருக்கோலம்.

### 3.6.6. முதலாம் குலோத்துங்கன் காலச் சிற்பக்கலை

குலோத்துங்கன் தில்லையம்பலத்தில் நான்கு திசைகளிலும் பெரும் கோபுரங்களை எடுத்தான். அக்கோபுரங்களின் அடிப்பகுதியில் பிற்காலச் சோழர் கலைக்கு எடுத்துக்காட்டாகத் தெய்வத் திருவுருவங்கள் பல திகழ்கின்றன.

விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன் ஆகியோர் காலங்களில் இவை சிறப்பும் பொலிவும் பெற்றன.

### 3.6.7. இரண்டாம் இராஜராஜன் காலச் சிற்பக்கலை

இராஜராஜபுரம் என்னும் தாராசுரத்தில் இரண்டாம் இராஜராஜன் காலச் சிற்பக்கலையினைக் காணமுடிகின்றது. அங்குள்ள நுணுக்கமான வேலைப்பாடுடைய தூண்கள் கோசலர்களுடைய கலைத்திறனை நினைவூட்டுகின்றன.

இங்கிருந்த திரிபுராந்தகர் சிலையும், யானை உருவில் வந்த அரக்கனை அழித்த கஜசம்ஹாரமூர்த்தி சிலையும், தாருகாவனத்துப் பெண்களை மயக்கும் வண்ணம் இசைத்துச் செல்லும் கங்காளதேவன் சிலையும் இப்பொழுது தஞ்சைக் கலைக்கூடத்தே உள்ள எழில்மிக்க சிலைகளாகும்.

அன்னை பராசக்தி மகாமாயையாக நிற்கும் சிற்பமும், மோகினி சிற்பமும் மிகச் சிறப்பு வாய்ந்த சிற்பங்களாகும்.

### 3.6.8. மூன்றாம் குலோத்துங்கன் காலச் சிற்பக்கலை

இவன், கும்பகோணத்திற்கு அருகில் திரிபுவனம் எனப்படும் ஊரில் 'திரிபுவன வீரேஸ்வரம்' என்னும் கோயிலைக் கட்டினான். அங்கு பல எழிலார்ந்த சிற்பங்கள் இருந்து மறைந்துவிட்டன. ஆனால் இரண்டு கொடிப் பெண்களின் சிற்பங்கள் மிக அற்புதமாக உள்ளன. பெரும்பாலும் இச்சிற்பங்களில் அணிகலன்கள் அதிகம் அலங்கரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

## 3.7. பிற்காலப் பாண்டியர் காலச் சிற்பங்கள் (கி.பி. 946-1350)

பிற்காலப் பாண்டியர்கள் கற்களை அடுக்கிக் கட்டும் . கற்றளிக் கோயில்களை அமைத்தனர்.

அவர்கள் புதிய கோயில்களைக் கட்டுவதைக் காட்டிலும், பழைய கோயில்களைப் புதுப்பிப்பதிலும், மூலத்தான விமானங்களுக்குப் பதிலாகக் கோயிலின் நாற்றிசையிலும் உள்ள வாயில்களின் மேல் பிரமாண்டமான கோபுரங்களைக் கட்டுவதிலும் கவனம் செலுத்தினர் என்பார் டாக்டர் தி.முருகரத்தனம்.[72]

பல சிறு சுற்றாலயங்கள், கொடுங்கைகள், ஒற்றைக் கற்றூண்கள் பாண்டியர் காலச் சிற்பக்கலையின் தனித்தன்மைகளாயின என்பார் ஜே.எம். சோமசுந்தரம்.[73]

பிற்காலப் பாண்டியர் காலச் சிற்பங்களைக் கீழ்க்காணுமாறு பகுத்துக் காணலாம்.

3.7.1. வீரபாண்டியன் காலச் சிற்பக்கலை

3.7.2. சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலச் சிற்பக்கலை

## 3.7.1. வீரபாண்டியன் காலச் சிற்பக்கலை

கி.பி. 946இல் பாண்டிய நாட்டை ஆண்டவன் வீரபாண்டியன். இவன் சுந்தரசோழன் ஆதித்திய இரண்டாம் கரிகாலன் காலத்தைச் சாரந்தவன். இவன் கீழமாத்தூரில் ஒரு கற்றளிக் கோயிலைக் கட்டியுள்ளான். மதுரையிலிருந்து வடமேற்கே எட்டுக்கல் தொலைவில் இக்கீழ மாத்தூர் உள்ளது. ஸ்ரீகாந்தீஸ்வரம் என்பது அக்கோயிலின் பெயர். திருமாத்தூரில் உள்ள இறைவனுக்காக இக்கோயில் கட்டப்பட்டதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.[74]

அங்குள்ள மிக அழகிய சிற்பங்களாகத் துவாரபாலகர், தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பைரவர், சூரியன் சிற்பங்களைக் ° ø[illegible] è[illegible] [illegible]£ó¢ì £è[illegible] ó¢® .«îõ ° ë [illegible]ó¤[75]

## 3.7.2. சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலச் சிற்பக்கலை

சடையவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி. 1251இல் அரியணை யேறினான். இவன் பேரரசு, குமரியிலிருந்து நெல்லூர் வரை பரவியிருந்தது. இவன், 'எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தர பாண்டியன்' என்று போற்றப்பட்டான்.

இவன் பாண்டியர் கலையினைத் தனிச்சிறப்புடன் பாண்டிய நாட்டில் வளர்த்தான். சோழ பல்லவ நாடுகளில் உள்ள கோயில்களுக்கும் தொண்டு செய்துள்ளான். இவன் திருவரங்கம், சிதம்பரம், காஞ்சி ஆகிய ஊர்களில் திருப்பணி செய்துள்ளான்.

### 3.7.2.1. திருவரங்கத்தில் செய்த திருப்பணி

திருவரங்கப் பெருமாளின் மூலத்தானத்தின் கூரைக்கும் திருச்சுற்று மாளிகைக்கும் பொன்வேய்ந்தான். திருவரங்கப் பெருமானுக்கு மரகதமாலை, நவரத்தினக் கற்கள் இழைக்கப்பட்ட பொற்கிரீடம், முத்து மேற்கட்டி, பொன்னால் வார்க்கப்பட்ட அரங்கத்தம்மான் சிலை, ஆதிசேடன் சிலை, கருடன் சிலை ஆகியவற்றையும் பொன் தோரணம், பொற்றேர், பொற் சிங்காதனம் முதலியவற்றையும் வழங்கினான். நரசிம்ம மூர்த்திக்கும் விஷ்வச் சேனருக்கும் சிறு கோயில்களைத் தோற்றுவித்தான். இக்கொடைகளின் விவரத்தை இம் மன்னனுடைய திருவரங்கக் கல்வெட்டு விரிவாகக் கூறுகிறது.

### 3.7.2.2. சிதம்பரத்தில் செய்த சிற்பப் பணி

சிதம்பரம் நடராசர் கோயிலின் கீழைக் கோபுரம் சுந்தர பாண்டியனால் கட்டப்பட்டது என்பார் துப்ராய் (G.J. Dubreuil). அவர் கருத்தையே பின்பற்றி 'இந்திய கட்டிடக்கலை' என்ற நூலை வெளியிட்ட பெர்சி பிரவுன் (Percy Brown) என்பாரும் எழுதியுள்ளார். கீழைக் கோபுரத்தில் காணப்படும் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தியும் கயல் மீன் சின்னமும் அதற்கு ஆதாரங்கள் எனத் துப்ராய் கூறுவார். ஆனால் அவர் கூற்றை வன்மையாக எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் மறுத்துள்ளார். [76]

சடையவர்மன் சுந்தர பாண்டியன் பொன்னும் முத்து செரிந்து துலாபாரம் செய்து அப்பொருள்களைக் கொண்டு தில்லை மன்றத்தைப் பொன் வேய்ந்ததாகக் கீழைக் கோபுர மெய்க்கீர்த்தி கூறுகிறது. இக்கல்வெட்டு கீழைக் கோபுரத்தில் பொறிக்கப்பட்டிருப்பதனாலேயே இக்கோபுரத்தை இம்மன்னன் கட்டினான் என்று முடிவு செய்வது ஆதாரமற்றதாகும். பழைய விமானத்திலோ, திருச்சுற்று மாளிகையிலோ கோபுர வாயில்களிலோ பிற்கால மன்னர்கள் தம் மெய்க் கீர்த்திகளையோ, தானங்களையோ விவரிக்கும் கல்வெட்டுக்களைப் பொறிக்கும் முறை தென்னாட்டின் பண்டைய மரபாகும். எனவே கல்வெட்டுக்களை மட்டும் கொண்டு ஒரு கோயில் இன்னாரால் கட்டப்பட்டது என்று வரையறுத்தல் இயலாது. விக்கிரமசோழன் (கி.பி.1118-1135) மெய்க்கீர்த்தி, அவன்தன் குறுநில மன்னர்கள் சுமந்து கொணர்ந்த திறையாகச் சொரிந்த செம்பொற் குவையால் தம் குலநாயகன் தாண்டவம் பயிலும் செம்பொன அம்பலமும், சூழ்திரு மாளிகையும், கோபுரவாசல், கூட

சாலைகளும், பலிபீடமும் செம்பொன் வேய்ந்தான். அதனால் இமையவர் களிக்கவே இருநிலம் தழைத்தது என்று குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டுச் சான்றும், ஒட்டக்கூத்தரின் குலோத்துங்க சோழன் உலா எனும் இலக்கியச் சான்றும் தந்து, தில்லைக் கோபுரங்கள் 12ஆம் நூற்றாண்டில் பிற்காலச் சோழர்களால் எடுக்கப்பட்டது என்பதை எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் நிறுவுகிறார்.

கும்ப பஞ்சரம், கூடு, போதிகை முதலிய பாண்டியர் கலைப்பாணியின் அம்சங்களையும் அவர் சோழர் கலைப்பாணியின் காலப்போக்கில் விரிவடைந்த பகுதிகள் என்றே கூறுகிறார். [77]

### 3.7.2.3. காட்டுமன்னார்குடியில் செய்த சிற்பப்பணி

காட்டுமன்னார்குடி என்ற ஊர், முதலாம் பராந்தகச் சோழனால் நிர்மாணிக்கப்பட்ட ஊராகும். சடையவர்மன் சுந்தரபாண்டியன் இவ்வூருக்கு வீர நாராயண சதுர்வேதி மங்கலம் என்று பெயரிட்டு அதன் அருகே வீர நாராயண ஏரியை அமைத்து, அவ்வூரில் விஷ்ணு கோயிலும், சிவன் கோயிலும் எடுப்பித்தான். அச்சிவன் கோயில் தற்பொழுது உடையார்குடி எனும் பகுதியில் உள்ளது.

காட்டுமன்னார்குடியில் பராந்தகன் அமைத்த விஷ்ணு ஆலயத்தைச் சடையவர்மன் சுந்தரபாண்டியன் புதுப்பித்தான். பாண்டிய நாட்டு எல்லைக்கு அப்பாற்பட்ட இடத்தில் இப்பாண்டிய மன்னனால் கட்டப்பட்ட கோயில் இஃது ஒன்றே.

### 3.7.3. பிற பாண்டிய மன்னர் காலச் சிற்பக்கலை

சடையவர்மன் சுந்தரபாண்டியனைத் தொடர்ந்து பல பாண்டிய மன்னர்கள் சிற்பப்பணி புரிந்துள்ளனர்.

அவர்கள் கோயில்களுக்குக் கோபுரம் கட்டுவதிலும் மண்டபம் கட்டுவதிலுமே அதிக கவனம் செலுத்தியுள்ளனர். புராணங்களை விளக்கும் சுதைச் சிற்பங்கள், சிற்பக் கலைக் கூடங்கள், ஆகியனவற்றை அமைத்தனர். திருப்புத்தூர், திருக்கோட்டியூர், பிரான்மலை, ஆவுடையார்கோயில் ஆகிய ஊர்களில் பாண்டிய மன்னர் வளர்த்த சிற்பக்கலையினைக் காணமுடிகின்றது.

ஆவுடையார் கோயிலில் சிவபெருமான் குதிரைச் சேவகனாக வந்து பாண்டிய மன்னனிடம் விருதுகள் பெறும் சிற்பம் மிக அழகியதாகும்.

## 3.8. விஜய நகர காலச் சிற்பங்கள் (கி.பி. 1365-1529)

விஜயநகர மன்னர்கள் தங்கள் ஆட்சியைத் தமிழகத்தில் நிறுவுவதற்கு முன்னர் அப்பகுதிகளில் போசளர்கள், காகதீயர்கள் என்ற மன்னர்களுடைய ஆட்சியும் அவர்கள் ஆதரித்த கலையும் இருந்தன. அவற்றின் அடிச்சுவட்டில் வந்த விஜயநகர அரசர்கள் கலையில் போசளர் கலைச் சாயலும் காகதீயர் கலைப்பண்பும் இணைந்துள்ளதைக் காணலாம்.

விஜயநகர காலச் சிற்பங்களைக் கீழ்க்காணுமாறு பகுத்துக் காணலாம்.

3.8.1. குமாரகம்பணன் காலச் சிற்பக்கலை

3.8.2. கிருஷ்ணதேவராயர் காலச் சிற்பக்கலை

### 3.8.1. குமாரகம்பணன் காலச் சிற்பக்கலை

குமாரகம்பணன் கி.பி.1365இல் சம்புவராயர்களைத் தோற்கடித்துக் காஞ்சியைக் கைப்பற்றினான். அவன் மதுரை வரை வெற்றி கண்டான். இவனது ஆட்சிக்கு முன்னர் மதுரைக் கோயில் சுமார் ஐம்பது அறுபது ஆண்டுகள் வழிபாடின்றிப் பூட்டி வைக்கப்பட்டிருந்தது. குமாரகம்பணன் இக்கோயில் வழிபாட்டிற்கு வகை செய்தான். தமிழகக் கலை வல்லுநர்களைப் போற்றிச் சிலரைத் தன்னோடு தன் நாட்டிற்கு அழைத்துச் சென்று சிற்பங்களைச் செதுக்கச் செய்தான். இதனாலேயே விஜயநகரத் தலைநகரமாகிய ஹம்பியில் உள்ள கோயில் மண்டபங்களில் தமிழ் எழுத்தக்களில் எண்கள் காணப்படுகின்றன.

குமாரகம்பணனைத் தொடர்ந்து ஹரிஹரன், புக்கன், தேவராயன் முதலிய விஜயநகர அரசர்கள் ஏராளமான நிலங்களையும் பொருள்களையும் கொடுத்திருந்த போதிலும் ஒரு பெரும் கலைப்பாணி, கட்டடப்பாணி, கிருஷ்ணதேவராயன் காலத்திருந்துதான் தோன்றியது.

### 3.8.2. கிருஷ்ண தேவராயர் காலச் சிற்பக்கலை

கிருஷ்ணதேவராயர். கோயில்களில் அழகிய கல்யாண மண்டபங்களையும், அம்மண்டபத் தூண்களில் சிற்பங்களையும் தோற்றுவித்தார்.

கோபுரங்கள் வானளாவ எழுப்பப்பட்டன. திருச்சுற்றுப் பிரகாரங்கள் பல அமைக்கப்பட்டன.

16ஆம் நூற்றாண்டு முழுவதும் கிருஷ்ணதேவராயன் தோற்றுவித்த ஒரு பெரும் இயக்கம் அவருக்குப் பின்வந்த அச்சுதராயன், சதாசிவராயன் ஆகியவர்களால் பின்பற்றப்பட்டன.

திருவண்ணாமலையில் மிக உயர்ந்த கோபுரத்தை எழுப்பினார். காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் தெற்கு கோபுரமும், அருளாளப் பெருமாளாகிய வரதராஜப் பெருமாள் கோயில் உயர் கோபுரமும், கிருஷ்ணதேவராயா் எழுப்பியவை. தில்லையின் வடக்குக் கோபுரத்தைப் புதுப்பித்துத் திருவண்ணாமலையில் ஆயிரக்கால மண்டபம் ஒன்றை இவர் நிறுவினார்.

கிருஷ்ண தேவராயர் திருமால் வழிபாட்டில் மிகுந்த ஈடுபாட்டோடு தனது தலைநகரில் கோதைக்கு ஒரு கோயில் எடுத்திருக்கிறார். இராமானுஜருக்கும், ஆழ்வார்களுக்கும் ஹம்பியில் கோயில்களைக் கட்டியுள்ளார்.

## 3.9. நாயக்கர் காலச் சிற்பங்கள் (கி.பி. 1530-1689)

16ஆம் நூற்றாண்டின் மத்தியில் விஜயநகர அரசர்களின் பிரதிநிதிகளாகச் செஞ்சி, தஞ்சை, மதுரை ஆகிய மூன்று இடங்களிலும் நாயக்கர்கள் அமர்த்தப்பட்டனர். இவர்கள் காலப்போக்கில் மூன்று கிளைகளாகப் பிரிந்து செஞ்சி நாயக்கர் கலைக்கும், தஞ்சை நாயக்கர் கலைக்கும், மதுரை நாயக்கர் கலைக்கும் வித்திட்டனர்.

17ஆம் நூற்றாண்டில் தோன்றிய கட்டடமும் கலையும் நாயக்கர் கலை என்றே கூறுவர். இவ்வாறு புகழ்பெற்ற கலைச் செல்வங்கள் திருவண்ணாமலை,காஞ்சிபுரம், வேலூர், விரிஞ்சிபுரம், சிதம்பரம், ஸ்ரீரங்கம், மதுரை ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

நாயக்கர்கால சிற்பக்கலையினைக் கீழ்க்காணுமாறு பகுத்துக் காணலாம்.

### 3.9.1. விஸ்வநாத நாயக்கர் காலச் சிற்பக்கலை

விஸ்வநாத நாயக்கர் மதுரைச் சொக்கநாதருக்கு ஒரு கோயில் எடுக்க விழைந்தார். அந்தக் கோயில் முழுவதுமே ஒரு சிற்பம் போல அமைத்தார். எண்திசை யானைகள் தாங்கி நின்ற மண்டபத்தையே விமானமாக அமைத்தார். இவரே அங்கயற்கண்ணி ஆலயத்தையும் தோற்றுவித்தார். இக்கோயில் கி.பி.1530லிருந்து 1550க்குள்ளாக எடுக்கப்பட்டது. அதே காலத்தில் மதுரைக்கூடல் அழகர் கோயிலும் அமைக்கப்பட்டது.

### 3.9.2. வீரப்ப நாயக்கர் காலச் சிற்பக்கலை

விஸ்வநாத நாயக்கரின் பெயரன் வீரப்ப நாயக்கர் மதுரையில் ஆயிரக்கால் மண்டபத்தையும் சொக்கநாதர் கோயில் மண்டபத்தையும் எழுப்பியுள்ளார். இம்மண்டபங்களில் 7 அடிக்கு மேலான மிகப்பெரிய சிற்பங்கள் தூணோடு இணைந்து செதுக்கப்பட்டுள்ளன.

ஆயிரக்கால் மண்டபதின் புறத்தே அமைந்துள்ள காலாந்தகர், திரிபுர சம்ஹாரமூர்த்தி, குறவன்.குறத்தி, கண்ணப்பனுக்கு அருள்பாலித்த அண்ணல் ஆகிய உருவங்கள் குறிப்பிடத்தக்கன.

ஆயிரக்கால் மண்டபத்தே உள்ள யாழ் ஏந்தி இணைக்கும் பாணன் மகள் உருவமும், காமன் பேடி உருவில் சென்றதும் அர்ச்சுனன் பெண்உருவில் சென்றதுமான பாரதக் கதைகளும் இங்கு அதிகம் இடம்பெற்றுள்ளன.

அதேபோல் பிட்சாடனர், மோகினி ஆகிய சிற்பங்கள்சற்று அதிகம் காம உணர்ச்சியை வெளிப்படுத்தும் வகையில் படைக்கப்பட்டுள்ளன. காமத்துப்பால், நாயக்கர் தூண்களில் சற்று அதிகமாகவே காணப்படுகின்றது என்பார் டாக்டர் இரா.நாகசாமி.

சுந்தரேசப் பெருமானின் ஆலயத்து முன்னிலையில் நான்கு பெரும் சிற்பங்கள் உள்ளன. அவற்றில் இரண்டு வீரபத்திரர் உருவங்கள் மூன்றாவது ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியின் உருவம். நான்காவது காளியின் உருவம்.

இதுபோன்ற மிகப்பெரிய தூண் சிற்பங்கள் திருநெல்வேலி, கிருஷ்ணாபுரம், குற்றாலம், ஸ்ரீவில்லிபுத்தூர், சுசீந்திரம், தென்காசி அழகர் கோயில், தாடிக்கொம்பு, தாரமங்கலம், குடுமியான்மலை ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

## 3.9.3. திருமலை நாயக்கர் காலச் சிற்பக்கலை

திருமலை நாயக்கரே, வீரப்ப நாயக்கருக்குப் பிறகு மதுரையில் பெரும் சிற்பப்பணி புரிந்தவர் ஆவார். அவர் தோற்றுவித்த புதுமண்டபத்தில் உள்ள சிற்பங்களே இதற்கு மிகச் சிறந்த சான்றாகும்.

வசந்த விழாவிற்காக அவர் எடுத்த மண்டபத்தில், கருத்துச் செறிவோடு மூன்றுவகைச் சிற்பங்களை அமைத்துள்ளார்.

திருவிளையாடற் புராணக்கதைச் சிற்பங்களைக் கிழக்குப் பக்கத்தில் செதுக்கியுள்ளார். பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்தது; புலிக்குட்டிகுப் பால் கொடுத்தது; தடாதகைப் பிராட்டியோடு சண்டை போட்டது போன்ற சிற்பங்கள் கிழக்குப் பகுதியில் உள்ளன.

சிவபுராணக் காட்சிகளை மேற்குப் பக்கம் செதுக்கியுள்ளார். இந்திரன் பூஜித்தது, ஊர்த்துவ தாண்டவம், காளி,கல்யாணத் திருக்கோலம் திருபுராந்தகர், இராவண அனுக்கிரஹமூர்த்தி முதலிய சிற்பங்கள் இப்பகுதியில் உள்ளன.

மண்டபத்தின் நடுப்பகுதியில் மதுரையை ஆண்ட நாயக்கர் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இதல் விசுவநாத நாயக்கர் தொடங்கித் திருமலை நாயக்கர் வரையில் ஆண்ட அனைத்து நாயக்கர்களின் உருவங்களும் உள்ளதாக வழிவழியாகக் கூறுகின்றனர். இதற்கு ஆதாரம் ஏதும் இல்லை. எனினும் திருமலை நாயக்கர், அவர் மனைவி, தம்பி மற்றும் அவர் காலத்தில் வாழ்ந்த பிரதானிகளின் வரிசையாக அது இருக்கும் எனக் கருதுகிறார் டாக்டர் இரா.நாகசாமி.

புது மண்டபத் தூண்களில் கிழக்கிலும் மேற்கிலும் வரிசையாகக் குதிரைமீது அமர்ந்து சவாரி வருகின்ற நாயக்கர் உருவமும் பிரதாணிகளின் உருவமும் காணப்படுகின்றன. திருமலை நாயக்கர் கம்பீரமான குதிரையின் மீது அமர்ந்து, கையிலே வேலேந்திப் பாய்ந்து வருவதுபோல் உள்ள சிற்பம் மிகச் சிறந்ததாகும்.

திருமலை நாயக்கர் சென்று வழிபட்ட கோயில்களிலெல்லாம் தன்னுடைய உருவச் சிலையை கல்லிலே வடித்து வைத்துள்ளார். அஞ்சலி ஹஸ்த முத்திரையில் சதாசேவை நிலையில் அமைந்துள்ள அவர் உருவம் அழகர்கோயில், அங்கயற்கண்ணி அம்மை கோயில், வில்லிபுத்தூர்க் கோயில், திருவரங்கம், திருப்பரங்குன்றம் ஆகிய இடங்களில் காணப்படுகிறது.

திருமலை நாயக்கருக்குப் பிறகு மதுரை நாயக்கர் சிற்பக்கலை இருந்தது; ஆனால் சிறக்கவில்லை. மங்கம்மாள் காலத்திய சிற்பங்கள் இருக்கின்றன. திருப்பரங்குன்றிலே அவற்றைப் பார்க்கலாம். ஆனால் அவற்றில் உயிரில்லை, உணர்ச்சியில்லை என்பார் டாக்டர் இரா.நாகசாமி.[78]

## அடிக்குறிப்புகள்

1. ஜே.எம் சோமசுந்தரம், சிற்பமும் கலைவாழ்வும், ப.19.
2. மே.சு.இராமசுவாமி, தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள், ப.42-43.
3. குறிஞ்சிப்பாட்டு 5-7.
4. கந்து: அகம்.287;4-6, 307; 11-12.
   புறம், 52;12-13
   முருகு.225-226
   பட். பாலை.246-249.
5. நீலமேனி; ஐங்.க.வா. 1; கலி 104;12;105;13-14.
6. தாழ்ந்தசடை; பதிற்.க.வா; 5 கலி.க.வா.2; 150;9;
   அகம்.க.வா.;10; புறம். க.வா; 13; 166;1.
7. எண்தோள்; நற்.க.வா; 2; கலி.க.வா;5
8. நெற்றிக்கண்; நற்.க.வா;4; கலி: 1:4; அகம்: க.வா: 4; 181;16; புறம் 6:18; முருகு:153.
9. மணிமிடறு; பதிற்: க.வா. 10; பரி; 8; 127; 9;7;
   கலி.க.வா;4; 142:27; அகம் க.வா.15; புறம் க.வா:5; 55;4; 56:2; 91:6.

10. உமையொருபாகன்: ஐங்.க.வா; பதிற். க.வா:7-8; கலி.க.வா:6; அகம். க.வா;7; புறம்.கவா.7; முருகு:153.
11. உடுக்கை: நற்.க.வா:2; பதிற்.க.வா 6-7; கலி.க.வா;5
12. கணிச்சி; பதிற்.க.வா; 11; கலி 1:6; 101:8; 103:25; அகம்.க.வா:5.
13. பிறைசூடி, பதிற்.காவா:9; கலி.103;15; அகம்.க..வா;9; புறம்.க.வா; 9;55;5; 91;5.
14. அயன் தலையைக் கையப்பில் ஏந்தியவன்; கலி.க.வா; 12; புறம் 56;1.
15. சுடுகாடு விரும்பி; பதிற்.க.வா.4
16. கொன்றை; பதிற்.க.வா;2; கலி.க.வா.11; 142;28; 146:1; அகம்.க.வா;;1; புறம்.க.வா.1
17. ஆனேற்றுக் கொடி: பரி:8:2; பரி.திரட்டு 1:75-76.
18. நீலநிறத்தவன்: நற்:31:1; கலி 104:9-10; 105;9-10 புறம்.56:5; 58:15; பெருமான்; 403.
19. பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவன்; பரி.12:26; 13;29; 105;71-72; கலி:123;5; பெருபாண் 373.
20. சங்கு; பரி.3:87; முல்லை;:2
21. சக்கரம்; பரி;2.19; 3:89; 12;9; 15:59; கலி.105:72 127:4; 134:3; அகம் 175:14; புறம் 58:15; முல்லை 1.
22. ஆதிசேடன்; பரி.3:59; 13:27:28.
23. மார்பில் திருமகள்; பரி.1:8; 2:31; 3:90: பரி.திரட்டு 1;1 7; கலி: 145:64.
24. கருடக்கொடி: பரி.1:11 3:60; 4:36; 8;2; 12:4; 13:41; புறம் 56:6 முருகு.150-151.
25. துளசிமாலை; பரி.13:29:15:54
26. சேயோன்: நற்.198:1 குறுந்:1:2
27. ஆறுமுகம்: பரி.5:10; முருகு.91-102.
28. பன்னிருகை: முருகு.103-118.
29. நெடுவேல்: குறுந்.க.வா;4-5; முருகு 103-106; 110-111.
30. சேவல்கொடி: குறுந்.க.வா.4-5; முருகு 38; 110; 247
31. யனை ஊர்தி: பதிற்.1:6; 11:6; பரி.5:2; புறம.56:8
32. தெய்வானை: பரி.9:9; முருகு 115-117; 175.
33. வள்ளியம்மை: பரி.19:7: 95; முருகு.100-102.
34. கடம்பமர் செல்வன்: பரி.5:78. 8:124; 14:3; 21:11; முருகு.10: பெரும்பாண்: 75.

35. கானமர் செல்வி: கலி:89;7-9 அகம்.345:3-6; பொருந.52.
36. மலைமகள்: முருகு.257
37. குலி: குறுந் 218:1
38. சினம்: புறம்:247:4: சிறுபான்: 102
39. பலி: பதிற்.79:14 16-18
40. வெற்றி: பதிற்.82;1; 88:23-25
41. அருள்: அகம். 345:3-6
42. திருமால் மார்பில் திருமகள்: பரி.1:8; 2:31; 3:90 பரி.திரட்டு: 1:17;கலி.145:64
43. மன்னர் மார்பில் திருமகள்: பதிற்.4:1; 31:7; 40:13 அகம்:13:6: புறம். 179:5; புறம்342:5; பெரும்பாண்.29:பட்.பாலை..41;291.
44. திரு;முருக்.70;159; பெரும்பாண்.29; பட்பாலை.41;291; நெடு.88-89.
45. செய்யாள்; பரி.திரட்டு 9;1 ;கலி.28;5 அகம்; 36;13.
46. மா:புறம்.7.5 முல்லை;2
47. கஜலெட்சுமி: கலித்.44:5-7.
48. திருவுரு: மதுரை.353; பட்.பாலை.291: நெடு.88-89.
49. பலராமன் வெண்ணிறம்: நற்.32:2; பரி1:3; கலி:119:3;124:2; புறம். 56:3; 58:14.
50. ஒரு குழை: பரி.1:5; 15:55; கலி.26;1.
51. கலப்பைப்படை: பரி.1:5: 4:39; 13;13; கலி.36:94. 119;3; புறம்.56;4.
52. பனைக்கொடி:பரி.2: 22; 4:38; புறம்.56:4; 58:14.
53. யானைக்கொடி: பரி.1:4; 4:40.
54. திருமால் கொப்பூழில் பிறப்பு: பரி.3:12-13; 3:93: முருகு.164-165 பெரும்.403;404.
55. படைப்புக் கடவுள்: நற் 240:1:பரி.8:3; கலி: 1;1; 106;18 129: 1-2; புறம் 194:5
56. ஆயிரம்வேள்வி வெய்தவன்: பரி.5:31; முருகு; 155-156
57. கவுதமன்சூள்: பரி; 9;9; 19:50-52.
58. வச்சிரப்படை: பரி.5.51-53:முருகு.157-159; புறம் 241:34.
59. இந்திரன் கோயில்; புறம் 241;3-4
60. இந்திரவிழா: ஐங்.62:1
61. வருணன்-அணங்கு: அகம் 240: 8-9.
62. சுறவின் கோடு நட்டு வழிபாடு: பட.பாலை 86-88.
63. திருமாலின் மகன் மன்மதன்: கலி.140-8
64. மலரம்பு: பரி.10:97-98; 11:123; 18:28-29;19:47-48.
65 சுறவுக்கொடி:கலி:26;3; 84: 23-24; 147:42

66. மன்மதவிழா: கலி:26:3; 84: 23-24:147:42
67. டாக்டர் இரா.நாகசாமி. ஓவியப்பாவை ப.6
68. Ibid. ப.8
69. Ibid. பக்.14-15
70. V.Venkatasubbayyar-Rock-cut caves in the Pandya Country "Proceedings of the Indian History Congress" p.119.
71. Ibid. ப.120
72. டாக்டர் தி.முருகரத்தினம். தஞ்சாவூர். நேர்காணல். நாள். 20.11.82.
73. ஜே. எம்.சோமசுந்தரம். சிற்பமும் கலைவாழ்வும். ப.43.
74. A.R.E.624-626 of 1926.
75. Dr.(Miss) D.Devakunjari. Madurai. Through the Ages. p.114.
76. எஸ்.ஆர் பாலசுப்பிரமணியம். சோழர் கலைப்பாணி. ப.31-38.
77. Ibid.p.57.
78. டாக்டர் இரா.நாகசாமி. ஓவியப்பாவை. ப.63.

# 4. நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை

## 4.1. கற்சிற்பங்கள்

நகரத்தார் கோயில்களில் விநாயகர், சிவலிங்கம், அம்மன், முருகன், வயிரவர், நர்த்தன கணபதி, தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், துர்க்கை, பிரம்மா, நவக்கிரகங்கள், சனீஸ்வரன்,, சந்திரன், சூரியன், உமா மகேஸ்வரர், அறுபத்து மூன்று நாயன்மார்கள், சண்டேஸ்வரர் ஆகியோரின் கற்சிற்பங்கள் காணப்படுகின்றன.

பிற்காலச் சேர்க்கையாகத் திருமால், சீதா, மகாலெட்சுமி, ஆகியோரின் கற்சிற்பங்கள் உள்ளன. வெளி விமானமின்றிப் பலகோயில்களில் இவற்றிற்கு மட்டும் கோயில் தளத்திற்குள்ளேயே விமானம் இருப்பது , இவை பிற்காலச்சேர்க்கை என்பதற்குச் சான்றாகும்.

மேலே குறிக்கப்பட்டுள்ள சிற்பங்கள் வழிபாட்டில் உள்ள சிற்பங்கள் ஆகும். இவை தவிரப் பல கற்சிற்பங்கள் தூண்களிலும், உத்திரங்களிலும், கருவறைச் சுவரின் வெளிப்பக்கங்களிலும் காணப்படுகின்றன.

### 4.1.1. விநாயகர் சிற்பம்

நகரத்தார் கி.மு.2898க்கு முன்பே நாகநாட்டில் சாந்தியாபுரி என்ற நகரில் மரகத விநாயகரை வழிபட்டு வந்தனர். இப்பொழுது அம்மரகத விநாயகர் சிலை கோட்டாற்றுப் பகுதி நகரத்தாரின் வழிபாட்டில் உள்ளது என்பார் கம்பன் அடிப்பொடி சா. கணேசன்.[1]

விநாயகர் வழிபாட்டில் பெரிதும் ஈடுபாடு கொண்ட நகரத்தார் தாங்கள் குடியேறும் ஒவ்வோர் ஊரிலும் முதலில் பிள்ளையார் கோயிலையே கட்டியுள்ளனர். அதனால்தான் செட்டிநாட்டுப் பகுதியின் ஒவ்வோர் ஊரிலும் பல பிள்ளையார் கோயில்கள் காணப்படுகின்றன.

மரகத விநாயகர் என்ற பெயரில் இப்பொழுது தேவகோட்டை நகர சிவன்கோயிலில் விநாயகர் நிலை ஒன்று உள்ளது.

78 செ.மீ. உயரமுள்ள இம் மரகத விநாயகர் நிலையில் மூன்று கண்களும் ஐந்து கைகளும் காணப்படுகின்றன. யானைத் தலையுடைய விநாயகர் வல மேற்கரத்தில் அங்குசத்தையும் இட மேற் கரத்தில் பாசத்தையும் ஏந்தியுள்ளார். வலக்கீழ்க் கரத்தில் ஒடிந்த தந்தத்தையும், இடக்கீழ்க் கரத்தில் வாத முத்திரையையும் ஏந்தியுள்ளார். ஐந்தாவது கரமான தும்பிக்கையை இடப்புறமாக வளைத்து அதில் மோதகத்தை வைத்துள்ளார். தலையினைக் கரண்ட மகுடம் அழகு செய்கின்றது.

பீடத்தில் இரண்டு கால்களையும் வைத்து அமர்ந்து, ஒரு காலைப் பீடத்தின் மீது மடக்கிப் படுக்கையாக வைத்து, மற்றொரு காலை மடக்கி நிறுத்தியமைத்த லளிதாசன அமைதியில் விநாயகரின் அமர்ந்த கோலத்தைக் காண முடிகின்றது. மார்பில் கண்டிகை, பூணூல், சன்னவீரம் ஆகியன அழகாக அமைந்துள்ளன. பீடத்தில் பெருச்சாளி வாகனம் செதுக்கப்பட்டுள்ளது.

இம்மரகத விநாயகரின் மூன்றாவது கண்ணாகக் காணப்படுவது நெற்றிக்கண் ஆகும். இந் நெற்றிக்கண் நீட்டுவாக்கில் காணப்படுகின்றது. பிள்ளையார் முக்கண் முதல்வனின் பிள்ளை என்பதால் மூன்று கண் அமைந்துள்ளது என்று தேவகோடை மக்களின் மனத்திலும் வழக்கிலும் கருத்து நிலவுகிறது.

சிவன், சக்தி, விநாயகர், முருகன் ஆகிய நால்வரும் பெரிய தெய்வங்கள். அதிக வல்லமை(சக்தி) படைத்தவர்கள் என்பதால் மூன்று கண்களை உடையவர்கள் என்றே மந்திரம் கூறி வழிபாடு செய்கின்றோம். மாபெரும் சக்தி வாய்ந்த இறைவன் என்பதைக் குறிக்கவே இம் மரகத விநாயகருக்கு மூன்று கண்கள் செதுக்கப்பட்டுள்ளன என்று அக்கோயிலின் தலைமை அர்ச்சகர் திரு. பட்டு குருக்கள் கூறுகின்றார்.

சில கோயில்களில் துதிக்கையினை வலமாகச் சுழித்து ஓங்கார முத்திரையுடன் விளங்கும் மூர்த்தியைக் காண முடிகிறது. இந்தச் சிற்பத்தினை வலம்புரி விநாயகர் என்றும், பிரணவ மூர்த்தி என்றும் ஓங்கார மூர்த்தம் என்றும் சொல்கின்றனர்.

சில கோயில்களில் துதிக்கையினை இடமாக நீட்டி இடக் கையில் பிடிக்கப் பெற்றுள்ள மோதகத்தைத் தொட்டுக்கொண்டு இருக்கும் அமைதியினை உடைய மூரத்தியைச் சித்திவிநாயகர் என்ற பெயருடன் காணமுடிகின்றது.

மிக அரிய சிற்பமாகப் பிள்ளையார்பட்டியில் இரண்டு கைகளை உடைய குடைவரை பிள்ளையார் சிலையைக் காண்கிறோம் (நி.ப.எ.4). அதனைப் பல்லவர் காலச் சிற்பம்[2] முற்காலப் பாண்டியர் சிற்பம்[3] என்றும் அறிஞர்கள் கூறுவார்கள். அது முற்காலப் பாண்டியர்களின் சிற்பமே[4] என்று இப்பொழுது ஆராய்ச்சி அறிஞர்கள் முடிவுக்கு வந்துள்ளனர். அதே உருவ அமைதியுடன் சிறிய அளவில் குன்றக்குடி குகைக்கோயிலில் ஒரு பிள்ளையார் சிலை காணப்படுகின்றது. அதனினும் சிறியதாக 17 செ.மீ உயரத்தில் இரு கைகளுடம் ஒரு விநாயகர் சிலை இரணியூரில் இருக்கின்றது. மிகப் பழையகாலச் சிற்பமாக இருப்பதால் அதிகமான அணிகள் காணப்படவில்லை. வடிவ அமைப்புகளும் தெளிவின்றிக் காணப்படுகின்றன. இரண்டு கைகள் மட்டுமே உள்ள இச்சிற்பம் மிக அரியதொரு சிற்பம் என்பதாலும் ஆதி காலத்திலிருந்தே அக்கோயிலில் இருந்து வருவதாலும் பாதுகாக்கும் நோக்கத்துடன் அச்சிலையினை ஆட்கொண்ட நாதர் அர்த்த மண்டபத்தில் வைத்துள்ளனர்.

### 4.1.2. சிவலிங்கச் சிற்பம்

சிவலிங்கமானது அடியிலிருந்து மேல்நோக்கி பிரம்ம பாகம், விஷ்ணு பாகம், ருத்ரபாகம் என மூன்று அங்கங்களாக ஒரே அமைப்பில் செய்யப்படும். இவற்றில் பிரம்ம பாகம் திருவுண்ணாழித் தள மட்டத்திற்குக் கீழேயும், விஷ்ணு பாகம் தள மட்டத்திற்கு மேல், ஆவுடையாருக்குள்ளும் மறைந்திருக்கும். மூன்றாவது கூறாகிய ருத்ர பாகம் ஆவுடையாருக்குள்ளும் மேல் மட்டத்திலிருந்து ஓங்கியும் நிற்கும். இங்ஙனம் வெளியே தெரியும் பாகம் பூஜாபாகம் என்றும் பூஜாம்சம் என்றும் சொல்லப்படும். இவ்வமைப்பு சிற்பிகளால் செதுக்கப்பெறும் மானுஷ லிங்கங்களில் அமையும் என்பர் வை.கணபதி ஸ்தபதி அவர்கள்.[5] நகரத்தார் கோயில்களில மேற்கண்ட மானுஷ லிங்கங்களே அதிகமாகக் காணப்படுகின்றன.

மனிதர்களின் வழிபாட்டிற்காக, மனிதர்களே செயற்கையாக அமைத்துக்கொள்ளும் பெரிய லிங்கங்களையே மானுஷ லிங்கங்கள் என்பர். மனிதப் பிறவியிலிருந்து கடைத்தேறிப் பிறவியிலாப் பெருவாழ்வு பெற விரும்பியதால், நகரத்தார்கள் மானுஷ லிங்கங்களையே அதிகமாக அமைத்தனர்.

அவற்றுள் மிகப்பெரிய மனுஷ லிங்கங்கள் கீழச்சிவற்பட்டி, இரணியூர், வயிரவன்பட்டி, மாத்தூர் ஆகிய ஊர்க் கோயில்களில் உள்ளன.

கீழச்சிவற்பட்டி நகரச் சிவன்கோயில் லிங்கத்தின் மொத்த உயரம் 1.17 மீட்டர். (ருத்ர பாகம் 62 செ.மீ. விஷ்ணு பாகம் ஆவுடையார்-55 செ.மீ) (நி.ப.எ.5) ஆவுடையார் சதுர வடிவம் கொண்டது, ருத்ர பாகத்தின் உச்சிப்பகுதி குவிந்த அரைவட்ட வடிவமானது.

இரணியூர் ஆட்கொண்ட நாதர்கோயில் லிங்கத்தின் மொத்த உயரம் 82 செ.மீ (ருத்ரபாகம் 50 செ.மீ; விஷ்ணு பாகம்-ஆவுடையார்-32 செ.மீ) (நி.ப.எ.6) ஆவுடையார் வட்ட வடிவம் கொண்டது. ருத்ர பாகத்தின் உச்சப்பகுதி தட்டையானது.

வயிரவன்பட்டி வளரொளிநாதர் கோயில் லிங்கதின் மொத்த உயரம் 61 செ.மீ. (ருத்ர பாகம் 33 செ.மீ; விஷ்ணு பாகம்-ஆவுடையார் 28 செ.மீ. (நி.ப.எ.7). ஆவுடையார் வட்ட வடிவமானது. ருத்ர பாகத்தின் உச்சிப் பகுதி தட்டையானது.

மாத்தூர் ஐநூற்றீசுவரர் கோயில் லிங்கத்தின் மொத்த உயரம் 61 செ.மீ. (ருத்ர பாகம் 30 செ.மீ.; விஷ்ணு பாகம்-ஆவுடையார் 31 செ.மீ.).

லிங்கத்தின் இரண்டாவது வகைக்குச் சுயம்புலிங்கம் என்று பெயர். சிற்பி ஒருவரால் செதுக்கப்படாமல் தானாகவே தோன்றிய லிங்கம் இது. இவ்வகையிலும் ஒரு சுயம்புலிங்கம் இலுப்பைக்குடியில் உள்ள தான்தோன்றீசுவரர் கோயிலில் உள்ளது. சுயம்புலிங்கத்தின் சரியான தமிழாக்கமாகத் தான்தோன்றி ஈசுவரர் என்ற பெயர் அமைந்துள்ளது. இந்த லிங்கத்தின் மொத்த உயரம் 44 செ.மீ. (ருத்ரபாகம் 14 செ.மீ. விஷ்ணு பாகம்-ஆவுடையார்-30 செ.மீ).

ஒரே நிறமாகவும், கனமாகவும், வழுவழுப்பாகவும் அல்லது மனோஹரமாகவும், அடி முதல் நுனிவரையில் நேராக (கோணலில்லாமல்) இருப்பதும், யானையின் மணியைப் போன்ற ஒலியையுடையதுமான சிலையானது புருஷசிலை என்றும் லிங்கத்தினைச் சிறந்த அறிவாளி இவ்வாறே செய்ய வேவண்டும் என்றும் மயமதம் குறிபிடுகிறது.[6] நகரத்தார் கோயில்களில் மயமதம் குறிப்பிட்டுள்ளவாறே புருஷ சிலையாக லிங்கங்கள் அமைந்திருப்பது சிறப்பாகும்.

இவ்வாறு சிறந்த இலக்கணத்துடன் அமைந்துள்ள லிங்கங்கள் அரிமளம், ஆத்தன்குடி, கடியாபட்டி, கண்டனூர், கல்லல், காரைக்குடி, குருவிக்கொண்டான்பட்டி, குழிபிறை, கோட்டையூர், சண்முகநாதபுரம், செம்பனூர், சொக்கலிங்கம்புதூர் (சொக்கனேந்தல்), தேவகோட்டை, நற்சாந்துபட்டி, நாட்டரசன்கோட்டி, பட்டமங்கலம், பறியா மருந்துப்பட்டி, பிள்ளையார்பட்டி,பொன்னமராவதி, மேலைச்சிவபுரி, இராயவரம், வலையபடி, வேந்தன்பட்டி ஆகிய ஊர்களில் உள்ள நகரச் சிவன் கோயில்களில் உள்ளன.

### 4.1.3. அம்மன் சிற்பம்

உமாதேவியின் சிற்பம் 2 கைகளும் 3 கண்களும் உடையதாய்க் கரண்ட மகுடமாவது, கேசபந்தமாவது, விசேஷித்து, கிரீடமாவது தரித்திருக்கவேவண்டும் என்று ஸ்ரீ ஸாரஸ்வதீய சித்திர கர்ம சாஸ்திரம் கூறுகிறது[7]

உத்தரீயம் (மேலாக்கு), சன்ன வீரம்-ஹாரம்-கேயூரம்-கடகத்திரயம்-சல்லரீ (ஒலிக்கும் வளை), ஹஸ்தவலயம் (கைவளை), பூரிமம் (பாஹீவலயத்திற்கு மேலே அணிந்து கொள்ளும் ஆபரணம்), அங்குலீயகம் (மோதிரம்) இவைகளாலே அலங்கரிக்கபட்டிருக்க வேண்டும்.[8]

இடக்கை ஆஸநம் வரை நீண்டும் வலக்கை நீலோத்பலம் தரித்துமிருக்க வேண்டும். மனத்தைக் கவரும் கடைக்கண் பார்வையும், சகல லக்ஷணங்களும் பொருந்திய சுந்தரமான வடிவமும் மனத்தைக் கவரும் சோபையும் பொருந்தியிருக்க வேவண்டும்.[9]

பிறைச்சந்திரனையணியாகக் கொண்ட நெற்றியானது; ப்ரமராவ் ருதமாக (வண்டுகளால் சூழப்பட்டது போன்றும் முன்னெற்றி மயிர்களைக் கொண்டதாகவும்) இருக்கலாம் அல்லது நெற்றியில் பாலபட்டம் (நெற்றிப்

பட்டம்) இருக்கலாம். இது காதுகளிலும் மகரகுண்டலங்களிருக்க வேவண்டும் என்று மானசாரம் கூறுகிறது.[10]

நகரத்தார் கோயில்களில் உள்ள சிவபுரந்தேவி, சவுந்திரநாயகி, நித்திய கல்யாணி, ஆவுடையநாயகி, சிவகாமவல்லி; வாடா மலர்மங்கை, வாழவந்த நாயகி, கருணை நோக்கம்மை, மீனாட்சி யம்மை, பெரியநாயகி வடிவுடையம்மை, காமாட்சியம்மை, சுந்தரபரமேச்சுவரி, உலகநாயகி , பிரமவித்யாநாயகி, ஏலவார் குழலி, திரிலோகநாயகி, சிறுதேன் மொழியம்மை, அகிலாண்டேசுவரி, பருவதவர்த்தினி சிவகாமியம்மை, பரஞ்சோதியம்மை, கருணாகடாட்சியம்மை, புவனேஸ்வரியம்மை, கண்டவனநாயகி, சிவயோகவல்லி,வடுவகிர்விழியாள், ரஷாவதாரி யம்மை, சிவகாமசுந்தரி, ஆகிய திருப்பெயர்களில் விளங்கும் உமாதேவியின் உருவ அமைப்பு, சிற்ப நூல்கள் கூறும் இலக்கணத்திற்குப் பெரிதும் ஒத்து வருகின்றது.

வயிரவன் கோயிலில் உள்ள வடிவுடையம்மையின் சிற்பமும் மாத்தூர் கோயிலில் உள்ள பெரியநாயகி அம்மையின் சிற்பமும் மிகச்சிறந்த அம்மன் சிற்பத்திற்குச் சான்றாக விளங்குகின்றது.

வடிவுடையம்மை சிற்பத்தின் உயரம் 1.06 மீட்டர், பீடம் 46 செ.மீ (நி.ப.எ.8).

இரண்டு கைகள் இருக்கின்றன. வலக்கையில் நீலோற்பல மலரினை ஏந்தி இருக்கின்றாள். இடக்கை எழிற்கையாக லோல முத்திரையில் இருக்கிறது.

இடக்காலை சற்று முன் நகர்த்தி, வலக்காலைச் சற்று பின்னே ஒதுக்கி நிற்கும் நிலையில் சிற்பம் திரிபங்க நிலையில் அமைந்துள்ளது.

தலையுச்சி மட்டத்திலிருந்து 1.5 முழம் உயரம் கொண்டதாகவும் கேசத்தைத் தூக்கி முடிந்த பந்தமாகவும் அமைந்த கேசபந்த தலைக் கோலம் காணப்படுகிறது.

இச்சிற்பத்தில் உத்தரீயம் காணப்படவில்லை. தொய்யகம், சந்திரப்பிரபை, சூரியப்பிரபை ஆகிய தலையணிகளும் பத்ர குண்டலம் எனும் காதணியும், கண்டிகை, சரப்பளி, அரும்புச்சரம், சவடி முதலிய கழுத்தணிகளும், சன்ன வீரம், பூணூல் ஆகிய மார்பணிகளும் தோள்வளை, கடகவளை,

கைவளை ஆகிய கை அணிகளும் முடிச்சு அணி பொருந்திய மேகலை, அரைப்பட்டிகை, தாரகைச்சும்மை, குறங்கு செறி ஆகிய இடை அணிகளும், சிலம்பு காற்சதங்கை, மிஞ்சி முதலிய பாத அணிகளும் காணப்படுகின்றன. பட்டாடையின் அமைதி, இடைக்கட்டுகளின் தொங்குநிலையோடு அழகுமிக்கதாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

அம்மனின் அருட்கண் பார்வையும் புன்னகை தவழும் இதழும், மலர்ந்த முக அழகினை மேம்படுத்துகின்றன.

கீழச்சிவற்பட்டி மீனாட்சி அம்மன் சிலையின் உயரம் 1.03 மீட்டர். (நி.ப.எ.9) இரணியூர் சிவபுரந்தேவி அம்மன் நிலையின் உயரம் 77 செ.மீ (நி.ப.எ.10) இவை முறையே 18ஆம் நூற்றாண்டினையும் 19ஆம் நூற்றாண்டினையும் சார்ந்தவை.

அமராவதி புதூர் வாழவந்த நாயகி, அரண்மனை சிறுவயல் கருணை நோக்கம்மை, அரியகுடி சுந்தரபரமேச்சுவரி, அத்திக்காடு தெற்கூர் மீனாட்சியம்மை , கண்டமாணிக்கம் ஏலவார் குழலி, கோட்டையூர் மீனாட்சியம்மை, தேவகோட்டை மீனாட்சியம்மை, நெறுகுப்பை நித்திய கல்யாணி, பள்ளத்தூர் மீனாட்சியம்மை,பாகநேரி கருணாகடாட்சியம்மை, புதுப்பட்டி புவனேசுவரியம்மை, மிதிலைப்பட்டி சிவயோகவல்லி, வலையப்பட்டி வடுவகிர் விழியாள், வெற்றியூர் சவுந்திர நாயகி ஆகிய சிற்பங்கள் மிகச் சிறப்பானவை. சூரைக்குடி ஆவுடையநாயகி அம்மன் சிலையில் மட்டும் நான்கு கரங்கள் உள்ளன. மேற்கரங்கள் இரண்டில் தாமரையும் நீலோற்பல மலரும் காணப்படுகின்றன. கீழ்க் கரங்கள் இரண்டிலும் அபயவரத முத்திரைகள் காணப்படுகின்றன.

### 4.1.4. முருகன் சிற்பம்

முருகன், ஆறுமுகம், சுப்பிரமணியன், தண்டாயுதபாணி எனும் பெயர்களிலும் வழிபடப்பெறுகின்றார்.

ஆறுமுகன், காலைநேர இளஞ்சூரியனைப் போன்ற உடலமைப்பும் சிவப்புநிற உடை அமைப்பும் பெற்றவர். குழந்தைமையும் இளமையும் ஒன்று கலந்த வடிவம் கொண்டவர். அழகும் இனிமையும் கவர்ச்சியும் உடையவர். முகத்தில் புன்னகையும் தலையில் திருமுடியும் அலங்கரிக்கும். முத்துமாலை அணிந்தவர். ஆறு முகங்களோ அல்லது ஒரே ஒரு முகமோ கொண்டவர்.

பன்னிருகரங்கள், அல்லது ஆறு கரங்கள் அல்லது இரண்டு கரங்களை உடையவர். பன்னிருகரங்களில் வலப்பக்கம் சக்தி, அம்பு, வாள், வஜ்ரம், மழு, ஈட்டி ஆகிய ஆயுதங்களை ஏந்தி, அபய ஹஸ்த முத்திரையையும், இடப்பக்கம் வில், வெற்றிக்கொடி, கேடயம், மணி கதை, சேவல் ஆகியனவற்றை ஏந்தி வரத ஹஸ்த முத்திரையையும் கொண்டவர் என வாஸ்து சாஸ்திரம் கூறுகின்றது.[11]

ஸ்வாமியானவர் கரண்டமகுடம், அல்லது கேசபந்தம் தரித்திருக்க வேண்டும். தேவசேனையின் நிறம் மஞ்சளாகும். (வள்ளி, தேவசேனை இருவருக்கும், ஸவாமியின் பக்கத்திலுள்ள கையில் (அல்லது வலது கையில்) புஷ்பம் இருக்க வேண்டும். அல்லது வரத ஹஸ்தமாக இருக்கவேண்டும் என்று ஸ்ரீ ஸாரஸ்வதீய சித்திர கர்ம சாஸ்திரம் குறிப்பிடுகின்றது.[12]

நகரத்தார் கட்டியுள்ள கோயில்கள் அனைத்திலும் மூலவரின் கர்ப்பக்கிரகத்திற்குப் பின்புறம் மேற்கில் அல்லது வடமேற்கில் ஆறுமுகனின் சுற்றாலயம் உள்ளது. அதில் ஆறுமுகன் தெய்வானை வள்ளியம்மை எனும் இரண்டு மனைவியருடன் காட்சி தருகின்றார்.

ஆறுமுகனின் கற்சிற்பத்தில் முற்பகுதி உறுப்புக்கள் மட்டும் செதுக்கப்பட்டு பின்புறம் உள்ள உறுப்புக்கள் புலப்படுத்தப்படாமல் புடை ஓவியமாக (சித்ரார்த்தம்) அமைந்துள்ளன. எனவே மூன்று முகங்கள் மட்டுமே தெரியுமாறு ஆறுமுகனின் சிலைகள் பல வடிக்கப்பட்டுள்ளன. சில சிலைகளில் ஒரு முகமும் ஆறு கைகளும் காணப்படுகின்றன. இச்சிற்பம் 19ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

இரணியூர் ஆட்கொண்டநாதர் கோயிலில் இருக்கும் ஆறுமுகனுக்கு ஒரு முகமும் ஆறு கைகளும் உள்ளன. வலப்புறம் உள்ள மூன்று கைகளில் வஜ்ரம், கத்தி, அபய முத்திரையும், இடப்புறம் உள்ள மூன்று கைகளில் சூலம், கேடயம், வரதமுத்திரையும் காணப்படுகின்றன.

வயிரவன்பட்டி வயிரவன் கோயிலில் உள்ள சுப்பிரமணியருக்கு ஒரு முகமும் நான்கு கைகளும் உள்ளன. கீழச்சிவற்பட்டி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் உள்ள சுப்பிரமணியருக்கும் அதே அமைப்பு காணப்படுகிறது. இவை 18ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தவை.

சுப்பிரமணியருக்கு மட்டும் எனத் தனிக்கோயில் செவ்வூரிலும், விரையாச்சிலையிலும் உள்ளது.

பழனிமலைமேல் தண்டத்தை ஆயுதமாக வைத்துக்கொண்டு மொட்டை தலையுடன் ருத்திராட்ச மாலையுடன் இடுப்பில் ஒற்றை ஆடையுடன் சிறிதே இடையை வளைத்து நின்றநிலைக் கோலத்தில் ஆபங்க அமைதியில் நிற்கும் திருக்கோலமே தண்டாயுதபாணியின் அமைப்பாகும்.

முருகனிடத்தே பெரிதும் ஈடுபாடுகொண்ட நகரத்தார் மலேசியா, சிங்கப்பூர், பர்மா, வியட்நாம், தாய்லாந்து, இந்தோனேஷியா, பங்களாதேஷ் ஆகிய நாடுகளில் அதிக அளவு தண்டாயுதபாணி கோயில்களையும், நதிரேசன் கோயில், செல்வ விநாயகர் கோயில், பொய்யாத விநாயகர் கோயில், சிவன் கோயில், அம்மன் கோயில்களையும் கட்டியுள்ளனர்.

மலேசியா நாட்டில் கோலாலம்பூர், பினாங்கு, ஈப்போ, பேரா, மெந்தாகாப் ஆகிய ஊர்களில் நகரத்தார் கட்டியுள்ள கோயில்களில் காணப்படும் தண்டாயுதபாணி சிலையும் சுப்பிரமணியர் சிலையும் சிறப சாத்திரத்தின்படி அமைந்துள்ளன. சிங்கப்பூர் தண்டாயுதபாணி கோயிலில் உள்ள சிற்பமும் உத்தம அமைதி பெற்றது.

தேவகோட்டை நகரச் சிவன் கோயிலில் உள்ள தண்டபாணி, அழகு வெள்ளமாகக் காட்சி தருகின்றார். இயற்கையிலேயே அழகு நிறைந்த அவருக்குக் கந்தர்சஷ்டி விழா நடைபெறும்போது மிக அழகாக அலங்காரம் செய்கின்றார்கள். வேலனாகவும், வேடனாகவும், ராஜ அலங்காரத்துடனும் அச்சிலையைக் காணும்போது அதன், உத்தம தசதாள அளவில் உருப்பெற்ற சிலை என்பதை கண்கூடாகக் காணமுடிகின்றது.

### 4.1.5. வயிரவர் சிற்பம்

வயிரவர் சிவனுடைய அவதாரங்களில் ஒருவர். இவர் நீலநிறம் உடையவர். திருவடிகளில் சிலம்பும், மார்பில் தலைமாலையும் அணிந்தவர். முக்கண் உடையவர். கைகளில் சூலம், மழு, பாசம், உடுக்கை ஆகியவற்றை ஏந்தியவர். கோரப் பற்களும் செஞ்சடையும் உடையவர்.

வயிரவருடைய வரலாற்றைச் சிவபுராணம், ஸ்காந்தம், பிரமாண்டபுராணம் ஆகியன எடுத்துக் கூறுகின்றன.. சிவபுராணம் வித்யேஸ்வர சம்ஹிதை எட்டாவது அத்தியாயத்தில் ஒரு சுலோகம் "சிவபிரான் பிரமனுடைய அகந்தையை அடகுவதற்காக, தனது புருவ மத்தியிலிருந்து ஒரு மனித வடிவத்தைப் படைத்தார். இவரே வயிரவன்'' எனக் கூறுகிறது.[13]

வயிரவனின் உருவ இலக்கணத்தைத் திருப்புத்தூர்ப் புராணம் கூறுகின்றது:

''கரம் இரண்டினும் தண்டமும் கபாலமும் கவின்
தரளமாலை, மஞ்சீரம், அங்கதம் முதல் தயங்க
பொருவில் மந்திர பூடணனாய் வடுவாகிப்
பரமயோகியாய் நின்றனன் ஆண்டெழுபகவன்.''

வயிரவன் கோயிலில் உள்ள வயிரவரின் உயரம் 1.10 மீட்டர், பீடத்தின் உயரம் 50 செ.மீ. சம்பாத ஸ்தானக நிலையில் நின்ற திருக்கோலதில் வயிரவர் காட்சி தருகின்றார். நான்கு திருக்கரங்களில் மேலிருகரங்களில் உடுக்கையினையும் பாம்பினையும் கீழிரு கரங்களில் சூலத்தினையும் கபாலத்தினையும் வைத்துள்ளார். நாய் வாகனம் அவருக்குப் பின்னால் நின்ற நிலையில் காணப்படுகிறது. நெற்றிக்கண் பெற்ற திருமுகத்தில் புன்னகை தவழ்கிறது.

தலைக்கோலம் சுடர்முடி அமைப்பில் உள்ளது. முடி தீச்சுடர் போல அடுக்கடுக்காய் மேல் நோக்கி ஒரு சீராய் - அரசிலைத் தோற்றத்தைப் போல் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வகை தலைக்கோல அமைப்பிற்கு 'அக்னிகேசம்' என்றும் பெயர் உண்டு.[14]

கண்டிகை, சரப்பளி,சவடி ஆகிய கழுத்தணிகளும் வீரச்சங்கிலி பூணூல் முதலிய மார்பணிகளும் தோள்வளை, சூடகம் முதலிய கையணிகளும் வீரக்கழல் எனும் காலணியும் காணப்படுகின்றன. வயிரவரைச் சுற்றியுள்ள திருவாசியில் பதினெட்டுத் தீப்பிழம்புகளும் யாளித் தலையமைப்பும் காணப்படுகின்றன.

இரணியூர் கோயிலில் உள்ள வயிரவரின் உயரம் 90 செ.மீ. கீழச்சிவற்பட்டிக் கோயில் உள்ள வயிரவரின் உயரம் 70 செ.மீ. இச்சிலைகளின் உயரத்தில் வேறுபாடுகள் இருப்பினும் உருவ அமைதியில்

ஒற்றுமை இருப்பதைக் காண முடிகின்றது. சூரைக்குடியில் உள்ள வயிரவர் சிற்பத்தில் சூலத்திற்குப் பதிலாகக் 'கதை' ஆயுதம் காணப்படுகிறது. (நி.ப.எ.11)

## 4.1.6. தட்சிணாமூர்த்தி சிற்பம்

இறைவன் அருவ மேனியன் என்ற கருத்தை லிங்க உருவம் விளக்கிக் கூறுகிறது. படைத்தல்,காத்தல் ஒடுக்குதல் ஆகிய முப்பெரும் செயல்களை அவனே ஆற்றுகிறான் என்பதைக் கருவறைக் கோட்டங்களில் உள்ள பிரம்மா, விஷ்ணு, தட்சிணாமூர்த்தி உருவங்கள் காட்டுகின்றன என்பார் வை.கணபதி ஸ்தபதி.[15]

விஷ்ணு சிற்பத்திற்குப் பதிலாக விஷ்ணு துர்க்கை சிற்பம்தான் வடபுறக் கோட்டத்தில் காணப்படுகின்றது.

நர்த்தன கணபதி, தட்சிணாமூர்த்தி, ஆகியோர் தெற்குப்புறக் கோட்டத்திலும், அடிமுடி காட்டாத லிங்கோத்பவர் மேற்குக் கோட்டத்திலும் விஷ்ணு துர்க்கை, பிரம்மா ஆகியோர் வடக்குக் கோட்டத்திலும் காணப்படுகின்றனர்.

நான்கு வகையான தட்சிணாமூர்த்தி சிற்பங்கள் பற்றி வாஸ்து சாஸ்திரம் கூறுகின்றது.[16] அவையாவன:

1. யோக தட்சிணாமூர்த்தி, 2. வீணா தட்சிணாமூர்த்தி, 3.ஞான தட்சிணாமூர்த்தி, 4. வியாக்யான தட்சிணாமூர்த்தி.

நகரத்தார் கட்டிய கோயில்களில் ஞான முத்திரையுடன் கூடிய ஞான தட்சிணாமூர்த்தியையே காணமுடிகின்றது.

இத் தட்சிணாமூர்த்தியின் உருவ இலக்கணம் பற்றி ஸகளாதிகாரம் கீழ்க்காணுமாறு கூறுகின்றது..[17]

இடது பாதம் வலது முழங்காலின் பேரில் வைக்கப்பட்டு வலதுபாதம் தொங்கவிடப்பட்டு நான்கு கைகளுடண் கூடியிருக்க வேண்டும். ஒரு வலக்கையில் சந்தம்ச முத்திரையும் மற்றொரு வலக்கையில் ருத்ராஷமாலையும், ஒரு இடக்கையில் வரத முத்திரையும், மற்றொரு இடக்கை அக்னியை ஏற்றியோ, அல்லது யோக தண்டத்தின் பேரில் வைக்கப்பட்டோ இருக்க வேண்டும். விரிந்த சடையுடனும் அல்லது ஜடாமகுடத்துடனும்

அல்லது உயர்ந்த ஜடா மகுடத்தின் மத்தியில் கபாலத்தோடும் இருக்க வேண்டும். பூணூல் தரித்தும் உத்தரீயம். (மேலாடை) தொங்கவிடப்பட்டும் இருக்க வேண்டும். மூன்று கண்களோடும், சங்கு, மல்லிகைப் புஷ்பங்களைப் போன்ற பிரகாசத்தோடும் ருத்ராஷ மாலையைத் தொங்கவிட்டுக் கொண்டும், கையில் அழகிய உபதேச முத்திரையைக் காதுக்குச் சமீபமாக வைத்துக்கொண்டும். இலேசாகத் திறந்த கண்களோடு யோக பந்த நிலையில் இருந்து கொண்டும், புலித்தோல் ஆடையணிந்தும், காதில் குண்டலமோ அல்லது கர்ணமூல(தோடு)மோ அணிந்தும் யதொரு கலவையுமற்ற மனத்தோடு அமர்ந்திருக்க வேண்டும்.

வலதுபுறத்தில் நாரதர், ஜமதக்னி, வசிஷ்டர், ப்ருகு ஆகிய நான்கு மஹரிஷிகளும், பாரத்வாஜர், அகஸ்தியர், சுனகர், பார்க்கவர் ஆகிய நால்வரும் இடப்புறத்திலும் அமர்ந்திருக்க வேண்டும்.

கயிலாச பர்வதத்தில் கின்னரர்களால் வணங்கப்பட்டு ஆல மரத்தடியில் சாந்த ரூபமாய் உலகுக்கெல்லாம் ஈசனாகிய மகேஸ்வரன் வீற்றிருக்கிறார். தொங்கவிட்டுக் கொண்டிருக்கும் பாதத்தின்கீழ் அபஸ்மாரன் என்னும் முயலகனின் உருவத்தை அமைக்க வேண்டும். அவன் கையில் பாம்பை வைத்து விளையாடிக் கொண்டிருக்க வேண்டும். கறுத்த மேனியும் பூதங்களைப் போன்ற உருவமும் அமைந்திருக்க வேண்டும்.

மேற்கண்ட இலக்கணங்களுடன் நகரத்தார் கட்டிய கோயில்களில் உள்ள தட்சிணாமூர்த்தியின் உருவ அமைதி காணப்படுகிறது. இரணியூர், வயிவரன்பட்டி, கீழச்சிவற்பட்டி, தேவகோட்டை, மாத்தூர், இலுப்பைக்குடி, பனையப்பட்டி, காரைக்குடி, புதுப்பட்டி ஆகிய ஊர் நகரச் சிவன்கோயில்களில் உள்ள தட்சிணாமூர்த்தியின் உருவ அமைப்பு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

கீழச்சிவற்பட்டி நகரச் சிவன் கோயிலில் உள்ள தட்சிணா மூர்த்தி, அமர்ந்த நிலையில் வலக்காலைத் தொங்கவிட்டு முயலகன் மீது ஊன்றி இடக்காலை அதன்மீது விரைப்பாகப் படுக்கக் கிடத்தி நீட்டி, உடலைச் சமநிலையிற் கொண்டு விரைப்பாக நிமிர்த்தி ராஜ நோக்குடன் வீராசன கோலத்தில் அமர்ந்துள்ளார். இதனை இராஜ லிங்காசனம் என்றும் கூறுவர். தலையில் இருபுறங்களிலும் திரிசடையும் சுருள் சடையும், அடர்த்தியாகவும் அழுத்தமாகவும் தொங்கியமைந்த ஜடாபாரம் எனும் தலைக்கோலமும் அழகாகச் செதுக்கப்பெற்றுள்ளது.

முக்கண்-செல்வர் நான்கு திருக்கரங்களுடன் யோகநிலையில் அமர்ந்த ஞானத்தைப் போதிப்பதாகச் சிற்பம் அமைந்துள்ளது.

வயிரவன்பட்டி வயிரவன் கோயிலில் உள்ள தட்சிணா மூர்த்தியின் உயரம் 72 செ.மீ. அவருக்கு நான்கு திருக்கரங்கள் உள்ளன. வலமேற்கரத்தில் பாம்பினையும் இட மேற்கரத்தில் நெருப்பினையும் வலக்கரத்தில் உருத்திராட்ச மாலையுடன் சின் முத்திரையையும் இடக்கீழ்க்கரத்தில் டோல ஹஸ்த முத்திரையினையும் ஏந்தியுள்ளார்.

கீழச்சிவற்பட்டி நகரச் சிவன் கோயிலில் உள்ள தட்சிணா மூர்த்தியின் உயரம் 69 செ.மீ. இரணியூர்க் கோயிலில் உள்ள தட்சிணா மூர்த்தியின் உயரம் 53 செ.மீ. இரணியூரில் மட்டுமே தட்சிணாமூர்த்தியின் பாதத்தின் கீழேயே எட்டு முனிவர்களும் காணப்படுகின்றனர். இச்சிலை காலத்தால் மிகவும் பழமையானது என்பதை அதன் உருவ அமைதி காட்டுகின்றது. சற்றேறக்குறைய இச்சிலை 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக் கணிக்கலாம்.

நகரத்தார்கள் சைவ சமயப் பற்று மிக்கவர்கள். தினசரி சிவபூஜை செய்பவர்கள். அதற்கான சமய தீட்சையினையும் உபதேசத்தினையும் சிவாச்சாரியார் மூலமாக முறையாகப் பெற்றவர்கள். எனவே ஞானம் அறிவிக்கும் தட்சிணாமூர்த்தியிடம் அவர்கள் பெரிதும் பக்தி கொண்டதால் தட்சிணாமூர்த்திக்குச் சிறப்பான தனி மண்டபத்தினை அமைத்துள்ளனர். வயிரவன்பட்டிக் கோயிலில் உள்ள தட்சிணாமூர்த்தி சிம்ம மண்டமும் அதில் அமைந்துள்ள இசைத் தூண்களும் குறிப்பிடத் தக்கன. (நி.ப.எ.12).

### 4.1.7. அண்ணாமலையார் சிற்பம்

அடிமுடி காட்டாத அண்ணாமலையாரின் சிற்பத்தினை லிங்கோத்பவர் என்றும் குறிப்பிடுவர்.

லிங்கத்தின் மத்தியில் சந்திரசேகரரைப் போல் நிலையும், அங்கங்களும் உடைய மூர்த்தி லிங்கோத்பவராகும். இந்த மூர்த்தியின் முழங்காலினை கீழ்ப்பகுதியாகிய நளகை என்னும் இடத்திற்குக் கீழே உள்இபகுதி. பாதம் உள்பட லிங்கத்தில் மறைந்திருக்கும்.

இந்த மூர்த்ததியின் மேல்பகுதிக்கு இடப்பக்கத்தில் பிரும்மா ஹம்ஸரூபமாக அமைக்கப்பட வேண்டும். வலப்புறத்தில் கீழே பன்றியின் உருவத்தில் மஹா விஷ்ணு அமைக்கப்படவேண்டும். மேலும் ஈசுவரனின்

முன்னே இருபுறங்களிலும் கைகூப்பிய நிலையில் பிரும்மாவும் விஷ்ணுவும் அவர்களுடைய நிஜ உருவத்தோடு அமைக்கபட வேண்டும் என்று ஸகளாதிகாரம் கூறுகின்றது.[18] ஸாரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரமும் இவ்வாறே குறிப்பிடுகின்றது.[19]

மேற்கண்ட உருவ இலக்கணத்தில் பிரம்மா, விஷ்ணு ஆகியோரின் நிஜ உருவங்கள் தவிர மற்ற எல்லாம் சரியாகக் காணப்படுகின்றன. நகரத்தார் கட்டிய எந்தக் கோயிலிலும் அன்னம், பன்றியின் உருவத்தைத் தவிர பிரம்மா, விஷ்ணுவின் உருவத்தைக் காணவில்லை.

இரணியூரில் உள்ள அண்ணாமலையார் சிற்பம் காலத்தால் முந்தியது. அதன் உயரம் 87 செ.மீ. வயிரவன்பட்டிக் கோயிலில் உள்ள அண்ணாமலையாரின் உயரம் 70 செ.மீ அன்னத்தில் உயரம் 10 செ.மீ. பன்றியின் உயரம் 8 செ.மீ.

லிங்கத்தின் நடுவிலுள்ள சிவபெருமானின் வடிவம் நேராக நிமிர்ந்திருக்கும் கால்களுடன், நின்ற வடிவில் காணப்படுகிறது. நான்கு திருக்கரங்களில் அபயவரத முத்திரைகளுடன் புல்லாங்குழலையும் டங்கத்தினையும் (உளியையும்) வைத்துள்ளது. சந்திர கலையுடன் கூடிய மகுடத்தின் அடிப்பகுதி மட்டும் காணப்படுகின்றது.

### 4.1.8. துர்க்கை சிற்பம்

துர்க்கை நான்கு அல்லது எட்டுக் கைகளுடனோ, அல்லது அதற்கும் மேற்பட்ட கைகளுடனோ சிலை வடிக்கப்பெறுவாள். மூன்று கண்களுடன், கரிய மேனியுடன் கவர்ச்சிகரமாகத் தோற்றம் தருவாள். நன்கு வளர்ந்த மார்பும், பருத்ததொடையும், பெரிய இடையும் கொண்ட மஞ்சள்நிற மாலைகளைப் பெற்றிருப்பாள். வலக்கரங்களில் அபய முத்திரையையும் சக்கரத்தினையும், இட கரங்களில் கடக முத்திரையையும் சங்கினையும் ஏந்தியிருப்பாள் என ஆகமங்கள் கூறுவதாக வாஸ்து சாஸ்திரம் குறிப்பிடுகின்றனது.[20]

எட்டுக் கைகளுடன் கூடியவள், மஹிஷாசுரனை வதைப்பவள், ரக்தபாநம் செய்ய விருப்பமுள்ளவள், ஆபத்துக்களைக் களைந்தெறிபவள் என ஸ்ரீதத்துவநிதி துர்க்கையின் திருக்குணங்களைக் கூறுகின்றது.[21]

நகரத்தார் கட்டிய கோயில்களில் கர்ப்பக்கிரகத்தின் வடக்குப்புறக் கோட்டத்தில் துர்க்கையின் உருவம் நான்கு திருக்கரங்களுடனேயே காணப்படுகின்றது. மூன்று கண்களுடன் கரிய மேனியில் கவர்ச்சிகரமாக மேற்கூறிய மற்ற இலக்கணங்களுடன் சிற்பம் நின்ற நிலையில் அழகாக அமைக்கப்பட்டுள்ளது.

வயிரவன்பட்டியில் உள்ள துர்க்கையின் உயரம் 80 செ.மீ கீழச்சிவற்பட்டியில் உள்ள துர்க்கையின் உயரம் 70 செ.மீ இரணியூரில் உள்ள துர்க்கையின் உயரம் 65 செ.மீ.

### 4.1.9. பிரம்மா சிற்பம்

பிரம்மாவின் உருவ அமைதி பற்றிக் கீழ்க்காணுமாறு மானசாரம் கூறுகின்றது.[22]

பிரமனின் வடிவம் நான்கு கரங்களையுடைது. நான்கு முகங்களையுடையது; இரண்டு கால்களையுடையது; எட்டுக் கண்களையுடையது எட்டுக் காதுகளுடன் கூடியது ; உடலோ ஒரே வடிவம் கொண்டது. இந்த வடிவத்தின் அளவை, உத்தம தசதாளத்தினால் அளக்க வேண்டும்.

நின்ற நிலையோ, அமர்ந்த நிலையோ உடையது. மரவுரியையோ நூல் ஆடையையோ உடுத்திருப்பது. வரம் அபயம் இவ்விரண்டையும் அளிக்கும் உட்கைகளையுடயது. ஜடாமகுடத்தினால் அலங்கரிக்கப்பட்டது.

வெளிக்கைகளிரண்டிலும் முறையே இட வலக் கரங்களில் கமண்டலமும் ஜபமாலையும், அல்லது ஸ்ருக் ஸ்ருவம் என்ற ஹோம சாதனமான கரண்டிகள் தரிக்கப்படவேண்டும். முன்போல வரதம் அபயம் இவைகளுடன் கூடியது.

காதுகளில் சுவர்ணமயமான கர்ண புஷ்பமோ அல்லது மீன்கள் அடையாளம் கொண்ட குண்டலமோ அணிவிக்கப்பெற வேண்டும். பூணூல் உத்தரீயம் முதலியவையும், மாலை முதலியவையும், உதரபந்தம் என்ற வயிற்றுப் பட்டையும் அணிவிக்கப் பெற வேண்டும்.

இந்த பிரமனின் வடிவமானது மாலை, உபகண்டம் (கழுத்தை யொட்டியமாலை) இவைகளுடன் கூடியதாகவும், பாஹி மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதாகவும் இருக்கவேண்டும். கேயூரகடகமென்ற தோள்

வளை, கடகம் முதலியவற்றுடன் மணிபந்தனம் என்ற மணிக்கட்டின் அலங்காரத்தையும் செய்ய வேண்டும்.

தோள்வளை, ப்ரகோஷ்டவளையம், மணிபந்த கடகம் எனும்படியான மூன்று கடகங்களுடனும் கூடியதாகவும், கணுக்காலுக்கு மேலேயுள்ள நளகையெனும் கண்டைக்காலிலே கடகத்துடன் (வளையத்துடன்) கூடியதாகவும் இருக்க வேண்டும். அரைஞான் முதலியவையும் நீவியென்ற இடையிலணியத்தக்க சலனமென்ற அசைந்தாடும் முகப்புடன் கூடிய இடைப்பட்டிகையும் இருக்க வேண்டும்.

இரண்டு கரங்களும் ரத்னமயமான மோதிரங்களுடன் கூடியவை. கால்கள் ரத்னமயமான பாதஸரங்களுடன் கூடியவை. நெற்றியில் வட்டமான திலகம் சந்தனத்தினாலாகியதாகவோ, அகருவினாலாகியதாகவோ இருக்க வேண்டும்.

முழுமையானவுடலும் சுவர்ணவண்ணம் கொண்டிருக்க வேண்டும். நளகம் (கணுக்காலுக்கு மேல்பாகம்) முடியும்வரை மரவுரியுடன் கூடியிருக்க வேண்டும். இருபக்கங்களிலும் சக்திகளுடன் கூடியதாக இருக்க வேண்டும். வலது பக்கத்தில் ஸ்ரீ ஸரஸ்வதி இருக்க வேண்டும். இடது பக்கத்தில் ஸாவித்ரீ இருக்க வேண்டும்.

பிரம்மாவிற்கு மேலே கூறப்பட்டுள்ள இலக்கணங்கள் அனைத்தும் பொருந்தும் வகையில் - சுதைச் சிற்பங்களைத்தான் காண முடிகின்றது. இராஜ கோபுரங்களின் வடக்குப்புறத்தில் ஒவ்வொரு மாடத்திலும் இரு மனைவியருடன் தாமரை மலரில் அமர்ந்த நிலையில் பிரம்மாவைக் காணலாம். ஆனால் கர்பக்கிரஹத்தின் வடக்குக் கோட்டத்தில் காணப்படும் கற்சிலையில் பிரம்மா மனைவியர் இன்றித் தனியாக நின்ற கோலத்திலேயே காணப்படுகின்றார்.

பிரம்மாவின் கற்சிற்பம் புடை ஓவியமாகச் (சித்ரார்த்தம்) செதுக்கப்பட்டுள்ளது. எனவே மூன்று முகங்கள் மட்டுமே தெரிகின்றன, நான்கு கரங்கள், இரண்டு கால்களைக் காண முடிகின்றது.

இரணியூர் ஆட்கொண்ட நாதர் கோயிலில் கற்சிற்பத்திற்குப் பதிலாக ஐம்பொன் திருமேனி உள்ளது. அது பூர்ண சித்திரமான முழு உருவமும் வடிக்கப்பெற்றது. அதில் நான்கு முகங்கள் காணப்படுகின்றன.

இரண்டு வலக்கரங்களில் ஜபமாலையினையும் அபய முத்திரையினையும் இரண்டு இடக்கரங்களில் கமண்டலத்தையும் வரத முத்திரையினையும் கொண்டுள்ளார்.

மேலே குறிக்கப்பட்டுள்ள தலை அணிகள், காதணிகள், மார்பணிகள், இடையணிகள், காலணிகள் அனைத்தும் காணப்படுகின்றன.

வயிரவன்பட்டி, கீழச்சிவற்பட்டி, தேவகோட்டை, காரைக்குடி, கோட்டையூர்,குருவிக்கொண்டான்பட்டி முதலிய ஊர்களில் உள்ள நகரச் சிவாலயங்களில் உள்ள பிரம்மாவின் சிலை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

### 4.1.10. பெருமாள் சிற்பம்

நகரத்தார்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள், எனினும் சமயப் பொறை உடையவர்கள். எனவே அவர்கள் கட்டிய நகரச் சிவன்கோயிலிலும் திருச்சுற்றின் தென்மேற்கு மூலையிலோ, மேற்குப் பகுதியிலோ திருமாலுக்கும் ஒரு சிற கோயிலைக் கட்டியுள்ளனர். பெருமாளுக்கென்றே தனிக்கோயிலையும் பல ஊர்களில் கட்டியுள்ளனர். அவை பெருமாள் கோயில் என்ற பெயரில் விளங்கி வருகின்றன.

பெருமாள் சிற்பத்தின் இலக்கணத்தை மானசாரம்,[23] ஸ்ரீ ஸாரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரம்,[24] ஆகிய நூல்கள் கூறுகின்றன.

விஷ்ணுவின் வடிவம் நான்கு கைகளையுடையது. இரண்டு கண்களையுடையது. கிரீடமகுடத்துடன் கூடியது. மஞ்சள் படை தரிப்பது அழகியது. சியாமளவர்ணத்தினால் (பசும்புல் நிறத்தினால்) உடலின் சோபை கொண்டது.

முழுமையான மார்பிலும் மேலே ஸ்ரீவத்ஸனெனும் மருவைச் செய்ய வேண்டும். உத்தம தசதாளத்தால் கணக்கிட வேண்டும்.

உட்கைகளிரண்டில் இடக்கரத்தில் கடகம் தரிக்கப்பட்டிருக்க வேண்டும். அவ்வண்ணமே, பூமியிற் படிப்படியான கதையெனும் ஆயுதத்தைத் தரித்திருக்க வேண்டும் அல்லது இக்கரமானது வரத்தைக் கொடுப்பதாகவும் இருக்கலாம்.

வலக் கரத்திலோ (உட்கை வலது) அபயம் தரித்திருக்க வேண்டும். வெளிக்கரங்களிரண்டில் வலது கரத்தின் மேல்பாகம் சக்கராயுதத்துடன்

கூடியதாகயிருக்கவேண்டும். மற்றொன்றாகிய இடது கரத்திலோ பாஞ்சஜன்யமென்ற சலங்கைத் தரிக்க வேண்டும்.

இரு காதுகளுக்கும் சமமாயிருக்கும்படி கரணபாத்ரங்களையோ, மகர குண்டலங்களையோ அணிவிக்கவேண்டும். இந்த விஷ்ணு பிம்பமானது, தெளிந்த முகமுடையது. உயர்ந்த நாசியுடையது. நீண்ட கண்களுடன் விளங்குவது.

ஆரம், கழுத்தைச் சுற்றி விளங்கும் உபக்ரீவம், ஆகியவற்றுடன் கூடியது. யஞ்ஞ சூத்திரத்தினால் உத்தரீயம் உடையது. பாஹிமாலைகளால் அலங்கரிக்கப்பெற்றது. ரத்னங்களாலாகிய உதரபந்தம் (வயிற்றைச் சுற்றியபட்டிகை) இருக்க வேண்டும்.

கடகத்தையும் அரைஞான் கயிற்றையும் தோள்வளையையும் அத்தோள்வளையில் ரத்னமயமான பூரிதத்தையும் அணிவிப்பதுடன், ரத்னமோதிரங்களுடன் கூடியதாகவும் பாதசரங்களினால் அலங்கரிக்கப் பெற்றதாகவுமாக்க வேண்டும்.

இடையில் மஞ்சள் பட்டாடை இருக்க வேண்டும். இப்பட்டாடை சலாந்தம் முதல் நளகாந்தம் வரை தொங்கவேண்டும். (இடையிலுள்ள பட்டிகையின் முகப்பு = சலம்) சிரத்திலுள்ள கிரீடத்தின் பின்புறத்தில் சிரஸ்சக்ரம் எனும் வட்டவடிவமான ரத்னமயமான அலங்காரம் இணைந்திருக்க வேண்டும். அவயபூஷணங்களனைத்தும் அணிவிக்கப் பெற்றிருக்க வேண்டும்.

இருபுறங்களிலும் கண்டங்கால் முடிவை அளவாகக் கொண்டு மனோஹரமான வனமாலை இருக்க வேண்டும். இவ்வாறாகிய இந்த விஷ்ணுவின் வடிவம் இரு பக்கங்களிலும் சக்திகளுடன் கூடியதாக இருக்க வேண்டும் என்று மானசாரம் கூறுகின்றது. ஸ்ரீ ஸாரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரமும், ப்ராஹ்மீய சித்ர கர்ம காஸ்திரமும் இதே இலக்கணங்களையே கூறுகின்றன.

நகரத்தார் கட்டிய கோயில்களில் உள்ள பெருமாளின் உருவம் பெரும்பாலும் தசரதராமன் வடிவத்தில் சீதை இலக்குமணருடன் காணப்படுகிறது. சில இடங்களிலேயே பிற வடிவங்களிலும் காணப்படுகின்றன. கீழச்சிவற்பட்டியில் சுந்தரராஜப் பெருமாளாகவும்,, மாத்தூரில்வரதராஜப் பெருமாளாகவும் இளையாத்தன்குடியில் ஆதிகேசவப் பெருமாளாகவும், இரணியூரில் நீலமேகப் பெருமாளாகவும் பெருமாளின் வடிவங்கள் வழிபடப் பெறுகின்றன.

பெருமாளின் நான்கு கைகளில் வலக்கைகளில் சக்கரத்தினையும் வரத முத்திரையினையும் இடக் கைகளில் சங்கினையும் அபய முத்திரையினையும் காண முடிகின்றது.

பெருமாளின் மார்பில் ஸ்ரீவத்ஸமெனும் மரு காணப்படுகிறது. தலையல் கிரீட மகுடத்துடன் காதணிகள், கழுத்தணிகள், மார்பணிகள், இடையணிகள், காலணிகள் அனைத்தும் பெற்று அழகுமிக்கதாக அமைந்துள்ளது.

கீழச்சிவற்பட்டி சுந்தரராஜப்பெருமாள் சிற்பமும், இரணியூர் நீலமேகப் பெருமாள் சிற்பமும் மாத்தூர் வரதராஜப் பெருமாள் சிற்பமும், இளையாத்தன்குடி ஆதிகேசவப் பெருமாள் சிற்பமும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

## 4.1.11. மகாலெட்சுமி சிற்பம்

கோயில் திருச்சுற்றின் வடமேற்கு மூலையில் மகா லெட்சுமிக்குத் தனித் சிறுகோயில் ஒன்றினை அமைப்பது நகரத்தார் வழக்கமாகும்.

இம்மகாலெட்சுமியின் உருவ அமைதி மானசாரத்தில் கூறப் பெற்றுள்ள சிற்ப இலக்கணத்திற்குப் பொருத்தமாக உள்ளது.[26]

மகாலெட்சுமி தாமரை மலரில் பத்மாசனமிட்டுக் காணப்படுகிறாள். நான்கு கரங்களில் அபய முத்திரையும வரதமுத்திரையும் ஜபமணி மாலையும் தாமரை மலரும் உள்ளன. கிரீட மகுடம் எனும் தலையணியிலிருந்து ரத்ன மோதிரங்கள் நிறைந்த கால்விரலணிகள் வரை எல்லாவிதமான அலங்காரங்களுடனும் காணப்படுகிறாள். இத்தேவியின் இருபுறத்திலும் ஐராவதமெனும் இந்திரனின் வெள்ளை யானைகள் இரண்டு காணப்படுகின்றன.

கீழச்சிவற்பட்டி, இரணியூர், வயிரவன்பட்டி, கோட்டையூர், கோயிலூர், தேவகோட்டை ஆகிய ஊர்களில் உள்ள மகாலெட்சுமி சிற்பங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

## 4.1.12. நவக்கிரகச் சிற்பங்கள்

சிவன் கோயிலில் உள்ள முதல் திருச்சுற்றின் வடக்குப் பகுதியிலோ வடகிழக்கு மூலையிலோ நவக்கிரகங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

சூரியன் நடுவில் காணப்படுகிறார். அவரைச் சுற்றிலும் கேது, ராகு, செவ்வாய், சந்திரன், சுக்கிரன், புதன், குரு, சனீஸ்வரன் ஆகியோர் காணப்படுகின்றனர்.

வயிரவன் கோயில், இரணியூர் முதலிய ஊர்களில் நவக்கிரகங்கள் நின்ற நிலையில் காணப்படுகின்றனர். இரணியூரில் நவக்கிரகங்கள் ஒவ்வொன்றும் 46 செ.மீ. உயரம் உள்ளது. வயிரவன் கோயிலில் சனீஸ்வரனின் உயரம் 50 செ.மீ. கேதுவின் உயரம் 52 செ.மீ. சூரியன், ராகு ஆகியோரின் உயரம் 56 செ.மீ. செவ்வாய், சந்திரன், சுக்கிரன், புதன், குரு ஆகியோரின் உயரம் 58 செ.மீ.

கீழச்சிவற்பட்டி நகரச் சிவன்கோயிலில் உள்ள நவக்கிரகங்கள் அமர்ந்த நிலையில் காணப்படுகின்றன. ஒவ்வொருவரின் உயரமும் 39 செ.மீ. (நி.ப.எ.13).

### 4.1.13. தலவிருட்சச் சிற்பம்

மரவழிபாடு மிகப் பழங்காலத்திலிருந்தே கைகொள்ளப்பட்டு வருகின்றது. மரத்தின் அடிப்பகுதியிலேயே கந்து எனும் லிங்க வடிவில் இறைவனை வழிபட்டமைனத் தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு, திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை ஆகிய இலக்கியங்கள் கூறுகின்றன.[27]

கடம்ப மரத்தின் அடியிலேயே முருகனை வழிபட்டுள்ளனர் என்பதைப் பரிபாடல், திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை ஆகியன குறிப்பிடுகின்றன.[28]

இவ்வாறு எந்த மரத்தின் அடியில் தெய்வ உருவங்கள் வைத்து வழிபடப் பெற்றனவோ அந்த மரத்தினைத் 'தலவிருட்சம்' என்ற பெயரில் வழிபடுவது நகரத்தாரின் மரபு.

தலவிருட்சம் இன்றும் உயிரோடிருந்தால் அதனைச் சுற்றிலும் மேடையமைத்து வழபடுகின்றனர். மாத்தூரில் உள்ள மகிழமர வழிபாடு இதற்குச் சரியான சான்றாகும்.

தலவிருட்சம் அவ்வாறு உயிரோடு இல்லாதிருப்பின் அம்மரம் இருந்த இடத்தில் அம்மரத்தினைப் போன்ற சிற்பத்தைச் செதுக்கி வைத்து வழிபடுவது நகரத்தார் மரபாகும். அதுதான் ஆதிகாலத்தில் கோயில் இருந்த

இடம் என்பதால் அம் மரத்தின் வடிவம் மட்டுமோ, அல்லது மரத்தினடியில் சிவனும் உமையும் ரிஷப வாகனத்தில் அமர்ந்துள்ளது போலவோ சிற்பம் வடிக்கப்பெறும்.

வயிரவன் கோயிலில் கருவறைக்கு வடக்குப் பகுதியில் அழிஞ்சி மரத்தின் சிற்பம் வழிபாட்டில் உள்ளது. உயரம் 1.42 மீட்டர் ஆகும். அதற்குக் கீழே கிழக்குத் திரையில் 40 செ,.மீ. உயரமுள்ள நாகலிங்கமும் தெற்கே 48 செ.மீ. உயரமுள்ள நாகலிங்கமும் உள்ளன. (நி.ப.எ.14).

கீழச்சிவற்பட்டியில் முதல் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் பலாமரச் சிற்பம் 1.49 மீட்டர் உயரத்தில் உள்ளது. அதில் பலாமரத்தின் கிளைகளும் பலாக்கனிகளும் மிக அழகாக செதுக்கப்பட்டுள்ளன. அப்பலாமரத்தின் கீழே 65 செ.மீ. உயரத்தில் திருவாசியும் அதனுள் ரிஷப வாகனத்தில் சிவனும் உமையும் அமர்ந்து அருள்புரியும் காட்சியும் மிகச் சிறப்பாகச் சிலை வடிக்கப்பெற்றுள்ளன. (நி.ப.எ. 15).

இதுபோல் இளையாத்தன்குடியில் பில்வமரமும் இலுப்பைக் குடியில் இலுப்பை மரமும் பிள்ளையார்பட்டியில் மருதமரமும் வழிபாட்டில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

### 4.1.14. நந்திகேசுவரர் சிற்பம்

பதி, பசு, பாசம் எனும் மூன்று சைவசித்தாந்தக் கொள்கைகளின் குறியீடுகளாக இருப்பவை லிங்கம், நந்தி பலிபீடம் ஆகியன. உயிர்கள் எப்போதும் இறைவனையே முன்நிறுத்தி வழிபடவேண்டும் எனபதற்காக நந்தியினை இறைவன் சன்னிதியில் அமைப்பது வழக்கம்.

சிவபூசையில் மிகுந்த ஈடுபாடு கொண்ட நகரத்தார்கள் நந்தியைப் பிற கோயில்களில் உள்ளது போலத் தளத்திலேயே வைக்காமல், அதற்கென ஒரு மண்டபத்தினையும் மேடையினையும் அமைத்து அதன்மேல் நந்தியினை வைத்துள்ளனர்.

64 செ.மீ. உயரமுள்ள நந்தியின் தோற்றம், வீழ்ந்து இறைவனை வணங்குவது போல உள்ளது. கம்பீரமாக நிமிர்ந்திருக்கும் முகத்தோற்றமும் பெருத்திருக்கும் திமிலும் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன.

வேந்தன்பட்டியில் மீனாட்சி சொக்கலிங்கேசுவரா ஆலயத்தில் உள்ள நந்தியில் உருவம் மிகச் சிறப்பான தோற்றப் பொலிவுடையது.

மாத்தூரில் உள்ள நந்திக்குச் சிம்ம பீடம் அமைக்கப்பட்டுள்ளது. அப்பீடத்தினை நான்கு சிங்கங்கள் தாங்குவதாகச் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. வயிரவன்பட்டியில் நந்திக்குத் தனி மண்டபம் கட்டப்பட்டுள்ளது (நி.ப.எ.16.).

### 4.1.14அ. கொற்றவை சிற்பம

நகரச் சிவன் கோயிலில் உள்ள அம்மன் வழபாடு தவிரத் தனியாகவே பல கோயில்கள் வழிபாட்டில் உள்ளன.

நகரச் சிவன் கோயிலில் உள்ள அம்மனுக்குச் சைவ உணவும், அம்மன் கோயிலில் உள்ள அம்மனுக்கு அசைவப் பலி உணவும் படைக்கப்படுகின்றன. நாட்டரசன்கோட்டைக் கண்ணுடைய நாயகியின் சிற்பம் குறிப்பிடத்தக்கது. அசுரனைக் கொன்ற நிலையில் சூலம் ஏந்தியுள்ள இந்த அம்மன் வழிபாடு கொற்றவை வழிபாடேயாகும்.

கண்ணகியின் வரலாறுதான் நம் நாட்டில் நாளடைவில் திரிந்து, திரௌபதியம்மன் திருவிழாவாக மாறியதென்று, ஔவை. துரைசாமி அவர்கள் குறிப்பிடுவார்கள்.[28அ] ஆனால் அச்சிற்பத்தின் அமைப்புமுறை கொற்றவையாகவே காணப்படுகின்றது.

கண்ணுடைய நாயகி எண்கரக் காளியாகக் காட்சியளிக்கின்றாள். வலப்புறமுள்ள நான்கு கைகளில் சூலம், பாம்பு சுற்றிய உடுக்கை, வாள், தூபக்கால் ஆகியனவற்றையும், இடப்புறமுள்ள நான்கு கைகளில் கபாலம், பாம்பு, கேடயம், மணி ஆகியவற்றையும் ஏந்தியுள்ளாள். கொற்றவைக்கே உரிய அக்கினி கேசமும், நீண்ட கடைவாய்ப் பற்களும் காணப்படுகின்றன. வலக்காலை மடித்துப் பீடத்தின் மேல் இடக்காலை அரக்கனின் வயிற்றில் மிதித்துள்ளாள்.

கண்ணகி ஒருமுலை இழந்த திருமா பத்தினி. இச்சிற்பத்தில் இரண்டு மார்புகளும் கயிற்றுக் கச்சால் இழுத்துக் கட்டப்பட்டுள்ளன. எனவே, இச்சிற்பம் கண்ணகியின் சிற்பமன்று என்பது புலனாகிறது.

அக்கோயிலில் உள்ள களியாட்டக் கண்ணாத்தாள் உலாவரும் திருமேனியும் கொறற்வையின் வடிவாகவே அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கது.

கண்ணுடையம்மன் பள்ளு பற்றி ஆய்வு நூல் எழுதியுள்ள பேராசிரியர் இராம. சிவசுப்பிரமணியன் கண்ணுடைய நாயகியின் கற்சிற்பம் [28ஆ] பிரண்டகுளம் என்னும் ஊரிலிருந்து எடுத்துவரப்பட்டது என்பார். எனவே, பழமையான இச்சிலை கண்ணகியின் சிலை அன்று; பாலைத் தெய்வமான கொற்றவையின் வடிவமே என்று உறுதியாகக் கூறலாம்.

நகரத்தார்கள் வாழும் ஊர்களில் இக்கொற்றவை வழிபாடு நடைபெறும் கோயிலைப் பத்திரகாளியம்மன் கோயில், எல்லைப் பிடாரி கோயில், பொன்னழகி அம்மன் கோயில், முத்துமாரியம்மன் கோயில் என் வழங்குகின்றனர்.

### 4.1.14ஆ. சேக்கிழார் சிற்பம்

நகரத்தார்கள், அறுபத்து மூன்று நாயன்மார்களுக்குச் சிலை எடுத்துள்ளது போலவே சேக்கிழாருக்கும் சிலை எடுத்துள்ளனர்.

சேக்கிழார் சிற்பம் தேவகோட்டை நகரச் சிவன் கோயிலிலும், வேலங்குடி கண்டீசர் கோயிலிலும் காணப்படுகிறது.

தேவகோட்டையில் உள்ள சேக்கிழார் சிற்பம் சிறப்பு வாய்ந்தது. கண்ணகி சிலைக்கு இமயத்திலிருந்து கல் கொண்டு வந்ததைப் போலச் சேக்கிழார் பிறந்த குன்றத்தூரிலிருந்து கல் கொண்டுவந்து இச்சிற்பத்தினைச் செய்துள்ளனர்.

ஆடல்வல்லான் சிற்றாலயத்தின் மேற்புறம் சேக்கிழார் சிற்றாலயம் உள்ளது. சேக்கிழார் சிற்பத்தின் உயரம் 60 செ.மீ. இரண்டு கைகளில் வரத முத்திரையினையும் கடக முத்திரையினையும் ஏந்தி, நின்ற திருக்கோலத்தில் காணப்படுகின்றார்.

வேலங்குடியில் சமயக் குரவர் நால்வருடன் சேக்கிழார் சிலையும் காணப்படுகிறது. இச்சிற்பத்தின் உயரம் 40 செ.மீ.

### 4.1.15. சண்டேசுவரர் சிற்பம்

சிவன் கோயிலின் காவல் தெய்வம் சண்டேசுவரர். கர்ப்பக்கிரகத்தின் வடக்குப் பகுதியில் சண்டேசுவரரின் சிறுகோயில் அமைந்துள்ளது. வயிரவன் கோயிலில் உள்ள சண்டேசுவரரின் மண்டபம் ஒரே ஒரு கல்லால்-பல்லவர் பாணியில் குடைந்து செய்யப்பெற்றது. சண்டேசுவரரின் உயரம் 70 செ.மீ. அமர்ந்த நிலையில் கோடாரியைக் கையில் வைத்துள்ளார். இரணியூரில் உள்ள சண்டேசுவரரின் உயரம் 76 செ.மீ. இச்சிற்பம் மிகப் பழைய சிற்பமாகக் காணப்படுகின்றது. கீழச்சிவற்பட்டியில் உள்ள சண்டேசுவரர் சிற்பம் 55 செ.மீ. உயரம் உள்ளது.

### 4.1.16. பிற சிற்பங்கள்

நகரத்தார் கட்டியுள்ள கோயில்களில் உள்ள பிற சிற்பங்களைப் பற்றியும் குறிப்பிடவேண்டும். எனவே, வயிரவன்பட்டிக் கோயிலில் வழிபாட்டில் உள்ள சிற்பங்களை ஆய்வாளர் கீழே கொடுத்துள்ளார்.

#### 4.1.16.1. இராஜ கோபுரம்

4.1.16.1.1. முன் மண்டப விநாயகர்
4.1.16.1.2. முப்பலிக் கருப்பர் பீடம்
4.1.16.1.3. சப்தமாதர் பீடங்கள்

#### 4.1.16.2. கொடி மர மண்டபம்

4.1.16.2.1 கொடிமரம்
4.1.16.2.2 பலிபீடம்
4.1.16..2.3 நந்தி

#### 4.1.16.3 வளரொளிநாதர் சன்னிதி

4.1.16.3.1 வளரொளிநாதர்
4.1.16.3.2 விநாயகர்
4.1.16.3.3 முருகன்
4.1.16.3.4 ஆகாசபைரவர்

| | |
|---|---|
| 4.1.16.3.5 | துவாரபாலகர் |
| 4.1.16.3.6 | துவாரபாலகர் |

### 4.1.16.4 வயிரவர் சன்னதி

| | |
|---|---|
| 4.1.16.4.1 | வயிரவர் |
| 4.1.16.4.2 | துவாரபாலகர் |
| 4.1.16.4.3 | துவாரபாலகர் |
| 4.1.16.4.4 | தெய்னாஞ் செட்டியார் சதாசேவைச் சிற்பம் |

### 4.1.16.5 வடிவுடையம்மை சன்னதி

| | |
|---|---|
| 4.1.16.5.1 | வடிவுடையம்மை |
| 4.1.16.5.2 | துவார சக்தி |
| 4.1.16.5.3 | துவார சக்தி |

### 4.1.16.6 கருவரைக் கோட்டங்கள்

| | |
|---|---|
| 4.1.16.6.1 | நர்த்தன விநாயர் |
| 4.1.16.6.2 | தட்சிணாமூர்த்தி |
| 4.1.16.6.3 | அண்ணாமலையார் |
| 4.1.16.6.4 | துர்க்கை |
| 4.1.16.6.5 | பிரம்மா |

### 4.1.16.7 முதல் திருச்சுற்று

| | |
|---|---|
| 4.1.16.7.1. | சூரியன் |
| 4.1.16.7.2. | விஸ்வநாதர் |
| 4.1.16.7.3. | நந்தி |
| 4.1.16.7.4. | விசாலாட்சி |
| 4.1.16.7.5. | விநாயகர் |
| 4.1.16.7.6. | திருஞானசம்பந்த சுவாமிகள் |
| 4 1 16.7.7. | திருநாவுக்கரசு சுவாமிகள் |
| 4.1.16.7.8. | மாணிக்கவாசகர் சுவாமிகள் |
| 4.1.16.7.9. | சுந்தரமூர்த்தி சுவாமிகள் |
| 4.1.16.7.10. | தில்லைவாழ் அந்தணர் |

4.1.16.7.11. திருநீலகண்ட நாயனார்
4.1.16.7.12. இயற்பகை நாயனார்
4.1.16.7.13. இளையான்குடி மாற நாயனார்
4.1.16.7.14. மெய்ப்பொருள் நாயனார்
4.1.16.7.15. விறன்மீண்ட நாயனார்
4.1.16.7.16. அமர்நீதி நாயனார்
4.1.16.7.17. எறிபத்த நாயனார்
4.1.16.7.18. ஏனாதி நாயனார்
4.1.16.7.19. கண்ணப்ப நாயனார்
4.1.16.7.20. குங்கிலியக்கலைய நாயனார்
4.1.16.7.21. மாணிக்கஞ்சார நாயனார்
4.1.16.7.22. அரிவட்டாய நாயனார்
4.1.16.7.23. ஆனாய நாயனார்
4.1.16.7.24. மூர்த்தி நாயனார்
4.1.16.7.25. முருக நாயனார்
4.1.16.7.26. உருத்திர பசுபதி நாயனார்
4.1.16.7.27. திருநாளைப்போவார் நாயனார்
4.1.16.7.28. திருக்குறிப்புத் தொண்டர் நாயனார்
4.1.16.7.29. சண்டேசுவர நாயனார்
4.1.16.7.30. திருநாவுக்கரசு சுவாமிகள்
4.1.16.7.31. குலச்சிறை நாயனார்
4.1.16.7.32. பெருமிழலைக் குறும்ப நாயனார்
4.1.16.7.33. காரைக்கால் அம்மையார்
4.1.16.7.34. அப்பூதி அடிகள் நாயனார்
4.1.16.7.35. திருநீலநக்க நாயனார்
4.1.16.7.36. நமிநந்தி அடிகள் நாயனார்
4.1.16.7.37. திருஞானசம்பந்தர் சுவாமிகள்
4.1.16.7.38. ஏயர்கோன் கலிக்காம நாயனார்
4.1.16.7.39. திருமூல நாயனார்
4.1.16.7.40. தண்டியடிகள் நாயனார்
4.1.16.7.41. மூர்க்க நாயனார்
4.1.16.7.42. சோமாசிமார நாயனார்
4.1.16.7.43. சிறப்புலி நாயனார்
4.1.16.7.44. சாக்கிய நாயனார்
4.1.16.7.45. சிறுத்தொண்ட நாயனார்
4.1.16.7.46. சேரமான் பெருமாள் நாயனார்

| | |
|---|---|
| 4.1.16.7.47. | கணநாத நாயனார் |
| 4.1.16.7.48. | கூற்றுவ நாயனார் |
| 4.1.16.7.49. | பொய்யடிமையில்லாத நாயனார் |
| 4.1.16.7.50. | புகழ்ச்சோழ நாயனார் |
| 4.1.16.7.51. | நரசிங்க முனையரை நாயனார் |
| 4.1.16.7.52. | அதிபத்த நாயனார் |
| 4.1.16.7.53. | கலிக்கம்ப நாயனார் |
| 4.1.16.7.54. | கலிய நாயனார் |
| 4.1.16.7.55. | சத்தி நாயனார் |
| 4.1.16.7.56. | ஐயடிகள் காடவர்கோன் நாயனார் |
| 4.1.16.7.57. | கணம்புல்ல நாயனார் |
| 4.1.16.7.58. | காரி நாயனார் |
| 4.1.16.7.59. | நின்றசீர் நெடுமாற நாயனார் |
| 4.1.16.7.60. | வாயிலார் நாயனார் |
| 4.1.16.7.61. | மனையடுவார் நாயனார் |
| 4.1.16.7.62. | கழற்சிங்க நாயனார் |
| 4.1.16.7.63. | இடங்கழி நாயனார் |
| 4.1.16.7.64. | செருத்துணை நாயனார் |
| 4.1.16.7.65. | புகழ்த்துணை நாயனார் |
| 4.1.16.7.66. | கோட்புலி நாயனார் |
| 4.1.16.7.67. | பந்தராய்ப் பணிவார் |
| 4.1.16.7.68. | பரமனையை பாடுவார் |
| 4.1.16.7.69. | சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் |
| 4.1.16.7.70. | முப்பொழுதும் திருமேனி தீண்டுவார் |
| 4.1.16.7.71. | திருவாரூர்ப் பிறந்தார் |
| 4.1.16.7.72. | முழுநீறு பூசிய முனிவர் |
| 4.1.16.7.73. | அப்பாலும் அடிசார்ந்தார் |
| 4.1.16.7.74. | பூசலார் நாயனார் |
| 4.1.16.7.75. | மங்கையர்க்கரசியார் |
| 4.1.16.7.76. | நேசநாயனார் |
| 4.1.16.7.77. | கோச்செங்கட் சோழ நாயனார் |
| 4.1.16.7.78. | திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் |
| 4.1.16.7.79. | சடைய நாயனார் |
| 4.1.16.7.80. | இசை ஞானியார் |
| 4.1.16.7.81. | சுந்தரமூர்த்தி சுவாமிகள் |
| 4.1.16.7.82. | விநாயகர் |

| | |
|---|---|
| 4.1.16.7.83. | சொக்கஞ் செட்டியார் சதாசேவைச்சிலை |
| 4.1.16.7.84. | ஆறுமுகன் |
| 4.1.16.7.85. | தெய்வானை |
| 4.1.16.7.86. | வள்ளியம்மை |
| 4.1.16.7.87. | மயில் |
| 4.1.16.7.88. | மகாலெட்சுமி |
| 4.1.16.7.89. | சரஸ்வதி |
| 4.1.16.7.90. | அழிஞ்சி மரம் |
| 4.1.16.7.91. | நாகலிங்கம் |
| 4.1.16.7.92. | நாகலிங்கம் |
| 4.1.16.7.93. | சூரியன் |
| 4.1.16.7.94. | சனீஸ்வரன் |
| 4.1.16.7.95. | கேது |
| 4.1.16.7.96. | ராகு |
| 4.1.16.7.97. | செவ்வாய் |
| 4.1.16.7.98. | சந்திரன் |
| 4.1.16.7.99. | சுக்கிரன் |
| 4.1.16.7.100. | புதன் |
| 4.1.16.7.101. | குரு |
| 4.1.16.7.102. | சனீஸ்வரன் |
| 4.1.16.7.103. | சந்திரன் |

ஆக மொத்தம் 127 கற்சிற்பங்கள் வயிரவன்பட்டிக் கோயிலில் வழிபாட்டில் உள்ளன

### 4.1.17. சதாசேவைச் சிற்பங்கள்

மேற்கண்டவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன தெய்னாஞ் செட்டியார், சொக்கஞ் செட்டியார் ஆகியோருடைய சதாசேவைச் சிற்பங்களாகும்.

இறை அடியார்களுடைய சிற்ப அமைப்பிற்கும் மானசாரம் இலக்கணம் கூறுகின்றது.[29] இறைவனிடத்தே கொண்டுள்ள பக்தியின் அடிப்படையில் இறையடியார்களுடைய பக்தி நிலையில் நான்கு வகையினைக் குறிப்பிடுகின்றது. அவையாவன:

1. ஸாலோக்யம்
2. ஸாமீப்யம்
3. ஸாரூப்யம்
4. ஸாயுஜ்யம்

பக்தியின் முதிர்ந்த நிலையில் இறைவனுடன் கலந்திருத்தலை ஸாயுஜ்யம் எனக் கூறுகின்றது. வயிவரவன்பட்டியில் உள சதாசேவை பக்தர்கள் ஸாயுஜ்ய நிலையில் நின்று வணங்குவதைக் காணமுடிகின்றது.

### 4.1.17.1. தெய்னாஞ் செட்டியார் சதாசேவை

வயிரவர் சன்னதிக்கு முன்பாகத் தெய்னாஞ் செட்டியார் சிற்பம் காணப்படுகின்றது. இச்சிறபம் 1.35 மீட்டர் உயரம் உள்ளது. (நி.ப.எ.17)

தலையைத் தலைப்பாகை அலங்கரிக்கிறது. நெற்றியில் திருநீறும், கழுத்தில் உருத்திராட்சமும் காதில் நான்கு வளையங்களும் கையில் கைச் சங்கிலியும் மோதிரமும் காணப்படுகின்றன. பஞ்சகச்ச பாணியில் வேட்டி கட்டப்பட்டுள்ளது. அஞ்சலி ஹஸ்த முத்திரையில் எப்போதும் இறைவனை வணங்கும் நிலையில் கைகள் அமைந்துள்ளன.

### 4.1.17.2. சொக்கலிங்கசெட்டியார் சதாசேவை

இச்சிற்பம் 1.40 மீட்டர் உயரம் உள்ளது. சிற்ப அமைதியில் தெய்னாஞ் செட்டியார் சிற்பம் போலவே அஞ்சலி ஹஸ்த முத்திரையுடன் நின்ற கோலத்தில் காணப்படுகின்றது.

### 4.1.18. தூண் சிற்பங்கள்

வழிபாட்டில் இல்லாமல் தனியாக தூண்களிலும் கருவறைச் சுவர்களிலும் உள்ள சிற்பங்கள் இங்கு எடுத்தாளப்படுகின்றன.

### 4.1.18.1. வயிரவன் பட்டியில் உள்ள தூண் சிற்பங்கள்

**4.1.18.1.1. வளரொளி நாதர் சன்னிதியில் உள்ளவை**

| | |
|---|---|
| 4.1.18.1.1.1. | இராமர் (1.5 மீட்டம் உயரம்) |
| 4.1.18.1.1.2. | சீதை (1.45 " ) |
| 4.1.18.1.1.3. | வேடன் (1.60 " ) |
| 4.1.18.1.1.4. | வேட்டுவச்சி (1.50" ) |
| 4.1.18.1.1.5. | மன்மதன் (1.70 " ) |
| 4.1.18.1.1.6. | ரதி (1.65 " ) |
| 4.1.18.1.1.7. | யாழ்மங்கை(1.40 " ) |
| 4.1.18.1.1.8. | துவாரசக்தி (1.10 " ) |
| 4.1.18.1.1.9. | ராஜராஜேஸ்வரி (1.15 " ) |
| 4.1.18.1.1.10. | துவார சக்தி (1.10 " ) |
| 4.1.18.1.1.11. | மாணிக்கவாசகர் (1.50" ) |
| 4.1.18.1.1.12. | நடராஜர் (1.25" ) |
| 4.1.18.1.1.13. | அக்னி வீரபத்திரர் (1.10 ") |
| 4.1.18.1.1.14 | ருத்ர சம்ஹார மூர்த்தி (1.20 " ) |
| 4.1.18.1.1.15 | தெய்னாஞ் செட்டியார் (1.35 மீட்டர் உயரம்) |
| 4.1.18.1.1.16 | வயிரவர் (1.00 " ) |
| 4.1.18.1.1.17 | நடன காளி (1.00 " ) |
| 4.1.18.1.1.18 | ருத்ரதாண்டவர் (1.20 " ) |

**4.1.18.1.2. நடராஜர் சன்னதியில் உள்ளவை**

| | |
|---|---|
| 4.1.18.1.2.1. | குதிரை வீரர்கள் (2.10 மீட்டர் உயரம்) |
| 4.1.18.1.2.2. | குதிரை வீரர்கள் (2.20 " ) |
| 4.1.18.1.2.3 | கல்யாணசுந்தரர் (1.10 " ) |
| 4.1.18.1.2.4. | கண்ணப்பர் கண்கொடுத்தல் (95 செ.மீ " ) |
| 4.1.18.1.2.5. | யானைத் தோலுரித்தவர் (40 செ.மீ.) " ) |
| 4.1.18.1.2.6. | ஆறுமுகம் (30 செ.மீ. " ) |
| 4.1.18.1.2.7. | அகோரவீரபத்திரர் ( 46 செ.மீ. " ) |
| 4.1.18.1.2.8. | காளி ( 40 செ.மீ " ) |

**4.1.18.1.3. முதல் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் உள்ளவை**

| | |
|---|---|
| 4.1.18.1.3.1. | இலக்குமணன் (1.50 மீட்டர் உயரம்) |
| 4.1.18.1.3.2. | சதாசேவை (1.60 " ) |

4.1.18.1.3.3. யாளியும் யானையும் ( 2.00 " )
4.1.18.1.3.4. யாளியும் யானையும் (2.00 " )

### 4.1.18.1.4. கருவறைச் சுவரில் உள்ளவை

4.1.18.1.4.1. யானைக்குக் கரும்பு கொடுக்கும் சிவன் (87 செ.மீ)
4.1.18.1.4.2. உமையொரு பாகன் (90 செ.மீ).)
4.1.18.1.4.3. சுந்தரர் (92 செ.மீ.)
4.1.18.1.4.4. வீரபத்திரர் (92 செ.மீ)
4.1.18.1.4.5. வயிரவர் (82 செ.மீ)
4.1.18.1.4.6. யானைக்குக் கரும்பு கொடுக்கும் சிவன் (90 செ.மீ)
4.1.18.1.4.7. தண்டாயுதபாணி (70 செ.மீ)
4.1.18.1.4.8. குழலூதும் கண்ணன் (82 செ.மீ)
4.1.18.1.4.9. அனுமன் (85 செ.மீ)
4.1.18.1.4.10. அனுமனை வணங்கும் இராமர் (77 செ.மீ)

வயிரவன்பட்டிக் கோயில் தூண்களில் உள்ள பெரிய சிற்பங்கள் முப்பது. கருவறைச் சுவரில் உள்ள பெரிய சிற்பங்கள் பத்து. இவை தவிரச் சிறிய அளவில் தூண்களிலும் கருவறைச் சுவரிலும் உள்ள சிற்பங்கள் அறுநூற்றுக்கும் மேற்பட்டவை.

## 4.1.18.2. இரணியூரில் உள்ள தூண் சிற்பங்கள்

### 4.1.18.2.1. ஆட்கொண்ட நாதர் சன்னிதியில் உள்ளவை

4.1.18.2.1.1. வல்லப விநாயகர் (1.10 மீட்டர் உயரம்)
4.1.18.2.1.2. காலசம்ஹாரமூர்த்தி (1.13. ")
4.1.18.2.1.3. ருத்திர மூர்த்தி (1.05 ")
4.1.18.2.1.4. தலாடரூபர் (1.02 ")
4.1.18.2.1.5. கல்யாண சுந்தரர் (1.06 ")
4.1.18.2.1.6. ருத்திர துர்க்கை (1.06 ")
4.1.18.2.1.7. ஸ்தூல துர்க்கை (1.06 ")
4.1.18.2.1.8. மகிடசம்ஹாரி (1.05 ")
4.1.18.2.1.9. மஹா துர்க்கை (1.06 செ.மீ. உயரம் )
4.1.18.2.1.10. ஜலதுர்க்கை (1.06 ")

4.1.18.2.1.11. சூலினி துர்க்கை (45 ")
4.1.18.2.1.12. நவதுர்க்கை (45 ")
4.1.18.2.1.13. விஷ்ணு துர்க்கை (1.02 ")
4.1.18.2.1.14. பிரம்ம துர்க்கை (1.05 ")
4.1.18.2.1.15. மாதொரு பாகர் (1.02 ")
4.1.18.2.1.16. விடைப்பாகர் (1.02 ")
4.1.18.2.1.17. பிட்சாடனர் (1.02 ")
4.1.18.2.1.18. அகோரமூர்த்தி (1.02 ")
4.1.18.2.1.19. வீரபத்திரர் (1.05 ")
4.1.18.2.1.20. முப்புரம் எரித்தவர் (1.78 ")
4.1.18.2.1.21. ஆறுமுகன் (1.10 ")

**4.1.18.2.2. அஷ்டலட்சுமி மண்டபத்தில் உள்ளவை**

4.1.18.2.1. விஜயலெட்சுமி (1.46 மீட்டர் உயரம்)
4.1.18.2.2. மகாலெட்சுமி ( " )
4.1.18.2.3. ஆதிலெட்சுமி ( " )
4.1.18.2.4. தனலெட்சுமி ( " )
4.1.18.2.5. சௌபாக்கிய லெட்சுமி ( " )
4.1.18.2.6. வீர லெட்சுமி ( " )
4.1.18.2.7. தான்யலெட்சுமி ( " )
4.1.18.2.8. சந்தான லெட்சுமி ( " )
4.1.18.2.9. யாளி
4.1.18.2.10. யாளி
4.1.18.2.11. யாளி
4.1.18.2.12. யாளி

**4.1.18.2.3. ராஜகோபுரத்தின் தளச் சுவரில் உள்ளவை**
(ஒவ்வொன்றும் 93 செ.மீ. உயரம்)

4.1.18.2.1. தட்சிணாமூர்த்தி
4.1.18.2.2. எமதருமன்
4.1.18.2.3. வயிரவர்
4.1.18.2.4. காளி
4.1.18.2.5. மாதொருபாகர்
4.1.18.2.6. திருவேங்கடமுடையான்

4.1.18.2.7. அக்கினிமூர்த்தி
4.1.18.2.8. துர்வாசர்
4.1.18.2.9. கூத்தாடும் விநாயகர்
4.1.18.2.10. துவார பாலகர்
4.1.18.2.11. துவார பாலகர்
4.1.18.2.12. பாலசுப்பிரமணியர்
4.1.18.2.13. மாணிக்கவாசகர்
4.1.18.2.14. இந்திரன்
4.1.18.2.15. முப்புரம் எரித்தவர்
4.1.18.2.16. வீரபத்திரர்
4.1.18.2.17. ஈசானமூர்த்தி
4.1.18.2.18. கௌரி
4.1.18.2.19. அகோரமூர்த்தி
4.1.18.2.20. பிரமன்
4.1.18.2.21. குபேரன்
4.1.18.2.22. மதுரைவீரன்
4.1.18.2.23. மகிடாசுரமர்த்தினி
4.1.18.2.24. ஊர்த்துவ தாண்டவர்
4.1.18.2.25. கூத்தாடும் காளி
4.1.18.2.26. வாயு பகவான்
4.1.18.2.27. ரதி
4.1.18.2.28. மன்மதன்
4.1.18.2.29. இரணியன், நரசிம்மன் போர்
4.1.18.2.30. இரண்ய சம்ஹாரம்
4.1.18.2.31. கல்யாண சுந்தரர்
4.1.18.2.32. வருணன்
4.1.18.2.33. மகாவிஷ்ணு
4.1.18.2.34. நரசிங்கம்
4.1.18.2.35. நிருதி (அக்னி) மூர்த்தி
4.1.18.2.36. மன்மதன்
4.1.18.2.37. ரதி
4.1.18.2.38. விடைப்பாகர்

இரணியூர்க் கோயில் தூண்களில் உள்ள பெரிய சிற்பங்கள் முப்பத்து மூன்று. இராஜகோபுரத் தளச் சுவரில் உள்ள பெரிய சிற்பங்கள் முப்பத்தெட்டு.

### 4.1.18.3. கீழச்சிவற்பட்டியில் உள்ள தூண் சிற்பங்கள்

#### 4.1.18.3.1. முன்மண்டபத் தூண்களில் உள்ளவை

4.1.18.3.1.1. வல்லப விநாயகர் (1 மீட்டர் உயரம்)
4.1.18.3.1.2. ஆறுமுகன் ( " )
4.1.18.3.1.3. கல்யாண சுந்தரர் ( " )
4.1.18.3.1.4. விடைப்பாகர் ( " )

#### 4.1.18.3.2. திருச்சுற்றுத் தூண்களில் உள்ளவை

4.1.18.3.2.1. தட்சிணாமூர்த்தி
4.1.18.3.2.2. முருகன்
4.1.18.3.2.3. தண்டாயுதபாணி
4.1.18.3.2.4. மாணிக்கவாசகர்
4.1.18.3.2.5. மதுரைவீரன்
4.1.18.3.2.6. இராமர்
4.1.18.3.2.7. இலிங்கம்
4.1.18.3.2.8. அனுமன்
4.1.18.3.2.9. நடனமாதர்
4.1.18.3.2.10. அமுதகலசம்
4.1.18.3.2.11. யாளி
4.1.18.3.2.12. குதிரை
4.1.18.3.2.13. யானை
4.1.18.3.2.14. கொக்கு
4.1.18.3.2.15. பசு
4.1.18.3.2.16. பாம்பு
4.1.18.3.2.17. முனிவர்
4.1.18.3.2.18. சிவகணம்

கீழச்சிவற்பட்டியக் கோயில் முன் மண்டபத் தூண்களில் உள்ள பெரிய சிற்பங்கள் நான்கு. திருச்சுற்றில் உள்ள நூற்று எண்பது தூண்களில் காணப்படும் சிறிய சிற்பங்கள் எழுநூற்று இருபது. அவற்றுள் பதினெட்டு வகையான சிற்பங்களே மீண்டும் மீண்டும் செதுக்கப்பட்டுள்ளன.

### 4.1.18.4. குறிப்பிடத்தக்க தூண் சிற்பங்கள்

#### 4.1.18.4.1. இராமர் - சீதை - இலட்சுமணர் சிற்பங்கள்

வயிரவன் பட்டியிலுள்ள இராமர் சீதை இலட்சுமணர் சிற்பங்கள் இரண்டு வகையில் குறிப்பிடத்தக்கதாக அமைந்துள்ளன.

சிவன் கோயிலில் வைணவச் சிற்பங்கள் அதன் வாயிலில் இருப்பது புதுமையானது. அழகுமிகுந்த சிற்ப அமைதியோடு கண்ணைக் கவரும் வகையில் சிலை வடிக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

இராமர் சிலையின் உயரம் 1.55 மீட்டர்: கிரீட மகுடத்தோடு கண்டிகை, சரப்பளி, சவடி முதலிய கழுத்தணிகளோடும், சன்னவீரம், பூணூல் முதலிய மார்பணிகளோடும், தோள்வளை, தோள்மாலை, கடகவளை, குடகம் முதலிய கையணிகளோடும் அரைப்பட்டிகை தாரகைச்சும்மை, உதரபந்தம் முதலிய இடையணிகளோடும், வீரக்கழல் முதலிய காலணிகளோடும் அழகின் திருவுருவாக இராமர் சிலை செதுக்கப்பட்டுள்ளது. இரண்டு திருக்கரங்களில் ஒன்றில் வில்லையும் மற்றொன்றில் வாளையும் பற்றியிருக்கின்றார்.

சீதை சிலையின் உயரம் 1.45 மீட்டர். புன்னகை தவழும் முகம் அழகூட்டுகிறது. அனைத்து அணிகளும் பூண்டுள்ளாள். ஒரு கையில் தாமரை மலரும் மறுகையில் டோலஹஸ்த முத்திரையும் காணப்படுகின்றன.

கேசபந்த முடி அலங்காரமும் பட்டாடையின் அமைதியோடு இடைக்கட்டுகளின் தொங்கு நிலையும் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இலக்குமணனின் உருவம் 1.50 மீட்டர் உயரம் உள்ளது. இராமர் சிலையில் காணப்படும் அலங்காரங்களுடன் ஒரு கையில் வில்லையும் மறுகையில் ஊருஹஸ்த முத்திரையினையும் கொண்டுள்ளார்.

#### 4.1.18.4.2. வேடன் வேட்டுவச்சி சிற்பங்கள்

திருவிளையாடற்புராணம்-மாபாதகம் தீர்த்தப்படலத்தில் இறைவன் வேடனாகவும் இறைவி வேட்டுவச்சியாகவும் வந்து மாபாவிக்கு அருள் செய்தமையை நினைவூட்டும் சிற்பங்கள் வேடன் வேட்டுவச்சியின் சிற்பங்கள்.

அவந்தி நகரில் மாபாவி என்பவன் தன் தாய்க்குப் பேரிழிவு செய்தான்; தந்தையைக் கொன்றான். அதனால் பேயாகத் திரிந்தான். மதுரைக்கு அவன் வந்தபோது அக்கடையனையும் கடைத் தேற்றுவதற்காக அம்மையப்பன் வேட்டுவன் கோலத்தில் மாபாவி முன்னே தோன்றினான்.

பாவ விலங்கை வேட்டையாடி அழிக்கவல்ல பெருமாள் திருப்பார்வை பட்ட அளவில், மாபாவி உள்ளம் கலங்கியது; கசிந்து உருகியது. கண்ணீர் வழந்தோடியது; அக்கண்ணீருடன் அவன் செய்த பாவமும் கரைந்தோடியது. இறைவன், இறைவியுடன் மாபாவிமுன் தோன்றிய தோற்றத்தைத்தான் சிற்பி, இவ்வழகுச் சிலைகளாக வடித்துள்ளான்.

"விடுவகை யன்றி வேறு
களைகணும் இன்றி, வீயக்
கடவனைக் காப்பதன்றோ
காப்பென்றான்" - இறைவன்.

ஆதலால், 'எவர் துணையும் இல்லானுக்கு இறைவனே துணையாகி நின்று பாவம் தீர்ப்பான்' என்பது இச்சிற்ப தத்துவத்தால் விளங்குகிறது.

கோயிலுக்கு வருபவர் எத்தகைய பாவியர் எனினும் உண்மையன்பால் உருகித், தாம் செய்த பாவத்தை உணர்ந்து, திருந்தி, நல்வழிப்படுவார்களானால், அவர்களுக்கு இறைவன் திருவருள் பாலிப்பது உறுதி என்பதை உலகோர்க்கு வெளிப்படையாகக் காட்டுவதற்கே இச்சிலைகளைத் திட்டமிட்டு வைத்தனர் என்பர்.[30]

இவை போன்ற சிற்பங்கள் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் உள்ளன, எனினும், அவை கோயிலின் இணைப்பு மண்டபத்தில்தான் இருக்கின்றன. இங்கு முன் மண்டபத்தில் - முதல் திருச்சுற்றில் கொடிமரத்தின் இரு பக்கத்திலும் இருப்பது மிகப் பொருத்தமாகவும் சிறப்பாகவும் அமைந்துள்ளது.

வேடன் சிலையின் உயரம் 1.60 மீட்டர். இது வேட்டுவக் குலத்தினரின் அங்க இலக்கணம் அனைத்து அமையப்பெற்ற சிற்பம் ஆகும். தலையில் கேசபந்தமும் முகத்தில் முறுக்கிவிட்ட மீசையும் வேடனின் தனித் தன்மையைக் காட்டுகின்றன. வேடனின் கழுத்தில் கண்டிகை, சரப்பளி, வாகுமாலை, மூன்று வடங்களைக் கொண்ட திரிசரி என்னும் மணியாரம்

ஆகியன காணப்படுகின்றன. கைகளில் தோள்வளையும் கடகவளையும் உள்ளன. இடையில் அரைப்பட்டிகை தாரகைச்சும்மை, மரவுரி ஆடை ஆகியன காணப்படுகின்றன. காலில் வீரக்கழல் உள்ளது. வேடன் குத்துவாளை ஒரு கைய்ல தாங்கியிருப்பதும் அவனுக்குக் கீழே ஒரு சிங்கம் பதுங்கியிருப்பதும் உண்மையான ஒரு வேட்டையாடும் காட்சியை நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றன (நி.ப.எ.18).

வேட்டுவச்சியின் தலைக்கோலம் நம்மில்லம் (தமிழம்) எனும் வகையைச் சார்ந்தது. இது, முடியை முறுக்கிக் கொடியாக்கி வளைத்துத் தலையின் பின்னணியில் சேர்த்து அமைத்துத் தலை உச்சிக்குமேல் தெரியுமாறு சேர்த்துக் கட்டி அமையும் தலைக்கோலமாகும். அதில் தொய்யகம், புல்லகம், கடிப்பு முதலிய தலையணிகளும், கண்டிகை, சரப்பளி, அரும்புச்சுரம், சவடி, தோள்மாலை, வாகுமாலை முதலிய கழுத்தணிகளும்; சன்னவீரம், உதரபந்தம , பூணூல் முதலிய மார்பணிகளும்; தோள்வளை, கடகவளை கடகம், முதலிய கை அணிகளும்; முடிச்சு அணி பொருந்திய மேகலை, அரைப்பட்டிகை, தாரகைச்சும்மை, குறங்குசெறி முதலிய இடை அணிகளும்; காற்சதங்கை எனும் கால் அணியும் அணிந்து வேட்டுவச்சி மிக அழகாகக் காணப்படுகின்றாள்.

### 4.1.18.4.3. இரதி, மன்மதன் சிற்பங்கள்

அழகுமிக்க பெண்ணான இரதியின் சிற்பம் 1.65 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளது. குந்தள அமைப்பில் கூந்தலை அள்ளிக் கொண்டை போட்டுத் தலைக்குமேல் அழகாகத் தலைக்கோலத்தினை சிற்பி அமைத்துள்ளார். இரதியின் வலது கையில் மலர் காணப்படுகிறது. இடக் கையில் அமுதகலசத்தினை ஏந்தி நடந்து வருவதுபோன்ற பாவனையில் சிற்பம் அமைந்துள்ளது. நெற்றிச்சுட்டி, மூக்குத்தி, மேகலை, பட்டாடையின் அமைதி, இடைக்கட்டுக்களின் தொங்குநிலை ஆகியன மிக எடுப்பாகத் தெரிகின்றன. சற்றே வலக்காலை முன்மடக்கி. இடக்காலையும் இடையையும் நன்கு வளைத்து வைசாக ஸ்தானக நிலையில் ரதி நிற்பதால் அவளது உடல் அழகு சிறப்பாகத் தெரிகின்றது.

மன்மதன் உருவச்சிலையின் உயரம் 1.70 மீட்டர். ஒரு கையில் கரும்பு வில்லும் மறுகையில் மலர்க்கணையும் காணப்படுகின்றன. கண்டோரை மயக்கும் மன்மதனின் சிற்ப அழகு சிறப்பதற்காகச் சிற்பி பெரு முயற்சிகொண்டு மிக நுட்பமாகச் சிலையினைச் செதுக்கியுள்ளார். மன்மதனின் கரண்ட மகுடம், தோள்மாலை, தோள்வளை, கடகவளை, அரைப்பட்டிகை, தாரகைச் சும்மை, காற்சிலம்பு ஆகியன மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன....

### 4.1.18.4.4. குதிரை வீரர் சிற்பங்கள்

வயிரவன்பட்டிக் கோயிலில் நடராஜர் சன்னிதியில் இரண்டு குதிரைவீரர் சிற்பங்கள் காணப்படுகின்றன. (நி.ப.எ.19).

முன்னிரு கால்களை மேலே தூக்கிப் பாயும் நிலையில் குதிரையின் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. குதிரையின் மேலே ஒரு வீரன், குத்துவாளை வலக்கையில் வைத்திருக்கின்றான். இடக்கையில் கடிவாளத்தைப் பற்றியிருக்கின்றான். குதிரையின் கழுத்தில் மணிகள் பதினொரு வரிசைகளில் அழகாக அமைக்கப்பட்டுள்ளன. குதிரையின் மேல், வேலைப்பாடு மிக்க இரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டிருக்கிறது. தொங்கும் மிதிவாரில் (அங்கபடியில்) வீரன் காலை வைத்திருக்கிறான். கடிவாளக் கயிறும் தொங்கும் மிதிவாரும் மிக நுட்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இக்குதிரையின் நீளம் 2.10 மீட்டர். அதன் வயிற்றின் சுற்றளவு 1.34 மீட்டர். குதிரை வீரனின் உயரம் 1.25 மீட்டர். அவனது மார்பின் சுற்றளவு 65 செ.மீ. குதிரையைத் தாங்கும் இரு வீரரின் உயரம் 95 செ.மீ. குதிரைக்குக் கீழே 45 செ.மீ. உயரமுள்ள யானை ஒன்றும் காணப்படுகிறது.

### 4.1.18.4.5. கண்ணப்பர் சிற்பம்

வயிரவன்பட்டிக் கோயிலில் நடராஜர் சன்னதியில் குதிரை வீரர் சிற்பத்திற்கு வடக்கில் கண்ணப்பர் சிற்பம் உள்ளது.

கண்ணப்பர் ஒரு கண்ணைச் சிவலிங்கத்தில் வைத்துவிட்டு, மறு கண்ணை அம்பினால் தோண்டிக்கொண்டிருக்கிறார். இரண்டாவது கண்ணைச் சரியாகச் சிவலிங்கத்தில் வைக்க வேண்டுமே எனும் ஆறாத பக்தியோடு, தனது இடக்கால் விரலைச் சிவலிங்கத்தின் கண்ணை ஒட்டி அடையாளத்திற்காக வைத்துள்ளார். இந்நிலையில் சிவபெருமான் கண்ணப்பர் கையில் உள்ள அம்பினைத் தடுத்து வாங்குவது போலச் சிற்பம் அழகாக அமைந்துள்ளது.

மொத்த சிலையின் உயரம் 95 செ.மீ. சிவபெருமானின் உயரம் 65 செ.மீ. கண்ணப்பரின் உயரம் 60 செ. மீ. சிவலிங்கத்தின் உயரம் 22 செ.மீ.

ஒரு கண் குருடாகியும் மறுகண்ணை அம்பால் பெயர்த்தெடுக்கப் போகும் கண்ணப்பரின் உறுதியான பக்தியும், அச்செயலைத் தடுத்தாட் கொள்ளும் சிவபெருமானின் அருள்பூத்த புன்னகையும் சிற்பத்தின் சிறப்புக்களாகும். சிற்பியின் உளி, கல்லுக்கும் ஒரு நரம்பு மண்டலத்தைக் கொடுத்து நவரசங்களையும் சிந்த வைத்திருக்கும் அழகை இச்சிற்பத்தில் காணமுடிகின்றது.

### 4.1.18.4.6. அனுமனை வணங்கும் இராமர் சிற்பம்

இராமரை அனுமன் வணங்கும் சிற்பம், பல இடங்களில் காணக்கூடியது. ஆனால் வயிரவன்பட்டி வளரொளிநாதர் கருவறைச் சுவரின் வடக்குப் பகுதியில் இராமர் அனுமனை வணங்கும் சிற்பம் புதுமையாகக் காணப்படுகிறது (நி.ப.எ.20).

கம்பராமாயணத்தில் - இந்திரசித்தன் பிரமாஸ்திரத்தை இலக்குவன்மேல் செலுத்தியதால் இலக்குவன் வீழ்ந்து விடுகிறான். சஞ்சீவிமலை என்னும் மருந்து மலையை அனுமன் கொண்டுவந்ததால் இலக்குவன் மீண்டும் உயிர் பெற்று எழுகிறான். அப்போது,

"அழியுங்கால் தரும் உதவி, ஐயனே!
மொழியுங்கால், தரும் உயிரும் முற்றுமே?
பழியும் காத்து, அரும் பகையும் காத்து, எமை
வழியும் காத்தனை; நம் மறையும் காத்தனை"[31]

"தாழ்வில் இங்கு இறைப்பொழுது தக்கதே
வாழி எம்பிமேல் அன்புமாட்ட, வான்
ஏழும் வீயும்; என் பகர்வது? - எல்லைநாள்
ஊழி காணும் நீ, உதவினாய் அரோ!"[32]

என்று அனுமனுக்கு இராமன் நன்றி பாராட்டுவதைக் கம்பர் கூறுகின்றார். அக்காட்சியையே சிற்பி இவ்வாறு சிலை வடித்துள்ளார்.

இராமர் சிற்பத்தின் உயரம் 77 செ.மீ. அனுமன் சிற்பத்தின் உயரம் 85 செ.மீ. அனுமனுக்கு நேர் எதிராக அஞ்சலி ஹஸ்த முத்திரையுடன் இராமர் நிற்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.1.18.4.7. கால சம்ஹார மூர்த்தி சிற்பம்

இரணியூர்க் கோயில் ஆட்கொண்டநாதர் சன்னிதியில் தெற்குப் பக்கம் கால சம்ஹார மூர்த்தியின் சிற்பம் உள்ளது (நி.ப.எ. 21).

மார்க்கண்டேயர் உயிரை எடுத்துச் செல்ல எமன் பாசக் கயிற்றை வீசியபோது சிவபெருமான் காலனுக்கும் காலனாக வந்து தனது வலக்காலினால் எமனை வீழ்த்தும் செயலினைச் சிற்பம் சிறப்பாக விளக்கிக் காட்டுகிறது.

எருமை வாகனத்தில் அமர்ந்தவாறே எமன் வீசிய பாசக்கயிறு மார்க்கண்டேயரைச் சுற்றியும் அவர் தழுவியுள்ள சிவலிங்கத்தைச் சுற்றியும் விழுந்து கிடக்கின்றது. பாசக்கயிறு மூன்று புரிகளால் திரிக்கப்பட்டுள்ள நுட்பத்தையும் இச்சிற்பத்தில் காணமுடிகின்றது. வலக்காலைத் தூக்கி எமனை உதைக்க வரும் சிவனுடைய முகத்தில் கோபம் கொப்பளிக்கிறது. எமனின் முகத்தில் பயம் பொங்குகிறது. மார்க்கண்டேயர் முகத்தில் எந்தச் சலனமும் இல்லாமல் பக்தி மிகுந்த பரவச நிலை காணப்படுகிறது. இவ்வாறு மூன்றுவித உணர்ச்சிகளை ஒரே தூண் சிற்பத்தில் இங்கு காண முடிகின்றது. இச்சிற்பத்தின் உயரம் 1.13 மீட்டர்.

### 4.1.18.4.8. முப்புரம் எரித்தவர் சிற்பம்

இரணியூர் கோயில் ஆட்கொண்டநாதர் சன்னிதியில் வடக்குப் பக்கம் முப்புரம் எரித்தவர் சிற்பம் உள்ளது (நி.ப.எ. 22).

முப்புர அரக்கராகிய தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி ஆகியோர் செருக்கை அழிப்பதற்காக அவர்களுடைய மூன்று கோட்டைகளையும் தனது சிரிப்பால் எரித்தார் சிவபெருமான். இக்காட்சியினை மிகச் செம்மையாக இச்சிற்பம் காட்டுகின்றது.

முப்புரம் எரிக்கவந்த சிவபெருமான் தன நான்கு திருக்கரங்களில் அங்குசம், பானம், மான், வில் ஆகியனவற்றைக் கொண்டுள்ளார்.

கரண்ட மகுடம், வீரச்சங்கிலி, வீரக் கழல் அணிந்து வந்திருப்பினும் வில்லும் பானமும் கையில் இருப்பினும் - அவர் நெற்றிக் கண்ணைத் திறந்து சினந்து பார்க்காமல் சிரிக்கின்ற முகப் பொலிவினைச் சிற்பம் மிக நுட்பமாகக் காட்டுகின்றது.

விஷ்ணு தேராகவும் பிரம்மா சாரதியாகவும், நான்கு வேதங்கள் நான்கு குதிரைகளாகவும் சூரியன் சந்திரன் இரண்டு சக்கரங்களாகவும் வந்ததாகப் புராணம் கூறுகிறது.

தேர் 1.78 மீட்டர் உயரம் உள்ளது. நான்கு தலைகளுடன் பிரம்மா நான்கு குதிரைகளைச் செலுத்திக் கொண்டிருக்கிறார். மிக மென்மையும் உறுதியும் வாய்ந்த நான்கு கடிவாளக் கயிறுகள் மிகச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன. சந்திரன் சக்கரமாக உள்ள பகுதியில் அச்சாணி இருக்கின்றது. சூரியன் சக்கரமாக உள்ள பகுதியில் அச்சாணி இல்லை.

இச்சிற்பத்தின் ஒவ்வொரு அங்குலத்திலும் கலைநுட்பத்தைக் காணமுடிகின்றது.

### 4.1.18.4.9. உமையொரு பாகன் சிற்பம்

இரணியூர்க் கோயில் ஆட்கொண்டநாதர் சன்னதியில் வடக்குப் பக்கம் உமையொரு பாகன் சிற்பம் உள்ளது. (நி.ப.எ. 23).

பிருங்கி என்னும் முனிவர் மறைவனை மட்டுமே வணங்குவார். இறைவி, இம்முனிவர் தன்னை இகழ்வதாகக் கருதிப் பெருமானுடன் ஓர் இருக்கையில் ஒன்றி இருந்தாள். முனிவரோ வண்டின் உருவம் எடுத்துக் கழுத்தின் இடைவெளி வழியே இறைவனை மட்டும் வணங்கி வலஞ்சுற்றிச் சென்றார். இதனால் அம்மை அருந்தவம் செய்து இறைவனின் ஒரு கூறாக இணைந்தாள். இஃது உமையொரு பாகமாகிய கதை என்பர்.[33]

அவ்வாறு உமையொரு பாகமாகிய காட்சியினைச் சிற்பம் நுட்பமாக விளக்குகிறது.

ஸ்ரீ ஸாரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள அர்த்த நாரீச்வர லட்சணத்துடன் இச்சிற்பம் அமைந்துள்ளது.[34]

உமையொரு பாகன் சிற்பத்தில் வலப்பாகம் சிவ பெருமானுடையது; இடப்பாகம் உமை அம்மையினுடையது. சிவபெருமானின் வல உட்கையில் அபய ஹஸ்த முத்திரையினையும் புறக்கையில் சூலத்தினையும் காணமுடிகின்றது. உமையின் இட உட்கை கஜஹஸ்தம் எனும் எழிற்கையாகவும் [illegible] மலரினை ஏந்தியதாகவும்

காணப்படுகிறது. வலது காதில் குண்டலமும் இடது காதில் கர்ண பத்திரம் (ஓலையும்) அமைக்கப்பட்டுள்ளன. இடையின் வலப்பக்கத்தில் புலித்தோலும் இடப்பக்கத்தில் பட்டாடையும் காணப்படுகின்றன.

#### 4.1.18.4.10. இரண்ய சம்ஹார சிற்பங்கள்

இரணியனை நரசிங்கமூர்த்தி கொன்ற இடம் இரண்யூர். அந்தப் பாவத்தினைப் போக்கவும் தனது இயல்பான திருமால் வடிவத்தைப் பெறவும் நரசிங்கமூர்த்தி சிவனை வழிபட்டார். அவரை ஆட்கொண்டு அருளியதால் சிவனுக்கு ஆட்கொண்டநாதர் எனப் பெயர் ஏற்பட்டது என்பர். இரணியனுக்கும் நரசிங்க மூர்த்திக்கும் நடைபெற்ற போரினை ராஜகோபுரத் தளச் சுவரின் வடக்குப் பகுதியில் காணமுடிகின்றது. 93 செ.மீ. உயரச் சிற்பத்தில் இரணியனும் நரசிங்க மூர்த்தியும் காலொடு காலும் தோளோடு தோளும் பின்னிப் போர்புரியும் காட்சியைக் காணமுடிகிறது.

அப்போரின் இறுதியில் இரணியனை நரசிங்கமூர்த்தி தனது தொடையில் படுக்க வைத்து அவன் வயிற்றைக் கிழித்துக் குடலை உருவி மாலையாகச் சூடிக் கொண்டார். இதனைக் கம்பர்,

> ஆயவன்தன்னை. மாயன், அந்தியின் அவன் பொன் கோயில்
> வாயிலில், மணிக் கவான்மேல், வயிரவாள் உகிரின் வாயின்
> மீஎழு குருதி பொங்க, வெயில் விரி வயிர மார்பு
> தீஎழப் பிளந்து நீக்கி, தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்"

எனச் சொல்லில் வடித்துக் காட்டியிருக்கின்றார்.[35] இதே காட்சியைக் கல்லில் வடித்துக் காட்டியிருக்கும் அழகினை இராஜகோபுரத் தளச் சுவரின் தெற்குப் பகுதியில் உள்ள சிற்பத்தின் மூலம் காணமுடிகின்றது. (நி.ப.எ.24).

#### 4.1.18.4.11. அரிய சிற்பங்கள்

எல்லாக் கோயில்களிலும் பரவலாகக் காண்பதற்கு அரிதான எட்டு திக்குகளுக்குரிய கடவுளர்களான இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகியோருடைய சிற்பங்கள் இரணியூர் இராஜகோபுரத் தளத்தின் சுற்றுச் சுவரில் காணப்படுகின்றன.

இந்த எட்டுத் திக்குக் கடவுளரின் திருமேனி அமைப்பு வாஸ்து சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது.[36] அச்சிற்ப அமைதி இங்கு பட்டியலிடப்பட்டுள்ளது. இந்த இலக்கணம் அனைத்தும் பொருந்தியிருப்பது இங்குள்ள சிற்பங்களின் சிறப்பாகும்.

| | திக்குப்பாலகர் | வாகனம் | கைகளில் உள்ளவை | திசை |
|---|---|---|---|---|
| 1. | இந்திரன் | வெள்ளை யானை | வரதம், வஜ்ரம், அங்குசம் குண்டிகை | கிழக்கு |
| 2. | அக்கினி | ஆடு | வரம், சக்தி, துளசி கெண்டி(கமண்டலம்) | தென் கிழக்கு |
| 3. | எமன் | எருமை | பாசம், புத்தகம், குக்குடம், தண்டம் | தெற்கு |
| 4. | நிருதி | பூதம் | வாள், விசிறி, கேடயம், அரிமத்தகம் | தென் மேற்கு |
| 5. | வருணன் | யாளி | வரதம், பாசம், கமலம், கமண்டலம் | மேற்கு |
| 6. | வாயு | மான் | வரதம், துஜம், படக ஹஸ்தம், கமண்டலம் | வட மேற்கு |
| 7. | குபேரன் (நி.ப.எ.25) | குதிரை | கடகமுத்திரை, நிதி, வாள், கமண்டலம் | வடக்கு |
| 8. | ஈசானன் | காளை | கடகமுத்திரை, திரிசூலம், நாகபாசம், வாள் | வட கிழக்கு |

### 4.1.18.4.12. பிள்ளையார் சிற்பம்

கீழச்சிவற்பட்டி நகர சிவன் கோயிலின் முன் மண்டபத்தின் தெற்குப் பகுதியில் பதினொரு கைகளை உடைய பிள்ளையார் சிற்பம் காணப்படுகிறது.

பெருச்சாளி வாகனத்தில் அமர்ந்த கோலத்தில் பிள்ளையார் காணப்படுகின்றார்.

பத்துத் திருக்கரங்களுடன் தும்பிக்கையையும் சேர்த்தால் மொத்தக் கரங்கள் பதினொன்று.

பத்துக் கரங்களில், சக்கரம், தந்தம், வாள், அங்குசம், பாசம், நீலோற்பலம், மலர், வில், மலர், மனைவியை ஏந்தியுள்ளார். தும்பிக்கையை இடப்புறமாக வளைத்து வைத்துள்ளார்.

தலையில் கரண்ட மகுடமும் மார்பில் கண்டிகை சரப்பளி அரும்புச்சரம் சவடியும், கைகளில் தோள்வளையும் கடகவளையும், இடையில் அரைப்பட்டிகை தாரகைச்சும்மையும், காலில் சிலமபும் அழகு செய்கின்றன.

பதினொரு கைகளுடன் கூடிய பிள்ளையார் சிற்பம் மிக அரிது என்பதாலும், மிக அழகான இச்சிற்பத்தில் எந்தக் குறைபாடும் நேர்ந்துவிடக்கூடாது என்பதாலும், இங்குள்ள நான்கு சிலைகளைச் சுற்றிலும் பாதுகாப்புக் கம்பிகள் போடப்பட்டுள்ளன.

இலுப்பைக்குடித் தான்தோன்றீஸ்வரர் அர்த்த மண்டபத்தின் இடப்பக்கமுள்ள, முதல் தூணின் தெற்குப் பகுதியில் 3 செ. மீ. சதுரத்திற்குள் மிக நுட்பமாக ஒரு விநாயகர் உருவம் காணப்படுகிறது. உருவம் மிகச் சிறியது எனினும் மிகத் தெளிவாக வேழமுகம், மூன்று கண்கள், ஐந்து கரங்கள் ஆகிய உறுப்புகளையும் அலங்கார அணிகளையும் காணமுடிகிறது. (நி.ப.எ. 26).

### 4.1.18.4.13. ஆறுமுகம்

கீழச்சிவற்பட்டி, நகர சிவன் கோயிலின் முன் மண்டபத்ன் வடக்குப் பகுதியில் பன்னிரண்டு கைகளை உடைய ஆறுமுகனின் சிற்பம் உள்ளது.

மயில் வாகனத்தில் ஆறுமுகன் அமர்ந்த கோலத்தில் சிற்பம்

வடிக்கப்பட்டுள்ளது. மயிலின் காலுக்குக் கீழே ஒரு நாகப்பாம்பு படமெடுத்து ஆடுகின்றது. மயில் தனது அலகில் ஒரு பாம்பினை ஏந்தியுள்ளது. இச்சிலை மிக நுட்பமாகவும் மிக அழகாகவும் வடிக்கப்பட்டுள்ளது.

ஆறுமுகனின் சிற்பம் சித்ரார்த்தம் எனப்படும் புடை ஓவயமாக அமைந்துள்ளதால் முன்பக்கப் பொலிவு மட்டுமே செதுக்கப்பட்டுள்ளது. எனவே ஐந்து திருமுகங்கள் மட்டுமே வடிக்கப்பட்டுள்ளன.

ஆறுமுகன் தனது பன்னிரண்டு கைகளில், சூலம், பானம், வாள், கபாலம், அங்குசம், அபய ஹஸ்தம, வஜ்ஜிரம், வில், கேடயம், சேவல், பாசம் ஆகியவற்றை ஏந்தியுள்ளார்.

கிரீட மகுடம் தலையை அலங்கரிக்கிறது. கண்டிகை, சரப்பளி, அருமபுச்சரம், சவடி கழுத்தை அலங்கரிக்கின்றன. சன்னவீரமும் பூணூலும் மார்பை அலங்கரிக்கின்றன. தோள்மாலை, தோள்வளை, கடக வளை ஆகியன கைகளை அலங்கரிக்கின்றன. வீரக்கழல்கள் கால்களை அலங்கரிக்கின்றன.

### 4.1.18.4.14. விடைப்பாகர் சிற்பம்

கீழச்சிவற்பட்டி நகர சிவன் கோயிலின் முன் மண்டபத்தின் வடக்குப் பகுதியில் ஆறுமுகன் சிற்பம் உள்ள தூணின் தெற்குத் திசையில் விடைப்பாகர் சிற்பம் உள்ளது.

விடை வாகனத்தில் சிவனும் உமாதேவியும் அமர்ந்துள்ளனர். இதனை மூன்று சிவ கணங்கள் தாங்கியுள்ளன.

சிவன், அங்குசம், மான், அபயம், வரதம் ஆகியவற்றை நான்கு கரங்களில் கொண்டுள்ளார்.

உமாதேவி ஒரு கையில் நீலோற்பல மலரினைத் தாங்கி, மற்றொரு கையினை ஊருஹஸ்த நிலையில் தொடைமீது வைத்துள்ளார்.

ஸகளாதிகாரம் கூறும் வ்ருஷ வாஹன இலக்கணத்தின் அடிப்படையில் இச்சிற்பம் அமைந்துள்ளது.[37] சிவனும் உமாதேவியும் ஸ்வஸ்திகாசன நிலையில் - இடக்காலை நேராக ஊன்றி வலக்காலைச்

சற்றே வளைத்து அதன் குறுக்காகவும் வைத்துள்ள இந்த அழகிய சிற்பத்தின் உயரம் 1 மீட்டர்.

### 4.1.18.4.15. கலியாணசுந்தரர் சிற்பம்

கீழச்சிவற்பட்டி நகர சிவன் கோயிலின் முன் மண்டபத்தின் தெற்குப் பகுதியில் பதினொரு கைகளை உடைய பிள்ளையார் சிற்பம் உள்ள தூணின் வடக்குப்புறம் கலியாணசுந்தரரின் சிற்பம் உள்ளது.

கலியாணசுந்தரர் சிற்பம் வராஹ புராணத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டது என வாஸ்து சாஸ்திரம் கூறுகிறது.[38]

இங்கு காணப்படும் கலியாணசுந்தரர் சிற்பம் ஸகளாதிகாரம் கூறும் சிற்ப இலக்கணத்தோடு 75% ஒப்புமையாக அமைந்துள்ளது.[39] அவ்வாறு ஒப்புமையுடைய பகுதிகள் கீழ்வருமாறு:

ஈசுவரனுடைய வலக்கை தேவியினுடைய கையோடு சேர்ந்திருக்கிறது. ஈசனின் இடக்கை வரத முத்திரையோடு இருக்கிறது. மற்ற இரு பின்புறக் கைகளிலும் மானும் மழுவும் ஏந்தியிருக்கிறார். முகத்தில் சிருங்கார பாவம் இருக்கிறது.

சர்வாங்க சுந்தரராய், ஜடா மகுடத்துடன் (சடைமுடி) எல்லா ஆபரணங்களோடும் விளங்குபவராய்ப் பவழ மேனியுடன் மங்களமே உருவெடுத்தாற் போன்ற தோற்றத்துடன் விளங்குகிறார்.

பார்வதி இடக்கரத்தில் மலரோடும், வலக்கரம் ஈசுவரனால் பற்றப்பட்டும் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு நாணத்துடன் விளங்குகிறாள்.

பக்கத்தில் மஹாவிஷ்ணு திரிபங்க நிலையில் தங்கக் கலசத்துடனும் சங்கு சக்கரம் ஏந்திய கைகளோடும், உதகதாராபூர்வமாக பார்வதி தேவியைத் தாரைவார்த்துக் கொடுக்கும் நிலையில் உள்ளார்.

### வேறுபடும் பகுதிகள் வருமாறு

பார்வதியோடு சீதேவியும் பூதேவியும் இச்சிலையில்

வடிக்கப்பெறவில்லை. ஈசுவரனுக்கு முன்னால் அக்னியில் ஹோமம் செய்து வைக்கும் காட்சி இச்சிற்பத்தில் இடம் பெறவில்லை. லோகபாலர்கள், தேவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், பூதகணங்கள், கணநாயர்கள், கின்னரர்கள், நாரதர், ஸப்த மாதர், ஸ்த்ரீ கணங்கள் சூழ்ந்திருப்பதாகவும் இச்சிலை அமையவில்லை.

மிகவும் இன்றியமையாத மூவரின் உருவங்கள் மட்டுமே சிலைவடிக்கப் பெற்றுள்ளன.

### 4.1.18.4.16. காலத்திற்கேற்ற சிற்பங்கள்

சிற்ப நூல்களில் காணப்படாத சில சிற்பங்களும் நகரத்தார் கோயில்களில் காணப்படுகின்றன. அவற்றுள் மிக இன்றியமையாதது குறிப்பிடத்தக்கவை பாரதமாதா, தேசக்கொடி, இராட்டை, காந்தி சிற்பங்களாகும். (நி.ப.எ.27.).

இரணியூர்க் கோயில் சுதந்திர போராட்ட காலமான 1944இல் கற்றளியாகக் கட்டப்பெற்றது. எனவே, சுதந்திர தாகமுடைய நகரத்தார்கள் பள்ளி அறையின் வெளியே உள்ள தூண்களின் இணைப்புக் கல்லில், பாரதமாதா, தேசக்கொடி, இராட்டை, காந்தி சிற்பங்களை வடித்துள்ளனர். அடிமை இருளில் தூங்கிக் கொண்டிருக்கும் நாடு, விடுதலை பெற்று விழிப்புற வேண்டும் என்பதால் பள்ளி அறையின் வெளியே இச்சிற்பங்களை அமைத்தனரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

இளையாத்தங்குடி ஆதிகேசவப் பெருாள் கோயிலின் வடக்குப் பகுதி உத்திரத்திலும் காந்தியடிகளின் சிற்பம் காணப்படுகிறது.

### 4.2. உலோகச் சிற்பங்கள்

உலோகச் சிற்பங்கள் என்பது செம்பு, வெள்ளி, தங்கம் ஆகியவற்றால் செய்யப்பட்ட திருவுருவங்களைக் குறிக்கும். இவற்றைப் பொன் செய் பாவை எனக் குறிப்பார் டாக்டர் இரா. நாகசாமி.[40]

பொன் என்பது பண்டைக் காலத்து அனைத்து உலோகங்களுக்கும் பயன்பட்ட சொல். இன்று கோயில்களில் உள்ள தெய்வ உருவச் சிலைகளைப் பஞ்ச லோகத்தில் (ஐம்பொன்னில்) செய்தது என்பர். செம்பு,

தரா (வெண்கலம்), வெள்ளி, தங்கம், பித்தளை ஆகியவை ஐந்தும் சேர்ந்தது என்று கூறுவர். இவை ஐந்து தத்துவங்களைக் குறிக்கின்றன. ஐந்து பூதங்களான நீர், நிலம், தீ, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களையும் உள்ளடக்கிய தெய்வீகத் திருவுருவங்கள் என்று உரைப்பர்.[41]

பெரும்பாலும் தெய்வ உருவங்கள் கனமாகவே செய்யப்பட்டன. ஒரு சில இடங்களில் வாகனங்களும், தெய்வ உருவங்களும் கனப் பொள்ளலாகச் (உள்ளே வெற்றிடம் விட்டு) செய்யப்பட்டுள்ளன.

### 4.2.1. நகரக் கோயில்களில் காணப்படும் உலோகச் சிற்பங்கள்

நகரத்தார் கட்டிய கோயில்கள் ஒவ்வொன்றிலும் பிரதோஷ விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, நடராஜர், சிவகாமி, மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், சோமஸ்கந்தர், சந்திரசேகரர், கௌரி, துர்க்கை, அஸ்திரதேவர், சண்டிகேசுவரர் ஆகிய ஐம்பொன் சிலைகளைக் காணமுடிகிறது.

இரணியூரில் மட்டும் சிறப்பாகப் பிட்சாடனர், பசுபதிலிங்கம், பத்மலிங்கம், முத்துக்கந்தர், வீரபாகு, நர்த்தன கணபதி, தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், பிரம்மா ஆகிய ஐம்பொன் சிலைகளும் காணப்படுகின்றன.

இரணியூரில் உள்ள ஆட்கொண்டநாதரின் கருவறை பளபளப்பேற்றிய கருங்கற்களால் ஆனது. எனவே, அதில் கற்சிற்பங்களை வைத்தால் எண்ணெய் அபிஷேகத்தின்போது சுவர் அழுக்கடைந்துவிடுமே என்பதற்காகவே நர்த்தன கணபதி, தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், துர்க்கை, பிரம்மா ஆகிய பரிவார தேவதைகளுக்கும் ஐம்பொன்னினால் சிலை செய்தார்கள். எனினும், பிட்சாடனர், முத்துக்கந்தர், வீரபாகு சிலைகளை நாயக்கர் பாணியில் செய்துள்ளனர். பசுபதிலிங்கம், பத்மலிங்கம், ஆகிய நிலைகள் வேறு எங்கும் இல்லாதவை; புதுமையானவை.

#### 4.2.1.1. நடராஜர் சிற்பம்

தமிழகம் தோற்றுவித்த சிறந்த கலைப் படைப்புக்களில், ஆடவல்ல பெருமானாக-நடராஜமூர்த்தியாக உள்ள உருவே உலகோர் அனைவரின் கருத்தையும் கவர்ந்திருக்கிறது. [42]

தேவேசனான நடராஜ மூர்த்தியின் வலக் காலானது (பூமியில்) பதிந்து வணங்கியிருப்பதாகும். இடக்காலானது தூக்கப்பட்டிருப்பதாகும். பரபரப்பைக் காட்டும் இடக் கையானது அசைந்து கொண்டிருப்பதாகும். (அசையும் நிலையையுணர்த்துவதாகும்).

வலக்கையானது அபயமுத்திரையைத் தரித்திருப்பதாகும். வலப் பக்கம் வெளிக் கையானது உடுக்கையைத் தரித்திருப்பதாகும். இடப்பக்கம் வெளிக் கையானது அக்கினியைத் தரித்திருப்பதாகும். நடராஜ மூர்த்தியின் ஸ்வரூபமானது இவ்விதமாகக் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறு ஸ்ரீ ஸாரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரம் நடராஜர் உருவம் பற்றிக் குறிப்பிடுகிறது.[43]

அகஸ்திய மகரிஷி அருளிய ஸ்களாதிகாரம் கீழ்க்கண்டவாறு நடராஜர் இலக்கணங்களைக் கூறுகிறது.[44]

தலையின் ஜடாபாரம் இருபுறங்களிலும் விரிந்து நீண்டிருக்க வேண்டும். புன்சிரிப்பான முகத்தோடும் அங்கம் முழுவதும் விபூதியினால் அலங்கரிக்கப்பட்டும் சில இடங்களில் விபூதி பட்டு, சில இடங்களில் படாததுமாய் அழகாக அமைந்திருக்க வேண்டும். சர்ப்பமும் கங்கையும் செங்கழுநீர் புஷ்பமும், ஊமத்தைப் பூவும் தலையில் அலங்காரமாக அமைந்திருக்க வேண்டும். கபாலமும் ரத்னங்களும், இடது பக்கத்தில் இளம் பிறையும் அணிந்து, சிரித்த முகத்தோடு இருக்க வேண்டும். நெற்றிக்கு மேல் ரத்தினத்தினால் பூரிமம் என்னும் கொடிப் பூவேலைப்பாட்டினால் அலங்கரிக்கப்பட வேண்டும், மார்பு சிந்தூரத்தினால் அலங்காரம் செய்யப்பட்டும், ருத்ராக்ஷ மாலையும் தரித்திருக்க வேண்டும். புலித்தோல் ஆடையும், முன்னே தொங்குகிற அக்ரபந்தமும் (அரைக் கச்சையின் நுனிகளும்) காலில் கல்லிழைத்த பாதஸரமும், கையில் கங்கணமும், அரை ஞாணும், பத்ர வேலைப்பாடுகளோடு கூடிய தோள்வளையும், அணிந்தும் சர்ப்ப கங்கணத்தோடு கூடிய வலமுன் கையோடும், மலர்ந்த முகத்தோடும் துடிக்கின்ற கண்களோடும், ரத்ன மோதிரங்களும், ரத்ன ஹாரங்களும், கழுத்தை ஒட்டின உபக்ரீவம் என்னும் அட்டிகை போன்ற ஆபரணங்களும் அணிந்திருக்க வேண்டும். அபஸ்மாரன் என்னும் முயலகன் மீது வலதுகாலை ஊன்றியிருக்க வேண்டும். அந்த அபஸ்மாரன் கறுப்பு வர்ணத்தோடு, சிவந்த கேசத்தோடும், பயந்த முகத்தோற்றத்தோடும், இடக்கையில் சர்ப்பமும், வலக்கையில்

சர்ப்பசீர்ஷ (பாம்புப்படம் போன்ற) முத்திரையும் உள்ளதாகவும் அமைக்கப்பட வேண்டும்.

மேற்கண்ட சிற்பநூல் இலக்கணங்கள் கூறியுள்ள நடராஜர் சிற்ப அமைப்புக்கள் அத்தனையும் பொருந்தியுள்ளதாகப் பல சிற்பங்களை நகரத்தார் அமைத்துள்ளனர்.

பிள்ளையார்ப்பட்டி நடராஜரின் முன்புறத் தோற்றமும் (நி.ப.எ.28), பின்புறத் தோற்றமும் (நி.ப.எ.29) மிக அழகாக அமைந்துள்ளன. கீழச்சிவற்பட்டி நடராஜரின் முகத்தோற்றம் பொலிவு மிக்கதாக வடிவமைக்கப்பட்டுள்ளது (நி.ப.எ.30). பிள்ளையார்ப்பட்டி நடராஜரின் உடுக்கையில் தட்டினால் உண்மையான உடுக்கை ஒலியே உண்டாவது வியப்புக்குரியது.

இரணியூர் சிவபுரந்தேவி உடனாய ஆட்கொண்ட நாதர் கோயில், இளையாத்தங்குடி ஸ்ரீ நித்தியகல்யாணி உடனாய கைலாசநாதர் கோயில், வயிரவன்பட்டி வயிரவன்கோயில், காரைக்குடி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில், கோட்டையூர் ஸ்ரீ மீனாட்சியம்மை சொக்கலிங்கமூர்த்தி கோயில், நடராஜபுரம் ஸ்ரீ பருவதவர்த்தினி இராமநாதர் கோயில், ஆகிய கோயில்களில் உள்ள நடராஜர் சிற்பங்கள் மிகச் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியனவாகும்.

இரணியூர் சிவபுரந்தேவி உடனாய ஆட்கொண்டநாதர் கோயிலில் உள்ள நடராஜர் சிற்பம் 86 செ.மீ. உயரம் உள்ளது. வல மேற்கையிலிருந்து இட மேற்கை வரை உள்ள நீளம் 64 செ.மீ., முயலகன் 23 செ.மீ. உயரமும், 10 செ.மீ. அகலமும் உடையவன். நடராஜரது சதுரமான பீடம் 43 செ.மீ. நீளமும் 26 செ.மீ. உயரமும் கொண்டது. நடராஜரைச் சுற்றியுள்ள திருவாசியின் உயரம் 1.30 மீ., அகலம் 1.08 மீட்டர். திருவாசியில் 21 தீப்பிழம்புகள் உள்ளன.

நடராஜரின் ஆனந்தத் தாண்டவக் கோலம் 'ஆபாசபங்க' ஆடல் அமைதியில் உள்ளது.

நடராஜர் மூன்று கண்கள், நான்கு கைகளுடன் காணப்படுகிறார். வல மேற்கரத்தில் துடி எனும் டமருகமும் இட மேற்கரத்தில் தீச்சுடரும் தாங்கியுள்ளார். வலக்கீழ்க் கரம் அபய முத்திரையோடும் இடக் கீழ்க் கரம் எழில் கையாகக் கஜ ஹஸ்த முத்திரையோடும் அமைந்துள்ளன.

தலைமுடியில் கொக்கின் இறகுகள் வரிசையாக விசிறிபோல அமைக்கப்பட்டுள்ளன. எருக்கம்பூ, ஊமத்தைப்பூ, கொன்றைமலர் ஆகிய பூக்களும் தலையை அலங்கரித்துள்ளன. தலையின் இடப்பக்கத்தில் பிறைச் சந்திரன் உள்ளது. மண்டை ஓடு ஒன்றும் உச்சந்தலையில் காணப்படுகிறது.

கழுத்தில் ஆரங்களும், மார்பில் பூணூலும், இடது காதில் குழையும், வலது காதில் மகர குண்டலமும், கைகளில் வளைகளும், முழங்கையில் கடக வளையமும், பாதங்களில் பாதசரிகளும் பூட்டப்பட்டிருக்கின்றன. கால்களிலும் கைவிரல்களிலும் மோதிரங்கள் காணப்படுகின்றன.

நடு உடலில் கட்டிய உதரபந்தம் (உடற்கட்டு) ஆட்டத்தின் வேகத்தால் அவிழந்து பறந்து ஓடித் திருவாசியைத் தொட்டுக் கொண்டிருக்கிறது.

வலக்கீழ்க் கையில் பாம்பை வளையாகக் கொண்டுள்ளார். இதைப் புஜங்க வலயம் எனச் சிற்பநூல் கூறும். பாம்பு, முன்நோக்கிப் படமெடுத்துச் சீறி ஆடும் நிலையில் அமைந்துள்ளது.

பொன்னார் மேனியன், இடுப்பில் புலித்தோலைத் தொடையை ஒட்டியவாறு அணிந்துள்ளார். சுழன்று ஆடும் வேகத்தை விரிந்து பறந்து கொண்டிருக்கும் செஞ்சடைகள் காட்டுகின்றன. வலப்பக்க விரிசடையில் கங்கை அஞ்சலி ஹஸ்த முத்திரையோடு காணப்படுகின்றாள்.

வலக்கால் முயலகன் மீது பதிந்திருக்கிறது. முயலகன் குப்புறப்படுத்த நிலையில் பாம்பைப் பிடித்து விளையாடும் பாவனையில் உள்ளான். முயலகனின் தலை படிமத்தின் வலப்புறத்தில் திமிறி, மேலே நோக்குவதாக அமைந்துள்ளது. இடக்கால் தூக்கிய பாதமாக உள்ளது. பீடம், பத்மபீடமாக அமைந்துள்ளது.

திருவாசி எனப்படும் பிரபாவளி, வட்டவடிவில் உள்ளது. திருவாசித் தண்டின் அடிவாரத்தில் மகரங்களை அமைத்து அதன் வாயிலிருந்து திருவாசி தொடங்குவதாக அமைந்துள்ளது. தண்டின் வெளிப்புறத்தில் 21 தீச்சுடர்கள் வரிசையாக அழகுறக் காணப்படுகின்றன. திருவாசித் தண்டை, இலை, கொடிக் கருக்குகள் அலங்கரிக்கின்றன.

### 4.2.1.2. சிவகாமி அம்மன் சிற்பம்

இரணியூரில், நடராஜரின் இடப்பக்கத்தில் சிவகாமி அம்மனின் படிமம் மிக அழகாக வடிவமைக்கப்பட்டுள்ளது. அம்மனின் உயரம் 75 செ.மீ. தோள் அகலம் 27 செ.மீ. அம்மன் திருவாசி உயரம் 1.10 மீட்டர்.

வலக்கையில் நீலோற்பலம் பிடித்து இடக் கையை எழிற்கையாகக் கஜ ஹஸ்த அமைதியில் தொங்கவிட்டுக் கரண்ட மகுடம் அணிந்து பங்கத்தோடு, நின்ற கோலத்தில் அம்மன் காணப்படுகின்றாள்.

பத்ர குண்டலக் காதணியையும் கண்டிகை, சரப்பளி, அரும்புச்சரம், சவடி ஆகிய கழுத்தணிகளும், சன்னவீரம், பூணூல்ஆகிய மார்பணிகளும், தோள்வளை, கடகவளை, சூடகம், மோதிரம் ஆகிய கையணிகளும் முடிச்சு அணி பொருந்திய மேகலை, அரைப்பட்டிகை, தாரகைச்சும்மை, குறங்குசெறி ஆகிய இடையணிகளும், கொசுவம் வைத்த இடைக்கட்டாகச் சேலையும், காற்சதங்கையும், கால் விரல்களில் மிஞ்சியும் அம்மனின் திருஅழகிற்கு மேலும் அழகூட்டுகின்றன.

### 4.2.1.3. சந்திரசேகரர் சிற்பம்

சந்திரசேகரரின் உருவ அமைப்புப் பற்றிச் ஸகளாதிகாரம்,[45] ஸ்ரீ ஸாரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரம்,[46] வாஸ்து சாஸ்திரம்[47] ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன. அவற்றில் கூறப்பட்டுள்ள சிற்ப அமைதி அனைத்தும் நகரத்தார் கோயில்களில் உள்ள சந்திரசேகரர் சிற்பத்தில் காணப்படுகின்றன.

வயிரவன்பட்டியில் உள்ள சந்திரசேகரர் சிற்பம் 68 செ.மீ. உயரம் உள்ளது. இரணியூரில் இச்சிற்பம் 54 செ.மீ. உயரம் உள்ளது. கீழச்சிவற்பட்டியில் இச்சிற்பம் 47 செ.மீ. உயரம் உள்ளது.

சந்திரசேகரமூர்த்தி இரண்டு பாதங்களையும் ஒழுங்காகச் சேர்த்து வைத்துப் பத்மபீடத்தில் நிமிர்ந்து நிற்கும் நிலையில் (சமபாத ஸ்தானக நிலையில்) அமைந்துள்ளார்

வலக்கையில் அபய முத்திரையும் இடக் கையில் வரத முத்திரையும் தாங்கி நிற்கிறார். வெளிப்புறக் கை இரண்டிலும் வலக்கையில் மழுவும் இடக்கையில் மானும் இருக்கின்றன.

தலையை ஜடா மகுடம் அலங்கரிக்கிறது. அச்சடைமுடியின் இடப்பக்கத்தில் அர்த்த சந்திரன் காணப்படுகிறது.

மூன்று கண்களோடும், எல்லாவிதமான அலங்காரத்தோடும் புன்னகை தவழும் முகத்தோடும் சந்திரசேகரர் சிற்பம் அமைந்துள்ளது.

### 4.2.1.4. கௌரி சிற்பம்

சந்திரசேகரருக்குப் பக்கத்தில் எப்போதும் கௌரியின் சிற்பம் காணப்படுகிறது. கௌரியினைத் 'தனி அம்மன்' என்றும் வழங்குகின்றனர்.

கௌரி தேவியின் உருவ அமைப்புப் பற்றி மானசாரம் கூறுகின்றது.[48] நகரத்தார் கோயில்களில் காணப்படும் கௌரி சிற்பங்கள் இம்மானசார விதிகளின்படியே அமைந்துள்ளன.

கௌரிதேவி நீண்ட இரு கரங்களையும் அகன்ற கண்களையும், மெல்லிடையையும், உயர்ந்த மார்புகளையும், உயர்ந்து பரந்த இடுப்பின் கீழ்ப்புறத்தையும் கொண்டிருக்கிறாள். வலக்கரத்தில் நீலோற்பல மலரினை ஏந்தி இடக்கரத்தினை டோல ஹஸ்த நிலையில் எழிற்கையாக வைத்திருக்கின்றாள்.

புன்னகை மிகுந்த முகமும், அழகிய கழுத்தும் உயர்ந்த கூர்மையான மூக்கும் தேவயின் அழகை மிகுவிக்கின்றன.

இரு காதுகளிலும் மகரகுண்டலங்கள் இருக்கின்றன. கழுத்தில் ஆரம், அட்டிகை, பாஹீமாலை ஆகியன காணப்படுகின்றன. பாஹீ கடகம், இடைசூத்திரம், பூரிமங்களுடன் கூடிய தோள்வளை, பட்டாடை அமைதியில் இடைக்கட்டுக்களின் தொங்குநிலை, பாதச் சிலம்புகள் ஆகியன மிக அழகாக உள்ளன. வயிரவன்பட்டியில் உள்ள கௌரி சிற்பத்தின் உயரம் 56 செ.மீ. இரணியூரில் உள்ள இச்சிற்பத்தின் உயரம் 48 செ.மீ. கீழச்சிவற்பட்டியில் உள்ள இச்சிலையின் உயரம் 60 செ.மீ.

### 4.2.1.5. சோமஸ்கந்தர் சிற்பம்

சோமனுடன் கந்தனும் உமாதேவியும் அமர்ந்துள்ள சிற்பத்தினையே சோமஸ்கந்தர் சிற்பம் என்பர்.

இச்சிற்பம் பற்றிச் ஸகளாதிகாரமும்[49] ஸாரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரமும்[50] கூறியுள்ள இலக்கணங்கள், நகரத்தார் கோயிற் சிற்பங்களில் முறையாகக் கையாளப்பெற்றுள்ளன.

சோமன் நேராக நிமிர்ந்து உயர்ந்த ஆசனத்தில் சுகாசன நிலையில் இடக்காலைப் பீடத்தில் படுக்கையாக வைத்து வலக்காலைத் தொங்கவிட்டபடி அமர்ந்துள்ளார்.

நான்கு திருக்கரங்களில் பின்புற வலக்கையில் மழுவும் இடக்கையில் மானும் முன்புற வலக்கையில் அபய முத்திரையும் இடக்கையில் கடக முத்திரையும் கொண்டுள்ளார்.

இடுப்பில் புலித்தோலும் தலையில் ஜடாமகுடமும் அணிந்துள்ளார். சன்னவீரமும் பூணூலும் மார்பில் காணப்படுகின்றன.

சோமனின் இடது பாகத்தில் அதே ஆசத்தில் உமாதேவி இடக்காலைத் தொங்கவிட்டுக் கொண்டும் வலக்காலைக் படுக்கையாக வைத்துக் கொண்டும் அமர்ந்துள்ளாள்.

தேவி சோமனுக்குச் சற்றுப் பின்னால் அமர்ந்து சோனைப் பார்ப்பது போலத் திரும்பியிருக்கிறாள். தேவியின் இடக் கை வரத முத்திரையையும் வலக் கை மலரினையும் தாங்கியுள்ளன. தலையில் கேசபந்தமும், காதில் மகர குண்டலமும் மற்ற எல்லா அணிகளும் தேவியை அலங்கரிக்கின்றன.

சோமனுக்கும் தேவிக்கும் நடுவில் கந்தன் உருவம் நின்றநிலையில் காணப்படுகிறது. இக் கந்தனின் இடக் கையில் முகுள முத்திரையுடன் மலரும் வலக் கையில் வரத முத்திரையும் உள்ளன. சன்னவீரமும் அரைஞாணும் அணியப்பெற்றுள்ளன. இரு கால்களும் சிறிது வளைந்து, நடப்பது போன்ற பாவனையில் அமைந்துள்ளன.

சூரைக்குடியில் உள்ள சோமஸ்கந்தர் சிற்பம் மிக அழகாக அமைந்துள்ளது. (நி.ப.எ.31). சிறப்புக் கவனம் பெறும் மூன்று கோயில்களில் உள்ள சோமாஸ்கந்தர் சிற்பங்களின் உயரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| வ. எண் | ஊர் | சோமனின் உயரம் | கந்தனின் உயரம் | உமாதேவியின் உயரம் |
|---|---|---|---|---|
| 1. | வயிரவன்பட்டி | 36 செ.மீ. | 14 செ.மீ. | 33 செ.மீ. |
| 2. | இரணியூர் | 48 " | 19 " | 39 " |
| 3. | கீழச்சிவற்பட்டி | 55 " | 25 " | 45 " |

### 4.2.1.6. வயிரவர் சிற்பம்

வயிரவர் சிற்பம் பத்மபீடத்தில் சமபாத ஸ்தானக நிலையில் நின்ற திருக்கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது.

அக்னிகேசத் தலைக்கோலமும் ஆபரணங்கள் நிறைந்த மார்பும் சிலைக்கு அழகூட்டுகின்றன. நான்கு திருக்கரங்களில் உடுக்கை, பாம்பு, சூலம், கபாலம் ஆகியனவற்றை ஏந்தியுள்ளார். வயிரவருக்குப் பின்புறம் அவரது வாகனமான நாய் நின்ற நிலையாகக் காணப்படுகிறது.

வயிரவன்பட்டியில் உள்ள வயிரவர் சிலை 70 செ.மீ. உயரம் உள்ளது. பத்மபீடம் 20 செ.மீ. உயரம் உள்ளது. வயிரவரைச் சுற்றிலும் 1.07 மீட்டர் உயரம் உள்ள திருவாசி அமைந்துள்ளது. அதில் 32 தீச்சுடர்கள் காணப்படுகின்றன (நி.ப.எ.32).

இரணியூரில் உள்ள வயிரவர் சிலை 58 செ.மீ. உயரம் உள்ளது. கீழச்சிவற்பட்டியில் உள்ள வயிரவர் சிலை 70 செ.மீ. உயரம் உள்ளது.

### 4.2.1.7. முருகன்-வள்ளி-தெய்வானை சிற்பங்கள்

முருகன், வள்ளி, தெய்வானை ஆகியோருடைய சிலைகள் நின்ற நிலையில் காணப்படுகின்றன. முருகன் நடுவிலும் வள்ளி வலப்பக்கத்திலும் தெய்வானை இடப் பக்கத்திலும் அமைந்துள்ளனர்.

முருகன் கிரீட மகுடம் அணிந்துள்ளார். அவரது நான்கு திருக்கரங்களில் வஜ்ஜிரம், சூலம், அபய முத்திரை, வரத முத்திரை ஆகியன உள்ளன.

முருகனின் வலப்புறம் நிற்கும் வள்ளியின் இரண்டு கைகளில் இடக்கை மலரையும் வலக்கை கஜ ஹஸ்த முத்திரையினையும் பெற்றுள்ளன.

முருகன் இடப்புறம் நிற்கும் தெய்வானையின் இரண்டு கைகளில் வலக்கை மலரையும் இடக்கை டோல ஹஸ்த முத்திரையினையும் பெற்றுள்ளன. இரு தேவியரும் சமபங்க நிலையில் கிரீட மகுடத்துடனும் பட்டாடை அமைதியுடனும் அழகாக நிற்கின்றனர்.

வயிரவன்பட்டியில் உள்ள முருகன் சிலை 67 செ.மீ. உயரம் உள்ளது. வள்ளி நிலை 52 செ.மீ. உயரம் உள்ளது. தெய்வானை சிலை 52 செ.மீ. உயரம் உள்ளது.

இரணியூரில் உள்ள முருகன் சிலை 53 செ.மீ. உயரம் உள்ளது. வள்ளி தெய்வானை ஆகிய இருவர் சிலைகளும் 55 செ.மீ. உயரம் உள்ளன. (நி.ப.எ.33).

### 4.2.1.8. சமயக்குரவர் சிற்பங்கள்

நகரத்தார் கட்டியுள்ள கோயில்கள் எல்லாவற்றிலும் அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன. நால்வர் சிலைகளும் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகின்றன.

அப்பர் அஞ்சலி ஹஸ்த முத்திரையுடனும் வலப்புறத் தோளில் உழவாரப் படையுடனும் காணப்படுகின்றனர். காதில் குழைகளும், தலை, நெற்றி, தோள், கை ஆகியவற்றில் உருத்திராட்ச மாலைகளும் அழகு செய்கின்றன. ஞானசம்பந்தர் இரண்டு கைகளிலும் தாளங்களை ஏந்தியுள்ளார். தலையில் ஜடாமகுடமும், காலில் சிலம்பும் உள்ளன. சுந்தரர் கொண்டைமுடி, மகர குண்டலங்கள், உத்ரபந்தம், பூணூல், வாகுவளை ஆகியவற்றுடன் காணப்படுகிறார். வலக்கை சிம்ம கர்ண முத்திரை கொண்டுள்ளது. மாணிக்கவாசர் சின் முத்திரையும் அக்க மாலையும் கொண்டு இடக்கையில் சுவடியுடன் காணப்படுகிறார். ஜடாகேசம், பூணூல், மோதிரம் ஆகியன காணப்படுகின்றன.

சிறப்புக் கவனம் பெறுகின்ற மூன்று கோயில்களில் உள்ள நால்வர் சிற்பங்கள் அளவுகள் பின்வருமாறு:

| வ. எண் | ஊர் | அப்பர் | சுந்தரர் | ஞானசம்பந்தர் | மாணிக்க வாசகர் |
|---|---|---|---|---|---|
| 1. | வயிரவன்பட்டி | 52 செ.மீ. | 58 செ.மீ. | 53 செ.மீ. | 60 செ.மீ. |
| 2. | இரணியூர் | 43 " | 43 " | 43 " | 46 " |
| 3. | கீழச்சிவற்பட்டி | 33 " | 33 " | 32 " | 40 " |

### 4.2.1.9. சண்டேசுவரர் சிற்பம்

நகரத்தார் கோயில் விழாக் காலங்களில் நடத்தும் திருவீதி உலாவில் விநாயகர், சுப்பிரமணியர், சுவாமி, அம்மன் ஆகியோருடைய உற்சவத் திருமேனிகளுடன் கோயிலில் காவல் தெய்வமான சண்டேசுவரர் உற்சவத் திருமேனியையும் திருஉலாவில் கொண்டுவருவது வழக்கம். அதற்காக ஒவ்வொரு கோயிலிலும் சண்டேசுவரர் ஐம்பொன் சிலையினை வைத்துள்ளனர்.

சண்டேசுவரர் நின்ற திருக்கோலத்தில் சமபாத ஸ்தானக நிலையில் உள்ளார். கிரீட மகுடம் தலையில் காணப்படுகிறது. குறைவான அணிகலன்களைக் காட்டிலும் அவரது முகத்தில் பொங்கும் பக்திப் பூரிப்பான பரவசநிலை அதிகமாகத் தெரிகிறது. ஒரு கையில் வரத முத்திரையினையும் மறுகையில் அபய முத்திரையினையும் தாங்கியுள்ளார்.

வயிரவன் பட்டியில் உள்ள சய்டேசுவரர் சிலையின் உயரம் 70 செ. மீ. இரணியூரில் உள்ள அச்சிலையின் உயரம் 41 செ.மீ. கீழச்சிவற்பட்டியில் உள்ள அச்சிலையின் உயரம் 46 செ.மீ.

### 4.2.1.10. பிற சிற்பங்கள்

#### 4.2.1.10.1. வயிரவன் கோயிலில் உள்ள பிற ஐம்பொன் சிற்பங்கள்

4.2.1.10.1.1. பிரதோஷ விநாயகர் (45 செ.மீ. உயரம்)
4.2.1.10.1.2. அஸ்திர தேவர் (40 செ.மீ. உயரம்)
4.2.1.10.1.3. துர்க்கை (68 செ.மீ. உயரம்)
4.2.1.10.1.4. கண்ணாடி (1.05 மீட்டர் உயரம)
4.2.1.10.1.5. நந்தி (30 செ.மீ. உயரம்)
4.2.1.10.1.6. பள்ளியறை சுவாமி (25 செ.மீ. உயரம்)
4.2.1.10.1.7. பள்ளியறை அம்மன் (25 செ. மீ. உயரம்)

### 4.2.1.10.2. இரணியூர்க் கோயிலில் உள்ள பிற சிற்பங்கள்

4.2.1.10.2.1. பிரதோஷ விநாயகர் (46 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.2. அஸ்திர தேவர் (36 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.3. அம்பாள் (48 செ.மீ.)
4.2.1.10.2.4. பத்திரகாளி அம்மன் (56 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.5. பசுபதிலிங்கம் (40 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.6. பத்மலிங்கம் (40 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.7. பிரதோஷமூர்த்தி (30 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.8. பிரதோஷ அம்மன் (27 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.9. நர்த்தன கணபதி (36 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.10. தட்சிணாமூர்த்தி (55 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.11. அண்ணாமலையார் (56 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.12. துர்க்கை (44 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.13. பிரம்மா (44 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.14. முத்துக்கந்தர் (45 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.15. வீரபாகு (56 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.16. பிட்சாடனர் (53 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.17. அஸ்திர தேவர் - II (54 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.18. துவாரபாலகர் (86 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.19. துவாரபாலகர் (86 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.20. கண்ணாடி (1.10 மீட்டர் உயரம்)
4.2.1.10.2.21. நந்தி (32 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.22. பள்ளியறை சுவாமி (22 செ.மீ. உயரம்)
4.2.1.10.2.23. பள்ளியறை அம்மன் (25 செ.மீ. உயரம்)

### 4.2.1.10.3. கீழச்சிவற்பட்டியில் உள்ள பிற சிற்பங்கள்

4.2.1.10.3.1. பிரதோஷ விநாயகர் (32 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.2. பிரதோஷ மூர்த்தி (30 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.3. பிரதோஷ அம்மன் (28 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.4. அஸ்திர தேவர் -38 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.5. ஆடிப்பூர அம்பாள் (56 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.6. துர்க்கை (39 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.7. சுந்தரராஜப் பெருமாள் (50 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.8. ஸ்ரீதேவி (45 செ.மீ. உயரம்)

4.2.1.10.3.9. பூதேவி (45 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.10. கண்ணாடி (1.05 மீட்டர் உயரம்)
4.2.1.10.3.11. நந்தி (30 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.12. பள்ளியறை சுவாமி (32 செ.மீ. உயரம்)
4.2.1.10.3.13. பள்ளியறை அம்மன் (34 செ.மீ. உயரம்)

### 4.2.1.10.4. குறிப்பிடத்தக்க ஐம்பொன் சிற்பங்கள்

### 4.2.1.10.4.1. பிரதோஷ விநாயகர்

பிரதோஷ நாட்களில் கோயிலைச் சுற்றி ஊர்வலமாக எடுத்துச் சென்று வருவதற்காக நகரத்தார் கோயில்களில் பிரதோஷ விநாயகர் ஐம்பொன்சிலை உள்ளது.

கரண்ட மகுடம் தலையை அலங்கரிக்கிறது. நின்ற திருக்கோலத்தில் விநாயகர் காணப்படுகின்றார். நான்கு திருக்கரங்களில் அங்குசம், பாசம், தந்தம், மோதகம் ஆகியவற்றை வைத்துள்ளார். தும்பிக்கை மோதகத்தின் மீதுள்ளது.

வயிரவன்பட்டியில் உள்ள இச்சிலையின் உயரம் 45 செ.மீ
இரணியூரில் உள்ள இச்சிலையின் உயரம் 46 செ.மீ.
கீழச்சிவற்பட்டியில் உள்ள இச்சிலையன் உயரம் 32 செ.மீ

### 4.2.1.10.4.2. அஸ்திர தேவர்

அஸ்திரதேவரைப் பிரதோஷ காலங்களில், பேய் பிசாசு போன்றவற்றை விரட்டுவதற்காக முதன் முதலில் கோயிலைச் சுற்றி வலமாக எடுத்து வருவர். அதற்காக ஒவ்வொரு கோயிலிலும் அஸ்திர தேவரின் ஐம்பொன் சிலை இன்றியமையாது இடம்பெற்றுள்ளது.

சூலத்தினையே அஸ்திரதேவர் என அழைக்கின்றனர். ஒரு தண்டத்திலிருந்து மூன்றாகக் கிளைத்த அமைப்புடையது சூலம். இது, பிறைச்சந்திரன் போன்ற வட்டப் பகுதியின் நடுவில் கூரிய கத்தி செருகிய தோற்றமுடையது. இதனை மூவிலை, நெடுவேல், முத்தலை வேல் என்றும் கூறுவர்.

முக்கிளைகளானவை ஜெனனீ, ஆரணி, ரோதயித்ரி என்ற மூன்று சக்திகளைக் குறிக்கும் என்பர். ஜெனனீ ஆக்கலையும், ஆரணி அழித்தலையும், ரோதயித்ரி காத்தலையும் குறிக்கும் என்பர்.[51] இது சிவபெருமானின் சிறப்பாயுதம் ஆகும். எனவே சிவபெருமானின் குறியீடாகவே இது ஊர்வலமாகக் கொண்டுவரப்படுகிறது.

வயிரவன்பட்டியில் உள்ள அஸ்திரதேவரின் உயரம் 40 செ.மீ. இரணியூரில் உள்ள அஸ்திர தேவரின் உயரம் 36 செ.மீ. கீழச்சிவற்பட்டியில் உள்ள அஸ்திர தேவரின் உயரம் 38 செ.மீ.

### 4.2.1.10.4.3. பசுபதிலிங்கம்

வேறு எந்தக் கோயிலிலும் காணப்படாத பசுபதிலிங்கம், இரணியூர்க் கோயிலில் மட்டும் காணப்படுகிறது. 40 செ.மீ. நீளமும் 29 செ.மீ. அகலமும் உள்ள செவ்வக ஐம்பொன் தகட்டில் ஒரு பசு, லிங்கத்தின்மேல் பாலைச் சொரிவது போன்ற சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. (நி.ப.எ. 33அ). இதே சிற்பம் கற்சிலையாகப் பிள்ளையார்பட்டிக் கோயிலில் காணப்படுகிறது.

### 4.2.1.10.4.4. பத்மலிங்கம்

பத்மலிங்கம் உருவமும் இரணியூர்க் கோயிலில் மட்டுமே உள்ளது. 45 செ.மீ. நீளமும் 33 செ.மீ. அகலமும் உள்ள செவ்வக ஐம்பொன் தகட்டில் ஒரு லிங்கம் தாமரை மலரின்மேல் இருப்பது போன்ற சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது (நி.ப.எ.33அ).

### 4.2.1.10.4.5. தட்சிணாமூர்த்தி

இரணியூர் ஆட்கொண்டநாதர் கருவறையின் வெளிச்சுவர், பளபளப்பு ஊட்டப்பட்ட (பாலிஷ் செய்யப்பட்ட) கருப்புச் சலவைக் கற்களால் ஆகியது. எனவே, அதில் கற்சிற்பங்களை வைத்தால் அபிஷேகத் திரவியங்கள் பட்டுச் சுவரின் பளபளப்பு குறைந்துவிடுமே என்று தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், துர்க்கை, பிரம்மா ஆகியோருக்கு ஐம்பொன் சிலைகளையே செய்து வைத்துள்ளனர்.

தட்சிணாமூர்த்தி உருவ அமைதி ஸகளாதிகாரம் கூறியுள்ள இலக்கணத்தின்படி அமைந்துள்ளது.[52]

தட்சிணாமூர்த்தி ஆலமரத்தின்கீழ் இராஜலிங்காசனமிட்டு அமர்ந்துள்ளார். நான்கு திருக்கரங்களுடன் ஞானத்தைப் போதிப்பதாகச் சின் முத்திரையுடன் காணப்படுகிறார் (நி.ப.எ.34).

தட்சிணாமூர்த்தி சிலையின் உயரம் 55 செ.மீ. ஆலமரத்தின் உயரம் 88 செ.மீ. ஆலமரம் 5 கிளைகளை உடையது. (ஒரு கிளியின் உருவம் கீழே விழுந்துவிட்டது) 35 செ.மீ. உயரமுள்ள நான்கு முனிவர்கள் அஞ்சலி ஹஸ்த முத்திரையுடன் சதாசேவை நிலையில் அமர்ந்துள்ளனர்.

## 4.2.1.10.4.6. அண்ணாமலையார்

ஸாரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரமும்.[53] ஸகளாதிகாரமும்[54] கூறும் இலக்கணப்படி அண்ணாமலையாரின் ஐம்பொன் திருமேனி இரணியூரில் காணப்படுகிறது. (நி.ப.எ.35).

அடியும் முடியும் காட்டாத அண்ணாமலையாரின் அழகுத் திருவுருவம் லிங்கத்தில் தெரிகின்றது. அடியினையும் முடியினையும் தேடிச் செல்லுகின்ற பன்றியின் உருவினையும் அன்னத்தின் உருவினையும் இதில் காணமுடிகின்றது.

அண்ணாமலையார் சிலையின் உயரம் 56 செ.மீ. சுற்றளவு 58 செ.மீ.

## 4.2.1.10.4.7. துர்க்கை

ஆபங்க நிலையில் சற்றே வளைந்தவாறு, நின்ற திருக்கோலத்தில் துர்க்கையின் சிற்பம் இரணியூரில் உள்ளது. நான்கு திருக்கரங்களில் சங்கு, சக்கரம், அபயமுத்திரை, ஊரு ஹஸ்த முத்திரை ஆகியன காணப்படுகின்றன. தலையில் கிரீட மகுடம் உள்ளது. மற்றும் கழுத்தணி, மார்பணி, கையணி, இடையணி, விரலணி ஆகியனவும் காணப்படுகின்றன. 44 செ.மீ. உயரமுள்ள விஷ்ணு துர்க்கை யோகநிலையில் கண்களை மூடி நிற்பதாகச் சிற்பம் அமைந்துள்ளது.

### 4.2.1.10.4.8. பிரம்மா

சமபாத ஸ்தானக நிலையில் - நின்ற திருக்கோலத்தில்-பிரம்மாவின் சிலை இரணியூரில் உள்ளது.

கிரீட மகுடம் அணிந்த நான்கு தலைகளுடன் பிரம்மா தனது நான்கு திருக்கரங்களில் ஜபமாலை, கெண்டி, அபயமுத்திரை, வரதமுத்திரை ஆகியனவற்றை ஏந்தியுள்ளார். இப்பிரம்மா சிலையின் உயரம் 44 செ.மீ.

### 4.2.1.10.4.9. முத்துக்கந்தர்

கார்த்திகை நாளின்போது கோயிலைச் சுற்றித் திருவீதி உலாவாக எடுத்து, வருவதற்காக இரணியூரில் மட்டுமே முத்துக் கந்தர் சிலை காணப்படுகிறது (நி.ப.எ.36).

45 செ.மீ. உயரமுள்ள இம் முருகன் சிலையில் நான்கு திருக்கரங்கள் உள்ளன. வஜ்ஜிரம், சூலம், வரதமுத்திரை, அபயமுத்திரை ஆகியனவற்றைக் கைகளில் தாங்கியுள்ளார்.

### 4.2.1.10.4.10. வீரபாகு

கந்தர் சஷ்டி விழாவின்போது திருவீதி உலாவாக முருகனுடன் எடுத்து வருவதற்காக இரணியூரில் மட்டுமே 56 செ.மீ. உயரமுள்ள வீரபாகு சிலை உள்ளது (நி.ப.எ. 36).

### 4.2.1.10.4.11. பிட்சாடனர்

அட்சய திருதியை நாளின்போது திருவீதி உலா வருவதற்காக இரணியூரில் மட்டும் பிட்சாடனரின் ஐம்பொன் சிலையினைச் செய்து வைத்துள்ளனர். (நி.ப.எ.37).

பிட்சாடனரின் ஜடாபாரத் தலைக்கோலம் மிக அழகாக அமைந்துள்ளது. நான்கு திருக்கரங்கள் காணப்படுகின்றன. பின் இரு கரங்களில் மிக நீளமான ஒரு சூலத்தை ஏந்தியுள்ளார். முன்பக்கமுள்ள இரண்டு கைகளில் ஒரு கையால் கபாலத்தை ஏந்திப் பிச்சை கேட்பது போலவும் மற்றொரு கையால் மானுக்குப் புல்லைக் கொடுப்பது போலவும் அமைத்துள்ளனர்.

பிட்சாடனரின் உயரம் 53 செ.மீ. மானின் உயரம் 20 செ.மீ. பிட்சாடனருக்குப் பக்கத்தில் அன்னக் கூடையினைத் தலையில் சுமந்தபடி ஒரு பூதம் நின்று கொண்டிருக்கிறது. அன்னக் கூடை திறந்து மூடும் அமைப்பில் மூடியுடன் உள்ளது. அன்னக்கூடையின் உயரம் 14 செ.மீ. பூதத்தின் உயரம் 19 செ.மீ.

பிறந்த மேனிக் கோலத்தில், நடந்து வருவது போன்ற பாவனையில் நிற்கும் பிட்சாடனரின் இடையில் ஒரு நாகப்பாம்பு காணப்படுகிறது.

### 4.2.1.10.4.12. சுந்தரராஜப் பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவி சிற்பங்கள்

மானசாரம்,[55] ஸாரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரம்[56] ப்ராஹ்மீய சித்ர கர்ம சாஸ்திரம்[57] ஆகிய நூல்கள் கூறியுள்ள சிற்ப அமைதியின்படி சுந்தரராஜப்பெருமாளின் ஐம்பொன் சிலை, கீழச்சிவற்பட்டி நகரச் சிவன் கோயிலில் காணப்படுகிறது. (நி.ப.எ.38).

எல்லாவிதமான அலங்காரங்களுடனும் அமைந்துள்ள சுந்தரராஜப் பெருமாள் நான்கு திருக்கரங்களை உடையவர். சங்கு சக்கரத்துடன் அபய முத்திரையினையும் வரத முத்திரையினையும் தாங்கியுள்ளார். இந்த ஐம்பொன் சிலையின் உயரம் 50 செ.மீ.

சுந்தரராஜப் பெருமாளின் இரு புறத்திலும் ஸ்ரீதேவி பூதேவி ஆகியோருடைய நின்ற கோலச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இருவரும் ஒரு கரத்தில் மலரையும் மறு கரத்தில் கஜ ஹஸ்த முத்திரையினையும் ஏந்தியுள்ளார். கிரீட மகுடம் தரித்துள்ள இருவரின் உயரமும் 45 செ.மீ. ஆகும்.

## 4.3. சுதைச் சிற்பங்கள்

மண்ணாலான சிற்பங்கள் தமிழகத்தில் பழங்காலத்தில் மிகவும் போற்றப்பட்டு வந்தன. மண்ணையிட்டுச் செய்யப்பட்டவை ஆதலின் அவற்றிற்கு மண்ணீடு என்றும், களிமண்ணால் பாவை செய்து தீயிலிட்டுச் சுடப்பட்டதை மண்ணீடு என்றும் சுடுமண் பாவை என்றும் கூறுவர். இச்சுடுமண் பாவைகள் வரலாற்றுச் சிறப்புமிக்க காவிரிப் பூம்பட்டினம், உறையூர், காஞ்சி, அரிக்கமேடு, கொற்கை ஆகிய இடங்களில் நடந்த அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ளன.

இம் மண்ணாலான பாவைகள் நெடுநாள் நீடித்து நிலைத்திரா என்பதால் அதைக் காட்டிலும் கடினமான சுதையினைக் கொண்டு சிற்பங்களைச் செய்யத் தொடங்கினர்.

சுண்ணாம்பை நன்கு அரைத்துக் கரும்புச்சாறு அல்லது வெல்லச்சாறு, நெல்லிக் கனியின் சாறு முதலியவற்றை ஊற்றி அரைத்து வஜ்ஜிரம் போல் செய்து அவற்றைக் கொண்டு உருவங்கள் செய்வது பண்டைய மரபு. உருவங்களைச் செய்வதற்கு ஏதுவாக உள்ளே வலிய மரத்தாலான முளை ஒன்று வைக்கப்பட்டுச் செங்கல், கம்பிகள் முதலியவற்றையும் பொருத்தி, சுண்ணாம்புக் காரை பூசி, மேலே சுதை பூசி (சுண்ணாம்புச் சாந்து) உருவங்கள் அமைக்கப்படும். இவற்றையே சுதையாலான உருவங்கள் என்கிறோம்.[58]

### 4.3.1. சுதைச் சிற்பங்கள் காணப்படும் பகுதிகள்

விஜயநகரப் பேரரசர்கள் உயர்ந்த கோபுரங்களை எடுத்தபோது சில சுதை உருவங்களை வைத்தார்கள். அவர்களுக்குப் பின் வந்த நாயக்க மன்னர்கள் கோபுரங்களின் மேல் நிலைகளில் ஆயிரக்கணக்கான சுதை உருவங்களை அமைத்துள்ளனர்.

நகரத்தார் கட்டிய கோயில் கோபுரங்களிலும், விமானங்களிலும், மூலவர், அம்மன் திருநிலைகளிலும் ஆயிரக்கணக்கான சுதை உருவங்களை அமைத்துள்ளனர்.

### 4.3.2. வயிரவன்பட்டிச் சுதைச் சிற்பங்கள்

வயிரவன்பட்டி வயிரவன் கோயிலில் உள்ள கிழக்கு ராஜகோபுரத்தில் 612 சுதைச் சிற்பங்களும், தெற்கு ராஜகோபுரத்தில் 104 சுதைச் சிற்பங்களும் வளரொளி நாதர் விமானத்தில் 160 சுதைச் சிற்பங்களும் வடிவுடையம்மை விமானத்தில் 96 சுதைச் சிற்பங்களும் வயிரவர் விமானத்தில் 120 சுதைச் சிற்பங்களும் (நி.ப.எ.39) வெளிமண்டப விநாயகர் விமானத்தில் 32 சுதைச் சிற்பங்களும், உள்ளே உள்ள விநாயகர் விமானத்தில் 36 சுதைச் சிற்பங்களும், சுப்பிரமணியர் விமானத்தில் 36 சுதைச் சிற்பங்களும், மகாலெட்சுமி விமானத்தில் 22 சுதைச் சிற்பங்களும், நடராஜர் விமானத்தில் 64 சுதைச் சிற்பங்களும், பள்ளியறை விமானத்தில் 26 சுதைச் சிற்பங்களும் நந்தி மண்டப விமானத்தில் 48 சுதைச் சிற்பங்களும் சோமஸ்கந்தர் விமானத்தில் 36 சுதைச் சிற்பங்களும் சண்டேசுர மண்டப விமானத்தில் 24 சுதைச் சிற்பங்களும்

உள்ளன. ஆக மொத்தம் 1416 சுதைச் சிற்பங்கள் வயிரவன்பட்டி வயிரவன் கோயிலில் உள்ளன.

### 4.3.3. அழகிய சுதைச் சிற்பங்கள்

சுதைச் சிற்பங்களில் மிக அழகு வாய்ந்தவையாக சிவ பெருமானின் திரு நடனத்தோற்றம் யானைத் தோலை உரித்துப் போர்த்திக்கொண்ட தோற்றம் உமையொருபாகர், சங்கர நாராயணர், தட்சிணாமூர்த்தி, சதாசிவன், காலபைரவர், அன்ன வாகனத்தில் அமர்ந்த பிரம்மன், திருமாலின் பத்து அவதாரக் காட்சிகள், மார்க்கண்டேய புராணம், கண்ணப்ப நாயனார் புராணம், கல்யானைக்குக் கரும்பு கொடுத்த காட்சி, துவாரபாலகர்கள் ஆகிய சிற்பங்களைச் சொல்லலாம்.

### 4.3.4. சுதைச் சிற்பங்களின் நோக்கம்

கோபுரத்திலும் விமானத்திலு உள்ள சுதைச் சிற்பங்கள் புராண விளக்கமாகவும், தெய்வ தத்துவத்தை விளக்குவதாகவும், பண்பாட்டுச் சிறப்புமிக்கதாகவும், கலைநுட்பம் பொருந்தியதாகவும், லட்சிய வாழ்க்கைக்கு வழிகாட்டுவதாகவும் அமைந்துள்ளன.

கூத்தப்பெருமான், தட்சிணாமூர்த்தி, திருமால், பிரம்மா, பார்வதி முதலிய கடவுளரின் திருவிளையாடல் காட்சிகளும் புராணப் பகுதிகளும் சிலை வடிவாக அமைக்கப்பட்டுள்ளன. கோபுரங்களின் கீழ் மாடங்களில் அதிகமான மானிடச் சிற்பங்களும் மேல் மாடங்களில் சிவகணங்களுடன் கூடிய தெய்வச் சிற்பங்களும் மட்டுமே காணப்படுகின்றன.

ஒவ்வொரு கோபுரத்திலும் தென்புறத்தில் உள்ள இரண்டாவது மாடத்தில் நிர்வாணச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு சிற்றின்பத்தில் தொடங்கி இறைவனுடன் இரண்டறக் கலக்கும் பேரின்பத்தில் முடிவதே நம் வாழ்க்கை என்று கோபுரச் சுதைச் சிற்பங்கள் நுட்பமாகக் கூறுகின்றன. இது பண்பாடு மிக்க இலட்சிய வாழ்க்கைக்கு வழகாட்டியாக அமைந்துள்ளது. (நி.ப.எ.40.).

### 4.3.5. சுதைச் சிற்பங்களில் வண்ணத்தின் பங்கு

சுதைச் சிற்பங்களில் வண்ணம் பூசப்பெற்று இருப்பதால் அவை

கற்சிற்பங்களைக் காட்டிலும் அதிக அழகோடு கண்ணைக் கவருகின்றன. சிற்பி உணர்த்த விரும்பும் கருத்தை-பாவத்தை-நவரசத்தை வண்ணங்கள் உணர்த்திவிடுகின்றன.

உமையொருபாகனார் சிற்பத்தில் உமையின் பச்சை வண்ணமும் சிவனாரின் கருநீல வண்ணமும் நேரிலேயே தெய்வத்தைக் காண்பதைப் போன்ற உணர்வினை எழுப்புகின்றன.

நரசிம்மமூர்த்தி இரணியன் வயிற்றைக் கிழித்து அவன் குடலை மாலையாகப் போட்டுக்கொள்ளும் சுதைச் சிற்பம், மிக இயல்பாக வண்ணம் பூசப் பெற்றுள்ளது. கிழிந்த வயிறு அறுத்த குடல் அவற்றிலிருந்து கொட்டும் குருதி ஆகியவற்றின் சிவப்பு நிற வண்ணம்-உண்மையிலேயே அக்காட்சியை நேருக்கு நேராகக் காண்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகிறது.

### 4.3.6. மிகப் பெரிய சுதைச் சிற்பங்கள்

மிகப் பெரிய சுதைச் சிற்பங்களாக இராஜகோபுரத்தின் முதல் மாடத்திலுள்ள துவாரபாலகர்களைக் குறிப்பிடலாம். கீழச்சிவற்பட்டி ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயிலின் இராஜகோபுரத்தில் மேற்குப் பக்கம் பூஜைப் பொருள்களோடு கோயிலுக்கு வரும் இரண்டு பெண்களின் மிகப் பெரிய சுதைச் சிற்பம் 1.73 மீட்டர் உயரத்தில் காணப்படுகிறது.

### 4.3.7. மிகச் சிறிய சுதைச் சிற்பங்கள்

மிகச் சிறிய சுதைச் சிற்பமாகக் குழந்தைகளின் உருவம், அக்கால மாந்தர்கள், நடனமாதர், கோபுரம் தாங்கிகள் சிவகணங்கள் ஆகியன காணப்படுகின்றன. 15 செ.மீ. உயரம் உள்ள குழந்தைகளின் சிற்பம் மிகவும் நுட்பமாகச் செய்யப்பட்டுள்ளது.

கோபுரங்கள், விமானங்கள் தவிரச் சுற்று மதில் சுவரிலும், மூலவர் அம்மன் திருவாயில்களிலும் புராணக் காட்சிகளை விளக்கும் சுதைச் சிற்பங்களும் சிவகணங்கள், காளைகளின் உருவங்களும் காணப்படுகின்றன.

சுதைச் சிற்பங்களுக்கு இன்றியமையாத ஒரு பெரிய இடத்தை, வயிரவன்பட்டி கீழச்சிவற்பட்டி, கோட்டையூர், காரைக்குடி, குருவிக்கொண்டான்பட்டி ஆகிய ஊர்களில் உள்ள நகரச் சிவாலயங்களில் காணமுடிகின்றது.

## 4.4. மரச் சிற்பங்கள்

மரத்தாலே சிற்பங்கள் செய்யும் பணி தொன்றுதொட்டு வருகின்ற கலையாகும். மரத்தாலான பாவையினையும், தேர்களையும் பற்றிச் சங்க இலக்கியம், பெருங்கதை ஆகியன கூறுகின்றன.

### 4.4.1. கடவுள் திருமேனி

கோயில் பழுது பார்க்கும்போது அத்தி முதலிய புண்ணிய மரங்களில் மூலவரைப் போலவே கடவுள் திருமேனியைச் செய்து, பாலாலயம் எனும் பெயரில் ஒரு சிறிய கோயிலை அமைத்து, அதனுள் அம் மரச் சிற்பங்களை வைத்து வழிபடுவது வழக்கம். இதுபோல் பாலாலயத்திற்காக அத்தி மரத்தில் கடவுள் திருமேனியை மாத்தூர், இரணியூர் ஆகிய ஊர்களில் செய்துள்ளனர்.

### 4.4.2. நிலைக்கதவு

நகரத்தார் சிலர் தங்கள் வீட்டின் முகப்புப் பகுதியில் மரச் சிற்பங்கள் நிறைந்த நிலைக் கதவினைப் பொருத்தியுள்ளனர்.

கீழச்சிவற்பட்டி அம்மன் சன்னிதித் தெருவில் 'இடிதாங்கியார் வீடு' என்ற பெயரில் ஒரு பெரிய வீடு இருக்கின்றது. அங்கு முகப்பில் மிகப்பெரிய நிலை ஒன்று உள்ளது. (நி.ப.எ.41). அதில் கஜலெட்சுமி, தாமரை, குதிரை வீரர்கள், யானைகள், பல்வேறு மாந்தர்கள், விலங்குகளின் சிற்பங்கள் மிக நுட்பமாகச் செதுக்கப்பெற்றுள்ளன. (நி.ப.எ.42). அந்த நிலைக்கதவில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட சிற்பங்கள் உள்ளது குறிப்பிடத்தக்கது. அம் மரச் சிற்பங்கள் நிறைந்த நிலைக் கதவினை வெளிநாட்டாரும் வியந்து பாராட்டுகின்றனர். அந்நிலையில் உள்ள சிற்ப வேலைப்பாட்டிற்காக அதனை ஒரு லட்சம் ரூபாய்க்கு விலை மதித்துள்ளார்கள்.

#### 4.4.3.1. தேர்

நகரத்தார் கட்டிய கோயில்களில் பெரும்பாலும் இரண்டு அல்லது ஒரு தேர் உண்டு. அத்தேர்களின் சுற்றுப்புறத்தில் நூற்றுக்கணக்கான மரச்சிற்பங்கள் காணப்படுகின்றன. அதிகமான வண்ணமும், வார்னிஷும், எண்ணைக்காப்பும் சிலைகளின் கலைநுட்ப அழகினை மூடி மறைத்து வருகின்றன.

நகரத்தார், நகரச் சிவன் கோயில்களுக்குத் தேர் கொடுத்ததை விட அம்மன் கோயில்களுக்குத்தான் அதிகமான தேர்களைக் கொடுத்துள்ளனர்.

இலுப்பைக்குடித் தேர்ச் சிற்பங்கள் புராண விளக்கங்களாக அழகுற அமைந்துள்ளன. (நி.ப.எ.43).

இலுப்பைக்குடி, இளையாத்தன்குடி, பி.அழகாபுரி, குருவிக் கொண்டான்பட்டி, காரைக்குடி, விரையாச்சிலை, இராங்கியம் தேர்கள் குறிப்பிடத்தக்கவை.

#### 4.4.3.2. வெள்ளித்தேர்

மரத்தேருக்கு வெள்ளித் தகட்டினைச் சுற்றிலும் பொருத்தி வெள்ளித் தேராகவும் கோயிலுக்கு வழங்கியுள்ளனர்.

கீழச்சிவற்பட்டி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயிலில் கலை அழகு மிக்க வெள்ளித்தேர் ஒன்று உள்ளது. பிரம்மா நான்கு குதிரைகளைச் செலுத்துவது போன்ற சிற்பங்கள் தேரின் முன்பகுதியை அலங்கரிக்கின்றன. தேரின் மேற்கூரையில் அழகு பொருந்திய மலர்களும், விளக்குக் கம்பங்களும், மாலை சூட்டவரும் தேவதைகளும் காணத்தக்கன.

மலேசியாவில் பினாங்கு தண்ணீர்மலையான் கோயிலிலும், பேரா தண்டாயுதபாணி கோயிலிலும், சிங்கப்பூர் தண்டாயுதபாணி கோயிலிலும் நகரத்தாரின் வெள்ளித் தேர்கள் மிகுந்த கலைச் சிறப்போடு காணப்படுகின்றன.

### 4.4.4. வாகனங்கள்

இறைவன் இறைவியர் எழுந்தருள வாகனங்கள் தேவைப்படுகின்றன. எனவே, மரத்தால் அமைந்த இடபம் (காளை), மயில், பெருச்சாளி, அன்னம், காமதேனு, குதிரை, சிம்மம், யாளி, கருடன் ஆகிய வாகனங்களை நகரத்தார் கோயில்களுக்கு வழங்கியுள்ளனர்.

#### 4.4.4.1. இடப வாகனம்

சிவனுக்கு இடப வாகனம் உரியது. எனவே, உலா வருகின்ற சிவனுக்கும், அம்மனுக்கும், சண்டிகேசுவரருக்கும் மூன்று இடப வாகனங்கள்

தேவைப்படுகின்றன. எனவே 1.85 மீட்டா உயரத்திலும், 1.50 மீட்டர் உயரத்திலும், 1.10 மீட்டா உயரத்திலும் மூன்று அளவுகளில் மூன்று இடப வாகனங்களை வயிரவன்பட்டி, கீழச்சிவற்பட்டி, குருவிக்கொண்டான்பட்டி, காரைக்குடி, தேவகோட்டை, கோட்டையூர், விரையாச்சிலை, புதுப்பட்டி முதலிய ஊர்களில் காணமுடிகின்றது. மானசாரம் என்னும் சிற்ப நூலில் இடப வாகனத்தின் இலக்கணம் கீழக்காணுமாறு கூறப்பட்டுள்ளது.[59]

இடபத்தை நின்ற நிலையிலோ படுத்த நிலையிலோ உலோகத்தினாலாவது சிலையினாலாவது மரத்தினாலாவது சுண்ணாம்பினாலாவது மண்கூட்டத்தினாலாவது சுக்கானிலாவது செய்யலாம்.

சில்பி சிரேஷ்டன் இதனைக் கனமாகவோ அவ்வாறல்லாததாகவோ செய்யலாம். இவ்வாறு விரஷபத்தினுயரம் ஐம்பதங்குலமுடையதாம்.

தலையின் நுனி பாகத்திலிருந்து (கொம்பு நீங்கலாக) கழுத்தின் அக்ரபாகம் முடிவாக பத்து அங்குலங்கள். அதன் கீரூா கழுத்தினுயரம், எட்டு அங்குலங்கள். அதன் கீழே துடையின் முடிவு வரை பதினாறு அங்குலங்களாம். துடையின் நீளம் ஆறு அங்குலங்களாம். முழங்காலின உயரம் இரண்டங்குலங்கள். கண்டங்கால் உயரத்தில் துடைக்குச் சமமானதாகும். (அதாவது ஆறு அங்குல உயரமுடையது). குளம்பினுயரம், இரண்டங்குலமாகும். கழுத்திலிருந்து வால் முடிவு வரை நாற்பதங்குல நீளமாகும்.

கொம்பின் நீளம் நான்கு அங்குலங்களாம். கொம்பின் அகலம் மூன்று அங்குலங்கள். கொம்பு நுனியினகலம், அதனிலெட்டிலொரு பாகமாகும். நெற்றியினகலம் ஒன்பதங்குலங்களாம். முகத்தினகலம் ஐந்தங்குலங்கள். முகத்தினுயரமும் அதற்குச் சமமானதே. கண்ணின் நீளம் இரணடங்குலங்கள். அரையங்குலத்திற்கு மேல் அதனுயரமாகும். இருபுறமும் விழியின் நிர்கமம் (வெளி நீளம்) அரையங்குலமாம். இரு கண்களினிடையில் முகத்தின் நீளம் எட்டு அங்குலங்களெனக் கருதப்பட்டிருக்கின்றது. அதனின்றும் பொட்டுக்குழி ஆறு அங்குலங்களெனக் கூறப்படுகின்றது. கொம்புகளின் நடுயிடைவெளி நான்கு அங்குலங்களாம். நெற்றியினுயரமும், அவ்வாறே நேத்திராந்தத்திலிருந்து நேத்திர முடிவுவரையுள்ள இடைவெளி நான்கு அங்குலங்களாம். காதின் நீளம் ஐந்து அங்குலங்களாம். காதின் அடிப்பாகம் இரண்டு அங்குலங்களாம். அகலமும் அதற்குச் சமமானதே. நடுவினகலம் நான்கு அங்குலங்கள். நுனியினகலம் ஓரங்குலமாகும். சுற்றளவு அரையங்குலமாம்.

மூக்கின் நீளம் ஒன்றரையங்குலமெனக் கூறப்பட்டிருக்கின்றது. மூக்கின் ஓட்டையின் அகலம் ஒரு அங்குலமாகும். மூக்கின் அக்ரபாகம் ஐந்து அங்குல நீளமுடையதாகும். மேல் உதடு மூன்று அங்குல நீளமுடையது. கீழுதடு மூன்றங்குல நீளமுடையது. நாக்கின் நீளம் மூன்றங்குலங்களாம். அதன் அகலம் இரண்டங்குலமாகும். அதன் கனம் ஓரங்குலமாகும். மேற்கழுத்தினகலம் ஐந்தங்குலங்களாகும். அடிக்கழுத்தினகலம் மூன்றங்குலங்கள். பன்கழுத்தின் மூலத்தில் கனம் எட்டு அங்குலங்கள். அக்ர (நுனி) பாகத்தில் ஆறு அங்குலங்கள். தோளில் (கழுத்தில்) திமிலின் அகலம் ஆறு அங்குலங்கள். அதனுயரம் நான்கு அங்குலங்கள். கழுத்திலுள்ள துப்பட்டியின் மூலம் நடு நுனிகளின் அகலம் முறையே நான்கு, மூன்று, இரண்டு அங்குலங்களாம்.

ஆங்கு கழுத்திற்கு முன்பு எட்டு அங்குல கனத்தில் பிம்பத்தைச் செய்ய வேண்டும். (இது மாமிசச் சதை). இதனடியினகலம் இரண்டங்குலம். இருதயத்திலிருந்து சந்தி வரையில் அதனுயரம் பதினொரங்குலங்கள். பிருஷ்டத்தினுயரம் பதினான்கு அங்குலங்கள். பிருஷ்டத்தினகலம பன்னிரண்டு அங்குலங்கள்.

பின்புறத் துடைகளின் அடிப்புறத்தினகலம் பத்து அங்குலங்களாகும். நடுவினகலம் எட்டு அங்குலங்களாம். நுனியினகலம் நான்கு அங்குலங்களாம். துடையின் நீளம் ஐந்து அங்குலங்கள். முழங்காலினுயரம் இரண்டங்குலங்கள். கண்டங்காலின் நீளம் ஐந்து அங்குலங்கள். குழம்பினுயரம் இரண்டங்குலங்கள்.

முழங்காலின் சுற்றளவு மூன்றரையங்குலங்களெனக் கூறப்பட்டிருக்கின்றது. குளம்பின் நீளம் இரண்டங்குலங்களாகும். வாலின் அடிப்புறம் இரண்டங்குல அளவுள்ளதாம். பின்புறத்துத் துடைகளிரண்டின் நடுவில் வயிற்றைச் சார்ந்து, அண்டகோசமும் ஆண் குறியுமிருக்க வேண்டும். தோளின் அகலம் ஆறு அங்குலஙகள். அதற்கு கீழுள்ள துடையின் அகலம் அடிப்பாகத்தில் நான்கு அங்குலங்களெனவும் நுனிபாகத்தில் மூன்றரையங்குலங்கள் எனவும் கூறப்பட்டிருக்கின்றது. முழங்காலினகலம் மூன்றங்குலங்கள். கண்டங்காலின் அகலமும் அவ்வாறே. (மூன்றங்குலங்கள் அகன்றது அடிப்புறத்தில்) கண்டங்காலின் நடுப்பாகம் இரண்டரையங்குலங்கள் அகன்றது. அக்குளம்புகளுள்ள நுனிபாகமோ அதற்குச் சமமானது. (நுனிக் கண்டங்காலினகலம் இரண்டங்குலங்களெனக் கருத்து) எஞ்சியவற்றை யுந்தியுடனிணைந்ததாகச் செய்ய வேண்டும். இடபத்தை வெண்ணிறத்துடன் சோபிக்கின்றதாக நிறுவ வேண்டும்.

பரமமங்களமான இந்த விருஷபத்தை வெண்ணிறங் கொண்டதாகவும் கொம்புகளில் கருநிறங் கொண்டதாகவும் நான்கு கால்களில் குளம்புகளிலும் வாலின் மயிரிலும் புகை நிறமுடையதாகவும இரு காதுகளிலும் வெளிர் செந்நிறங் கொண்டதாகவும் அமைக்க வேண்டும்.

மேலும் கொம்பைச் சார்ந்த பொட்டுப் பிரதேசத்தில் நன்கு செந்நிறங் கொண்ட சிறந்த மலர்மாலையுடையதாகவும், கழுத்தில் ருத்ராக்ஷங்களாலாகிய மாலைகளையுடையதாகவும், புரசம்பூக்களாலாகிய மாலைகளையுடையதாகவும், முதுகின்மேல் விரித்த புலித் தோலினாலழகியதாகவும், வண்டுகளும் பன்றிகளும் திகழும் நெற்றிப் பட்டத்தில் பிரகாசிக்கும் இலைகொடிகள் போன்ற பல ரத்தினங்களால் சோபிக்கின்றதாகவும, காதுகளிலும் உடலிலும் இருபுறங்களிலும் சாமரங்களுடன் கூடியதாகவும்; பாதங்களில் தண்டை முதலிய அணிகளுடன் கூடியதாகவும் செய்ய வேண்டும்.

ஸ்ரீ மானசாரமென்னும் வாஸ்து சாஸ்திரத்தில் மேற்கண்டவாறு இடபத்தின் சிற்பத்திற்கு 79 இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன.

வயிரவன்பட்டியில் 1.10 மீட்டர் உயரத்தில் உள்ள இடப வாகனத்தில் 75 இலக்கணங்கள் பொருந்தி வருகின்றன. (நி.ப.எ.44).

சிறிதே வாய் திறந்துள்ள இடபத்தினுடைய நாக்கின் நீளத்தைக் கணக்கிட இயலவில்லை. கழுத்தில் செந்நிறம் கொண்ட மலர்மாலையைத் தவிர ருத்ராக்ஷங்களாலாகிய மாலை காணப்படவில்லை. முதுகின்மேல் புலித்தோல் காணப்படவில்லை. காதுகளிலும் உடலில் இருபுறங்களிலும் சாமரங்கள் காணப்படவில்லை. மற்ற 75 இலக்கணங்களுக்கும் இலக்கியமாக அவ்விடபச் சிற்பம் அமைந்துள்ளது.

பிற இடப வாகனங்கள் அளவால் பெரியவையாக இருக்கின்றன. எனினும், மேற்கண்ட இலக்கணங்களில் 75 விழுக்காடு பொருந்தி வருகன்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

### 4.4.4.2. பிற வாகனங்கள்

நகரத்தார் கோயில்களில் மயில், பெருச்சாளி, அன்னம், கருடன், கைலாயம், காமதேனு, சிம்மம், யாளி, வெள்ளையானை ஆகிய மரச் சிற்ப வாகனங்கள் உள்ளன.

தேவகோட்டை, காரைக்குடி, கோட்டையூர், கீழச்சிவற்பட்டி, இரணியூர், வயிரவன்பட்டி, குருவிக்கொண்டான்பட்டி, வேந்தன்பட்டி, பொன்னமராவதி, புதுப்பட்டி ஆகிய ஊர்களில் உள்ள நகரச் சிவன் கோயில்களில் மேலே குறிப்பிடப்பட்டுள்ள வாகனங்கள் குறிப்பிடத்தக்க முறையில் மானசார இலக்கணத்திற்கு ஏற்ப அமைந்துள்ளன.[60] பிள்ளையார்ப்பட்டியில் உள்ள அன்ன வாகனமும் (நி.ப.எ.45) வயிரவன்பட்டி மயில் வாகனமும் (நி.ப.எ.46) சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

### 4.4.4.3. வெள்ளி வாகனங்கள்

இறைவன் இறைவியருக்கு வெள்ளியில் அங்கி செய்வது போல வாகனங்களுக்கும் வெள்ளித் தகட்டினால் அங்கி போலச் செய்து மரத்தாலான வாகனத்தின் மீது அதனைச் சுற்றிலும் வைத்து ஆணி அடித்துவிடுவார்கள். இது போன்ற வெள்ளித் தகடு வேயப்பெற்ற வாகனங்களை வெள்ளி வாகனங்கள் என்பார்கள்.

இடபம், மயில், பெருச்சாளி ஆகிய மூன்றும் வெள்ளி வாகனங்களாகக் கோட்டையூர், கீழச்சிவற்பட்டி, காரைக்குடி, தேவகோட்டை, அரிமளம், இரணியூர் முதலிய ஊர்களில் உள்ள நகர சிவன் கோயில்களில் காணப்படுகின்றன. மரச் சிற்பங்களில் காணப்படும் அத்தனை கலை நுட்பங்களும் இந்த வெள்ளி வாகனத்திலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

### 4.4.4.4. தங்க வாகனம்

மரத்தாலான வாகனத்திற்கு மேல் வெள்ளித் தகட்டைப் பொருத்துவதைப் போலத் தங்க முலாம் பூசிய தகட்டைப் பொருத்தி வைப்பது தங்க வாகனம் எனப் பெயர் பெறுகின்றது.

குதிரை, கருடன் முதலிய வாகனங்கள் தங்க வாகனங்களாக உள்ளன.

தேவக்கோட்டை நகரச் சிவன் கோயிலில் தங்கக் குதிரை வாகனம் உள்ளது. கீழச்சிவற்பட்டி நகர சிவன் கோயிலில் தங்கக் குதிரை வாகனமும் பெருமாள் கோயிலில் தங்கக் கருட வாகனமும் உள்ளன.

### 4.4.4.5. பல்லக்கு, ஊஞ்சல், கேடகம், சகடை

நகரத்தார் கோயில்களில் பள்ளியறை உண்டு. அங்கிருந்து மூலவரைக் காலையில் கர்ப்பக் கிரகத்திற்கு எடுத்துச் செல்வதற்கும், இரவு அங்கிருந்து பள்ளியறைக்குக் கொண்டு வருவதற்கும் மரத்தாலான ஒரு பல்லக்கு பயன்படுத்தப்படுகின்றது.

இப் பல்லக்கின் நீளம் 1.30 மீட்டர். அகலம் 56 செ.மீ. உயரம் 80 செ.மீ. ஆகும்.

மூலவரும் அம்மனும் இரவில் ஒன்றாக தங்குவதற்குப் பள்ளி அறையில் ஊஞ்சல் உண்டு. இந்த ஊஞ்சலின் நீளம் 97 செ.மீ., அகலம் 60 செ.மீ., உயரம் 1.50 மீட்டா ஆகும்.

வயிரவன்பட்டியில் இவ்வூஞ்சல் மரத்தால் செய்யப்பெற்று வண்ணம் பூசப்பட்டுள்ளது. இரணியூரால் இப்பள்ளியறை ஊஞ்சல் மரத்தால் செய்யப் பெற்று முழுவதும் சிறிய சிறிய சதுரக் கண்ணாடிகள் பதிக்கப்பட்டுள்ளன.

கீழச்சிவற்பட்டியில் இப்பள்ளியறை ஊஞ்சல் மரத்தால் செய்யப் பெற்று முழுவதும் வெள்ளித் தகடு போர்த்தப்பெற்றுள்ளது. (நி.ப.எ.47).

தெய்வத் திரு உலாவிற்காகப் பல்வேறு உயர அளவைகளில் கேடகங்கள், ஆட்கள் தூக்கிச் செல்லும் அமைப்பில் உள்ளன.

எந்த வாகனமும் அழகு வேலைப்பாடு இல்லாமல் சம தளத்தில் செய்யப்பட்ட நான்கு சக்கர மட்டத் தேரினைச் சகடை என்பர். இது ஒவ்வொரு கோயிலிலும் இரண்டுக்குக் குறையாமல் காணப்படுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. சா.கணேசன், "நகரத்தார் வரலாறு", கோட்டையூர் திருக்குட நீராட்டு மலர். ப. 80.
2. i) சா.கணேசன், பிள்ளையார்ப்பட்டித் தலவரலாறு, ப.12.
   ii) தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், "பிள்ளையார்பட்டிப் பிள்ளையார்," வேங்கடம் முதல் குமரிவரை IV (பொன்னியின் மடியிலே), பக். 29-31.

iii) என். கிருஷ்ணசாமி, "பிள்ளையார்பட்டி-பல்லவர்காலக் குடைவரைக் கோயில்", தினமணி சுடர் அனுபந்தம் 7.9.1980, ப.2.

3. i) இரா. நாகசாமி, "தமிழ்நாட்டுச் சிற்பங்கள்", தமிழகக் கோயிற்கலைகள், ப.87.
   ii) இரா. நாகசாமி, ஓவியப்பாவை, ப.29.
   iii) KR. Srinivasan, Temples of South India, p. 53.
4. Ibid. 3.i, ii, & iii.
5. வை. கணபதி ஸ்தபதி, சிற்பச்செந்நூல், ப.11.
6. கே.எஸ். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.), மயமதம், ப.244.
7. கே.எஸ். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.), ஸாரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரம், ப.161.
8. Ibid. ப. 162.
9. Ibid. ப.163.
10. நீ.வை. வேங்கடசுப்பிரமணிய சாஸ்திரி (மொ.பெ.ஆ.) மானசாரம், ப.172.
11. D.N. Shukla, Vastu Sastra, Vol. II, p. 296.
12. கே.எஸ். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.), Op. cit. ப.390.
13. சுப. அண்ணாமலை, "வயிரவன் கோயில் வரலாறு", நகர வயிரவன் கோயில் திருக்குட நந்நீராட்டு விழாச் சிறப்பு மலர், ப. இல்லை.
14. வை. கணபதி ஸ்தபதி, Op. cit. ப.82.
15. வை. கணபதி ஸ்தபதி, "திருக்கோயில்", மதுரை கும்பாபிடேக மலர், ப. 136.
16. D.N. Shukla, Op. cit. p. 264.
17. கே. வாசுதேவ சாஸ்திரி (மொ.பெ.ஆ.), ஸகளாதிகாரம், பக். 108-110.
18. Ibid, pp. 114-115.
19. கே.எஸ் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.), Op. cit. பக்.226-229.
20. D.H. Shukla, Op. cit. pp. 315-316.
21. க்ஷே.சம். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.), ஸ்ரீதத்துவ நிதி (இரண்டாம் பாகம்), ப. 448.
22. நீ.வை. வேங்கட சுப்பிரமணிய சாஸ்திரி (மொ.பெ.ஆ.),மானசாரம்,பக். 88-90.
23. Ibid. p. 91-93.

24. கே.எஸ். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.). ஸாரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரம். பக். 248-249.
25. வி.சுந்தர சர்மா (மொ.பெ.ஆ.). ப்ராஹ்மீய சித்ர கர்ம சாஸ்திரம். பக். 35-36.
26. நீ.வை வேங்கட சுப்பிரமணிய சாஸ்திரி (மொ.பெ.ஆ.) Op. cit. பக். 163-165.
27. அகம். 287:4-6; 307:11-12; புறம். 52:12-13; முருகு. 225-226; பட். பாலை 246-249.
28. பரி. 5:78; 8:124; 14:3; 21:11; முருகு 10; பெரும்பாண்:75.
28அ. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. சிலப்பதிகார ஆராய்ச்சி. ப.147.
28ஆ. இராம.சுப்பிரமணியன். நாட்டரசன்கோட்டை. நேர்காணல் (18.6.83).
29. நீ.வை. வேங்கட சுப்பிரமணிய சாஸ்திரி. (மொ.பெ.ஆ.) Op.cit., பக். 219-233.
30. இரா. இளங்குமரன். மதுரைக்கோயில் வரலாறு. பக். 13-15.
31. கம்பராமாயணம். மருத்துமலைப்படலம். பாடல் 111.
32. Ibid. பாடல் 112.
33. இரா. இளங்குமரன். Op. cit. ப. 69.
34. கே.எஸ். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.). Op.cit. பக். 267-271.
35. கம்பராமாயணம். இரணியன் வதைப்படலம். பாடல்: 153.
36. D.N.Shukla. Op.cit. pp. 337-341.
37. கே.வாசுதேவ சாஸ்திரி (மொ.பெ.ஆ.) Op.cit. பக். 79-82.
38. D.N.Shukla. Op.cit. p. 256.
39. கே. வாசுதேவ சாஸ்திரி (மொ.பெ.ஆ.) Op.cit. பக். 96-98.
40. இரா. நாகசாமி. Op.cit. ப. 67.
41. Ibid. ப. 67.
42. இரா. நாகசாமி. "செப்புத் திருமேனிகள்". Op. cit. ப. 96.
43. கே.எஸ். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.). Op. cit. பக்.193-194.
44. கே. வாசுதேவ சாஸ்திரி. (மொ.பெ.ஆ.). Op.cit. பக். 88-89.
45. Ibid. pp. 72-79.
46. கே.எஸ். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி (மொ.பெ.ஆ.) Op.cit. பக். 170-192.
47. D.N.Shukla. Op.cit. p. 257.

48. நீ.வை. வேங்கட சுப்பிரமணிய சாஸ்திரி (மொ.பெ.ஆ.) op. cit. பக். 170-175.
49. கே. வாசுதேவ சாஸ்திரி (மொ.பெ.ஆ.) Op.cit. பக். 60-72.
50. கே.எஸ். சுப்ரஹ்மண்ய சாஸ்திரி. (மொ.பெ.ஆ.) Op.cit. பக். 138-169.
51. வை. கணபதி ஸ்தபதி. Op. cit. ப. 125.
52. கே. வாசுதேவ சாஸ்திரி (மொ.பெ.ஆ.). Op.cit. பக். 108-110.
53. கே.எஸ். சுப்ரஹ்மண்ய சாஸ்திரி. (மொ.பெ.ஆ.) Op.cit. பக்.226- 229.
54. கே. வாசுதேவ சாஸ்திரி (மொ.பெ.ஆ.). Op.cit. பக்.114-115.
55. நீ.வை. வேங்கட சுப்பிரமணிய சாஸ்திரி. (மொ.பெ.ஆ.). Op.cit. பக். 91-93.
56. கே.எஸ். சுப்ரஹ்மண்ய சாஸ்திரி. (மொ.பெ.ஆ.) Op.cit. பக். 248-249.
57. வி. சுந்தர சர்மா. (மொ.பெ.ஆ.). Op.cit. பக். 35-36.
58. இரா. நாகசாமி. "தமிழ்நாட்டுச் சிற்பங்கள்". Op.cit. பக்.79-80.
59. தி.வை. வேங்கடசுப்பிரமணிய சாஸ்திரி (மொ.பெ.ஆ.). Op.cit. பக். 257-262.
60. i) Ibid. "அன்னத்தின் இலக்கணம்". பக். 234-240.
    ii) Ibid. "கருடனின் இலக்கணம்". பக். 241-250.
    iii) Ibid. "சிம்மத்தின் இலக்கணம்". பக். 263-268.

# 5. நகரத்தார் பாணிச் சிற்பக்கலையின் சிறப்புக்கள்

## 5.1. நகரத்தார் பாணி

சிற்பக்கலை பற்றிக் கூறும்போது பல்லவர்பாணி, சோழர் பாணி, பாண்டியர் பாணி, விஜயநகர மன்னர் பாணி, நாயக்கர் பாணி ஆகிய ஐந்து பாணிகளைச் சிற்பக்கலை வல்லுநர்கள் குறிப்பிடுவார்கள். நகரத்தார் பாணி ஆறாவதாக அமைந்துள்ளது.

மேற்கூறிய ஐந்து பாணிகளுக்கும், தனித்தனிச் சிறப்புக்கள், தனித் தன்மைகள் உள. நகரத்தார் பாணியிலும் தனிச்சிறப்புக்கள், தனித்தன்மைகள் உள்ளன.

நகரத்தார் வணிக மரபினர். எனவே தேசம் தோறும் சுற்றித் திரிந்த அவர்கள், மேற்கண்ட ஐந்து பாணிகளிலும் உள்ள நிறைவான தனித்தன்மைகளை மட்டும் எடுத்துக்கொண்டு, அவற்றினும் மேலான வளர்ச்சியைச் சிற்பங்களில் வளர்த்துக் காட்டியுள்ளனர். அது குறைவிலா நிறைவுகளின் கூட்டமாக அமைந்தது. அதுவே நகரத்தார் பாணி என ஆயிற்று.

## 5.2. பல்லவர் பாணியின் வளர்ச்சி

பல்லவர் பாணிச் சிற்பங்கள் கல்லைக் குடைந்து செதுக்கப்பட்டவை. அவற்றில் பெரிய பெரிய உறுப்புக்கள் மட்டுமே தெரியும். பல்லவர்காலச் சோமாஸ்கந்தர் உருவில் கிரீடம், முகம், தோள், கைகள், கால்கள் ஆகிய இடங்களிலெல்லாம் பள்ளம் பள்ளமாகச் சிற்பம் முழுமை பெறாது இருக்கின்றது. கண், காது, மூக்கு, விரல், நகங்கள் போன்ற நுட்பமான பகுதிகளைச் சரியாகக் காண முடியவில்லை. காஞ்சிபுரம் தான்தோன்றீஸ்வரர் கோயில் சிற்பங்களும் இவ்வாறே காணப்படுகின்றன. இதற்குக் காரணம் சிலை வடிக்க அக்காலத்தில் கிடைத்த கல் குறைபாடுடையது. அத்துடன் சிற்பக் கலையின் தொடக்ககாலம் என்பதால் உளியின் கூர்மை ஆழமாகவும் நுட்பமாகவும் இயங்கவில்லை.

நகரத்தார் பல்லவர்காலச் சிற்பங்களைக் கண்டதும், அவர்களைப் போலக் கல்லை உடைத்துக் கோயில் அமைப்பதையும் தூண்கள் அமைப்பதையும் ஏற்றுக் கொண்டனர். உருவச் சிறப்பிற்காகக் குறைபாடுடைய கற்களை விடுத்து, மிக நுட்பமான வேலைக்கேற்ற உயர்ந்த ரகக் கற்களைத் தேர்ந்தெடுத்தனர்.

பல்லவர்களைப் போல நகரத்தார்களும் ஒற்றைக் கற்றளிக் கோயில் அமைத்துள்ளனர். வயிரவன்பட்டி வயிரவன்கோயிலில் சண்டேசுவர நாயனாருக்கு ஒற்றைக் கல்லில் ஒற்றைக் கற்றளிக் கோயிலை அமைத்துள்ளனர் (நி.ப.எ.48). இரணியூரில் கோயிலின் மேல் தளத்தில் விழும் மழைநீரை வெளியே அனுப்ப, இரண்டு கல்தூண்களையே குடைந்து குழாயாகப் பயன்படுத்துகின்றனர்.

## 5.3. சோழர் பாணியின் வளர்ச்சி

சோழர் காலத்தில்தான் சிற்பக்கலை சிறப்பான நிலைக்கு உயர்ந்தது. கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள கலைமகள் சிலையும் சண்டேச அனுக்கிரக மூர்த்தி சிலையும் இதற்கு சரியான சான்றுகளாகும். இச்சிற்பங்களில் உடல் உறுப்புக்கள் அணிகலன்கள் ஆகியவற்றின் ஒவ்வொரு சிறு சிறு பகுதியும் நுட்பமாக செதுக்கப்பட்டுள்ளது.

இராஜராஜன் காலம் வரையில் கோயில்கள் மிகவும் சிறிய அளவில் கட்டப்பட்டன. இராஜராஜன் தான், முதன் முதலில் உயரமான கோயிலைக் கட்டினான். எனினும் கோபுரங்கள் விமானங்களைவிடச் சிறியவையாகவே கட்டப்பட்டன.

இராஜராஜனுடைய சிற்பங்களிலும் ஒரு குறை உண்டு என்பார் டாக்டர் இரா. நாகசாமி.

அவன் கட்டுவித்த கோபுரங்களையும் விமானங்களையும் ஏராளமான சிற்பங்கள் அலங்கரித்தபோதிலும் அவை கட்டடத்திற்கு அங்கமாகக் கட்டடத்தின் பெருமிதத்திலே மறைந்து காணப்படுகின்றன.[1] பிற்காலச் சோழர் சிற்பங்கள் கட்டடத்தின் அங்கமாக இடம் பெறுகின்றனவே அன்றித் தங்களது தனித்தன்மையை இழந்து விட்டதைக் காணலாம்.[2]

நகரத்தார்கள் சோழர் பாணியைப் பார்த்து அவர்களைப் போலவே தெளிவாகவும் அருமையாகவும் சிற்பங்களைச் செய்தார்கள். ஆனால் சிற்பங்கள் கட்டடத்தின் அங்கமாக இடம்பெற்றுத் தங்களது தனித்தன்மையை இழந்துவிடாமலிருக்கத் தூண்களிலும் அலங்கார மண்டபங்களிலும் சிற்பங்களின் அழகு தனித்துத் தெரியும் வண்ணம் சிற்பங்களை அமைத்துள்ளனர். இரணியூரில் தூண் சிற்பமாக உள்ள வீரலெட்சுமி சிற்பம் இதற்குச் சான்றாகும் (நி.ப.எ.49).

## 5.4. பாண்டியர் பாணியின் வளர்ச்சி

பாண்டியர் பாணியில் முதல் சிறப்புப் பெறுவது பிரம்மாண்டமான கோபுரங்களே. விமானங்களுக்குப் பதிலாகக் கோயிலின் நாற்றிசையிலும் உள்ள வாயில்களின் மேல் மிகப் பெரிய கோபுரங்களைக் கட்டினர். சிறு சுற்றாலயங்கள், கொடுங்கைகள், ஒற்றைக் கற்றூண்கள், மன்னர்களின் உருவச் சிற்பங்கள் முதலியன பாண்டியர் பாணியின் தனி முத்திரை பெற்றவை.

கோபுரங்கள், விமானத்தை விடச் சிறிது உயரம் கூடியதாக அமைந்திருந்தால், மிகச் சிறப்பாக இருக்கும். விமானத்தைவிட மிக அதிகமான உயரத்தில் கோபுரங்களைக் கட்டியதால், விமானங்கள் இருக்குமிடமே தெரியாத அளவிற்கு உயர்ந்து கோபுரங்களும் மதில் சுவரும் விமானங்களை மறைத்துவிட்டன. இது பாண்டியர் பாணியில் காணப்படுகின்ற ஒரு குறையாகும்.

நகரத்தார்கள், பாண்டியர் பாணியில் உயர்ந்த கோபுரங்கள், சிறு சுற்றாலயங்கள், கொடுங்கைகள், ஒற்றைக் கற்றூண்கள், மனிதர்களது சதாசேவைச் சிற்பங்களை அமைத்தனர். எனினும் விமானத்தைப் பாண்டியர் பாணியில் சிறியதாகக் கட்டாமல் உயரமாகவே கட்டியுள்ளனர். எனவே கோபுரங்களையும் விமானங்களையும் அதிக உயர வேறுபாடின்றி ஒன்றை ஒன்று மறைக்காத அளவிற்கு அனைத்தும் நன்றாகத் தெரியும் வண்ணம் அமைத்துள்ளனர்.

## 5.5. விஜயநகர மன்னர் பாணியின் வளர்ச்சி

விஜயநகரப் பேரரசர்கள் பல சிற்பச் செழுமை வாய்ந்த மண்டபங்களைத் தோற்றுவித்தனர். இம் மண்டபங்களின் தூண்களில் பல சிற்பங்கள் அழகுற வடிக்கப்பட்டுள்ளன. சிறப்பாகக் குதிரை மீதும், யாளி மீதும் அமர்ந்து பாய்ந்துவரும் வீரர்களின் சிற்பங்கள் குறிப்பிடத்தக்கவை. திருவிளையாடற்புராணத்தின் அடிப்படையில் பல சிற்பங்களைத் தோற்றுவித்தனர்.

விஜய நகர மன்னர்கள் வடித்த சிற்பங்களில் அதிகமான அணிகலன்கள் காணப்படுகின்றன. உடலின் இயற்கை அழகை மறைக்காமல், குறைவான அணிகலன்களைப் பூட்டியிருப்பதே சிலையின் அழகை மிகுவித்துக் காட்டும். இவ்வாறின்றி அளவுக்கு அதிகமான அணிகலன்களைச் செதுக்கியிருப்பதே விஜயநகர மன்னர் பாணியில் உள்ள ஒரு குறையாகும்.

நகரத்தார்கள் விஜயநகரப் பேரரசர்கள் போலப் பல சிற்பச் சிறப்பு வாய்ந்த மண்டபங்களைத் தோற்றுவித்தனர். குதிரை வீரர்களின் சிற்பங்களை வடித்தாலும், அதில் வீரதீர உணர்ச்சியோ பழிவாங்கும் உணர்ச்சியோ காணப்படவில்லை. 'கடித்தோச்சி மெல்ல எறிவது' போன்ற தெய்வீக ஆனந்த உணர்ச்சியே குதிரை வீரனின் முகத்தில் ஒளிவிடுகிறது. இந்த முக அமைப்பும் நகரத்தார் பாணிகளுள் ஒன்றாகும். தூண்களில் பல சிற்பங்களை அழகுறச் செதுக்கினர். விஜயநகர மன்னர்கள் திருவிளையாடற்புராண அடிப்படையில் பல சிற்பங்களை ஏற்படுத்தியதைப்போல நகரத்தார்கள் பெரியபுராணம், மகாபாரதம், இராமாயணம் முதலிய பல இலக்கியங்களின் அடிப்படையில் பல சிற்பங்களைத் தோற்றுவித்தனர். விஜய நகரப் பாணியில் அதிக அணிகலன்களைச் செதுக்காமல் அளவான அணிகலன்களோடு சிலைகளை அழகாக வடித்தனர்.

## 5.6. நாயக்கர் பாணியின் வளர்ச்சி

திருமலை நாயக்கர் புதுப்புது மண்டபங்களையும் அம்மண்டபத் தூண்களில் புராண விளக்கச் சிற்பங்களையும் விஜயநகரப் பாணியில் ஏற்படுத்தினார். அவர் சென்று வழிபட்ட கோயில்களிலெல்லாம் தன்னுடைய உருவச் சிலையைக் கல்லிலே சதா சேவை நிலையில் வடித்துவைக்கச் செய்தார்.

டாக்டர் இரா. நாகசாமி, நாயக்கர் பாணியைப் பற்றிக் கீழ்வருமாறு மதிப்பிட்டுள்ளார்:

திருமலை நாயக்கருக்குப் பிறகு மதுரை நாயக்கர் சிற்பக்கலை இருந்தது. ஆனால் சிறக்கவில்லை. மங்கம்மாள் காலத்திய சிற்பங்கள் இருக்கின்றன. திருப்பரங்குன்றிலே பார்க்கலாம். அதில் உயிரில்லை; உணர்ச்சியில்லை; ஆனால் கல் இருக்கிறது. அவ்வளவுதான்.[3]

நகரத்தார், திருமலை நாயக்கர் பாணியில் புது மண்டபங்களைக் கட்டினார்கள். அம்மண்டபத் தூண்களில பல புராண ஆகம விளக்கச் சிற்பங்களைத் தோற்றுவித்தார்கள். ஆனால் மங்கம்மாள் காலத்திய சிற்பங்களைப் போல, உயிரும் உணர்ச்சியும் இல்லாத சிற்பங்களைப் படைக்கவில்லை. உயிரோட்டம் உள்ள உணர்வுப் பூர்வமான சிற்பங்களையே அவர்கள் தோற்றுவித்தார்கள்.

இரணியூர் ஆட்கொண்டநாதர் கோயிலில் உள்ள வீரபத்திரர் கண்களில் கோபச் சூடு பறப்பதை இன்றும் காணலாம். (நி.ப.எ.50). வயிரவன்பட்டி வயிரவன் கோயிலில் உள்ள கண்ணப்பரின் கடவுள் அன்பு, அவரது முகத்தில் குடியிருப்பதைக் காணலாம். இரணியூர் ஆட்கொண்டநாதர் கோயிலில் உள்ள கல்யாணசுந்தரரின் கைபட்டு மீனாட்சியின் கண்களிலும் இதழ்களிலும் நாணம் தவழ்வதைப் பார்க்கலாம். மார்க்கண்டேயனைக் காக்கும் சிவபெருமானின் தெய்வீக அன்பை அவர் திருமுகத்தில் காணலாம். எமன் வலிவுடன் நிற்கும்போது அவன் கால் நரம்புகள் புடைத்திருப்பதைப் பார்க்கலாம். அவனது பாசக் கயிற்றில் எத்தனை புரிகளைச் சேர்த்து முறுக்கியிக்கிறான் என்பதை எண்ணிப் பார்க்கலாம். பயத்தினால் அவனது கிரீடம் கீழே விழுந்து கிடப்பதையும் காணலாம்.(நி.ப.எ.21). இப்படி உயிரோட்டமுள்ள சிற்பங்களையே நகரத்தார் படைத்துள்ளனர்.

## 5.7. நகரத்தார் பாணியின் பிற தனித்தன்மைகள்

பல்லவர், சோழர், பாண்டியர், விஜயநகர மன்னர், நாயக்கர் பாணிகளில் உள்ள குறைகளை விடுத்து, நிறைகளைத் தொகுத்து அவற்றின் வளர்ச்சியாகச் சிற்பப்பணி புரிந்தது மட்டுமே நகரத்தார் பாணி அன்று. அவர்களுக்கென்று சில தனித்தன்மைகள் உள. அவற்றையும் வரிசையாகக் காணலாம்.

### 5.7.1. பள்ளப்பத்தி

கோயில் மண்டபங்களையும், மூலவர், பரிவார தேவர்களின் சிற்றாலயங்களையும் உயர்த்திக் கட்டித் திருச்சுற்றினை மட்டும் பள்ளமாக அமைத்துக் கட்டுவது பள்ளப்பத்தி எனும் நகரத்தார் பாணிக் கோயில் அமைப்பாகும் (நி.ப.எ.51).

நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த காலத்தில் கடல் பொங்கி வந்ததால் பல பொருள்களை இழந்தவர்கள். எனவே பழைய பயத்துடன் தற்காப்பு முன்னெச்சரிக்கை நடவடிக்கையுடனும் அவர்கள் தங்களது வீட்டைக் கட்டும்போதும் தளத்தை உயர்த்தியே கட்டுவது அவர்கள் மரபு.

அதே மரபினைக் கோயில் அமைப்பிலும் கைக்கொண்டு தெய்வங்களுக்குத் தளத்தை உயர்த்திக் கட்டியுள்ளனர்.

### 5.7.2. தலவிருட்சம்

மரவழிபாடு சங்ககாலத்திலிருந்து காணப்படும் மிகப் பழமையான வழிபாடுகளுள் ஒன்றாகும். மரத்தின் அடிப் பகுதியிலேயே கந்து எனும் லிங்க வடிவில் இறைவனை வழிபட்டுள்ளனர். இதனைத் தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு, திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை ஆகிய இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

இவ்வாறு எந்த மரத்தின் அடியில் தெய்வ உருவங்கள் வைத்து வழிபடப் பெற்றனவோ, அந்த மரத்தினைத் 'தலவிருட்சம்' என்று பெயரிட்டு வழபடுவது நகரத்தாரின் தனிப்பட்ட சிறப்பு மரபாகும்.

தலவிருட்சம் இன்றும் உயிரோடு வளர்ந்துகொண்டிருந்தால் அதனைச் சுற்றிலும் பாதுகாப்பு மேடையினைக் கட்டி வழிபடுகின்றனர். மாத்தூரில் உள்ள மகிழ மர வழிபாடு இதற்குச் சரியான சான்றாகும்.

தலவிருட்சம் அவ்வாறு இப்பொழுது உயிரோடு இல்லாதிருப்பின் அம்மரம் இருந்த இடதத்தில் அம்மரத்தினைப் போன்ற கற்சிற்பத்தைச் செதுக்கி வைத்து வழிபடுவர்.

வயிரவன் கோயிலில் உள்ள அழிஞ்சி மரச் சிற்பமும் (நி.ப.எ.14) கீழச்சிவற்பட்டியில் உள்ள பலாமரச் சிற்பமும் (நி.ப.எ.15) இதற்குச் சரியான சான்றுகளாகும்.

### 5.7.3. கண்ணாடி

இறைவனை உபசரிப்பதற்காகத் தூபம், தீபம், அலங்கார தீபம், ரிஷப தீபம், ஒருமுகக் கற்பூர தீபம், நாகதீபம், புருஷ தீபம், பஞ்சதீபம், குடை, சுருட்டி, மகர தோரணம், ஆலவட்டம், கண்ணாடி, விசிறி, வெண்சாமரம், ஏழு முகக் கற்பூர தீபம் ஆகிய பதினாறு உபசாரக் கருவிகளைப் பயன்படுத்துகின்றனர். இவற்றுள் கண்ணாடியும் ஒன்று.

அழகுமிக்க இறைவன் சிற்பத்தைத் தோற்றுவித்தவர்கள், ஒரு கண்ணாடியின் செப்புத் திருவுருவத்தையும் மிக அழகியதாகச் சுவாமியின் கருவறை முன்பாக அர்த்த மண்டபத்தில் வைத்துள்ளனர்.

16 செ.மீ. விட்டமுள்ள வட்ட வடிவமான கண்ணாடியைச் சுற்றிலும் சுடர்க்கருக்குகள் காணப்படுகின்றன. 10 செ.மீ. உயரமுள்ள பீடத்தில் 50 செ.மீ. உயரமுள்ள தண்டுப் பகுதி உள்ளது. அதன்மேல் கண்ணாடி காணப்படுகிறது. பிள்ளையார் பட்டியில் உள்ள கண்ணாடிச் சிற்பம் (நி.ப.எ.52) குறிப்பிடத்தக்கது.

நகரத்தார் கட்டியுள்ள கோயில்களில் மட்டுமே இக் கண்ணாடிச் சிற்பம் உள்ளது. இச்சிற்பம் 60 செ.மீ. உயரத்திலிருந்து 1 மீட்டர் உயரம்வரை காணப்படுகிறது.

### 5.7.4. தூண் சிற்பங்கள்

அலங்கார மண்டபம், புது மண்டபம் ஆகியவற்றில் மட்டுமே சிற்பங்களை முன்னோர் அமைத்தனர். ஆனால் நகரத்தார்கள் ஒரு தூண் விடாமல், எல்லாத் தூண்களிலும் சிற்பங்களைச் செதுக்கியுள்ளனர். இவ்வாறு தூண்களில் உள்ள போதிகை முதலியவை நகரத்தார் பாணியைச் சார்ந்தவை.[4] ஒவ்வொரு தூணிலும் விநாயகர், சுப்பிரமணியர், மீனாட்சி திருக்கல்யாணம், நடராச தாண்டவம், காளி நர்த்தனம் முதலிய பல சிற்பங்கள் உள்ளன என்பார் கம்பன் அடிப்பொடி சா.கணேசன்.

வயிரவன் கோயிலில் உள்ள 198 தூண்களில் 792 சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

கீழச்சிவற்பட்டி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் உள்ள 180 தூண்களில் 720 சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தூண் சிற்பங்களில் சிவன், சக்தி, வயிரவர் ஆகியோரின் பல மூர்த்தங்கள், மாணிக்கவாசகர், மதுரைவீரன், இராமரின் தசாவதாரக் காட்சிகள், அனுமன், முனிவர்கள், சிவகணங்கள், நடனமாதர், யாணி, குதிரை, பசு, பாம்பு, ஆடு, அமுத கலசம், மலர்கள் ஆகியன காணப்படுகின்றன.

### 5.7.5. போதிகைகளில் சிங்க உருவம்

கல்தூண் எட்டுப் பகுதிகளைக் கொண்டது. கால், பத்ம, பந்தம், கலசம், தாடி, குமுதம், கமலம், பலகை, போதிகை என எட்டுப் பகுதிகளும் பெயர்பெறும். தூணை உத்திரத்துடன் இணைக்கும் பகுதியைப் போதிகை என்பர்.

இப்போதிகையின் அமைப்பு ஒவ்வொரு பாணியின்போதும் வளர்ந்து வந்திருக்கிறது.

பல்லவர் பாணிப் போதிகை, கால்வட்ட வடிவமானது. முற்காலச் சோழர்களின் பாணிப் போதிகை சதுர வடிவமானது. பிற்காலச் சோழர் பாணிச் சதுர வடிவப் போதிகையின் கீழ்ப்பகுதி, சிறிது வேலைப்பாடு அமைந்தது. விஜயநகரப் பாணியில் போதிகைக்கும் பலகைக்கும் இடையே இடைவெளி கூடியது. அதில் பிறைச் சந்திரன் வடிவம் போல வளைவாக ஒரு சிற்பம் செதுக்கப்பட்டது. நாயக்கர் பாணியில் அப்பிறைச் சந்திர வடிவத்தினை நீண்ட கழுத்துப் பகுதியோடு மிக நீளமாக வளர்த்து, அதன் முடிப்பாக ஒரு தாமரை மொட்டுச் சிற்பத்தினையும் சேர்த்துச் செதுக்கினர்.

நகரத்தார் பாணியாக அப்போதிகையின் கீழ் ஒரு சிங்கத்தின் சிற்பமும் கூடுதலாகக் காணப்படுகின்றது.

நகரத்தார் சிங்கக் கொடியினை உடையவர்கள். அவர்களது கொடியில் உள்ள சிங்க உருவத்தையே இத்தூண்களின் மேலும் செதுக்கச் செய்திருப்பார்கள் எனக் கருதலாம்.

பிள்ளையார்பட்டி அலங்கார மண்டபத்தில் உள்ள இப்போதிகைகளின் அழகு, முழுமையாக வெளிப்பட்டுத் தெரிவதற்காக அவற்றின்மேல் பல வண்ணங்கள் பூசப்பட்டுள்ளன (நி.ப.எ.53).

இரணியூர், கீழச்சிவற்பட்டி, இளையாத்தங்குடி, நாட்டரசன்கோட்டை ஆகிய ஊர்களில் உள்ள போதிகைகள் குறிப்பிடத்தக்கன.

### 5.7.6. தெய்வங்களுக்குரிய சரியான இட ஒதுக்கீடு

சிவனுக்கென்று தனிக்கோயிலும் சக்திக்கென்று தனிக் கோயிலும் முன்பு இருந்தன. சிவன் சக்தி ஆகிய இருவரையும் ஒரே ஆலயத்துக்குள் பக்கம் பக்கமாக வீற்றிருக்கச் செய்தவர்கள் நகரத்தார்களே என்பார் வை. கணபதி ஸ்தபதி.[5] நகரத்தார்களே, ஆகமங்களைத் தமிழில் மொழிபெயர்த்து எந்தெந்தத் தெய்வங்களை எங்கெங்கே அமைக்க வேண்டும் என்பதை அறிந்து முதன் முதலாக அவ்வாறு அமைத்தவர்கள் என்பார் வை. கணபதி ஸ்தபதி.

மிகப்பெரிய கோயிலான சிதம்பரத்தில் கூடப் பரிவார தெய்வங்களின் சிறுகோயில்கள் அங்குமிங்கும் சிதறியுள்ளன. நகரத்தார்களின் கோயில்களில் மட்டுமே காமிகாகமம், காரணகமம் ஆகிய ஆகமங்களின் விதிப்படி, தெய்வங்கள் அவரவர்களுக்கு உரிய இடத்தில் வைத்து வழிபடப்படுகின்றனர் என்பார் அவர். முறையான சிற்ப நிர்மாணம் நகரத்தார் பாணியை அடையாளம் காட்டுகின்றது.

### 5.7.7. வயிரவர் சிற்பம்

வயிரவர் வழிபாட்டிற்கு நகரத்தார் கொடுக்கும் இன்றியமையாத் தன்மை தனிச் சிறப்புடையது. பிற கோயில்களில் அதிகமாகக் காணப்படாத வயிரவர் சிற்பம், நகரத்தார் கோயில்கள் ஒவ்வொன்றிலும் இடம்பெற்றுள்ளது.

நகரத்தார் கோயில்களில் தினசரி காலை வழிபாடு திருவனந்தல் நிகழ்ச்சியில் தொடங்கும். அதில் செய்யப்படும் முதல் வழிபாடு வயிரவர் பூஜைதான். இரவு அர்த்த ஜாம நிகழ்ச்சியின் போது இறுதியாக வயிரவருக்குத் தான் பூஜை நடைபெறுகிறது. அப்போது கோயில் சாவிகள் அனைத்தையும் வயிரவரிடம் ஒப்படைத்து விடுகின்றனர். இப்படிக் கோயிலின் முழுப் பொறுப்பினையும் வயிரவரே வைத்திருப்பதாக நகரத்தார்கள் வழிபாட்டினைச் செய்து வருகின்றனர்.[6] இவ்வாறு வயிரவர் வழிபாடு நகரத்தார் கோயில்களில் சிறப்பிடம் பெறுகின்றதனால் நகரத்தார்களின் கோயில்கள் அனைத்திலும் வயிரவ்ரின் கற்சிற்பமும், செப்புத் திருமேனியும் அழகாகக் காணப்படுகின்றன.

### 5.7.8. தட்சிணாமூர்த்தி மண்டபம்

நகரத்தார்கள் சிவபூஜையில் மிகுந்த ஈடுபாடு மிக்கவர்கள். தகுதி மிக்க சிவாச்சாரியாரிடம் உபதேசம் பெற்றுத் தினமும் காலையிலும் மாலையிலும்

சிவபூசை செய்யும் வழக்கத்தினை உடையவர்கள். எனவே உபதேச நிலையில் அமைந்த தட்சிணாமூர்த்தியிடம் மிகுந்த பற்றுதல் கொண்டுள்ளனர். அதனால் கருவறையைச் சுற்றியுள்ள தேவகோட்டங்களில் நர்த்தன கணபதியின் அருகில் அமைந்துள்ள தட்சிணாமூர்த்தி சிலைக்கு மட்டும் ஒரு சிற்பச் சிறப்புமிக்க மண்டபத்தினை அமைத்துள்ளனர்.

பழங்காலத்தில் மரத்தால் கோயில்கட்டும் வழக்கம் இருந்தது. அம்மரபினைக் காட்டுவது போலவே மரத்தாலான உத்திரங்களில் உருவில் கற்பலகைகளைக் குடைந்து செதுக்கியுள்ளனர்.

இலுப்பைக்குடித் தான்தோன்றி ஈஸ்வரர் கோயிலில் உள்ள தட்சிணாமூர்த்தி சிம்ம மண்டபம் மிகச் சிறப்பு வாய்ந்தது. இரண்டு சிங்கங்கள் தூண்களைத் தாங்குகின்றன. சிங்கங்களின வாய் சிறிது திறந்துள்ளது. அதற்குள் ஒரு உருண்டை வடிவக் கல் உள்ளது. அக்கல்லைக் கைவிரலால் அசைக்க முடிகிறது. ஒரே கல்லில் சிங்கத்தினைச் செதுக்கியுள்ள சிற்பி, சிங்கத்தின் பற்களைச் செதுக்கிய பிறகு அதன் வாய்க்குள்ளே நுட்பமாக உளியினைச் செலுத்திக் கல் நொறுங்கிவிடாமல் மிக மென்மையாகச் செதுக்கி ஒரு கல் உருண்டையையே தோற்றுவித்துள்ளார். நகரத்தார்கள் மிக நுட்பமாகச் சிற்பக் கலையினை வளர்த்தமைக்கு இச்சிங்கத்தின் சிற்பம் சிறந்த சான்றாகும் (நி.ப.எ.54).

### 5.7.9. நந்திக்குச் சிறப்பிடம்

சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் என்னும் மூன்று கொள்கைகளைக் கொண்டது. லிங்கம், நந்தி, பலிபீடம் ஆகிய மூன்றும் அம்மூன்றின் குறியீடுகளாக இருக்கின்றன.

பதி என்பது லிங்க வடிவில் உள்ள இறைவனைக் குறிக்கும். பசு என்பது நந்தி வடிவில் உள்ள உயிர்களைக் குறிக்கும். பாசம் என்பது பலிபீட வடிவில் உள்ள உலக ஆசைகளைக் குறிக்கும். உலக ஆசைகளைத் துறந்து உயிர் இறைவனை நாட வேண்டும் என்பதே சைவ சித்தாந்தத்தின் முடிவாகும்.

நகரத்தார்கள், சிவபூசையிலும் சைவசித்தாந்ததிலும் மிகுதியான ஈடுபாடு கொண்டவர்கள். எனவே உயிரின் கடைதேற்றம் பற்றி நுட்பமாகக் கூறும் நந்தி உருவ வழிபாட்டின்மீது சிறப்புக் கவனம் செலுத்துகின்றனர.. ஆகவே, பிற கோயில்களில் உள்ளது போலத் தளத்திலேயே நந்தியின்

சிற்பத்தினை வைக்காமல், அதற்கென ஒரு மேடையினை அமைத்து அதன்மேல் நந்தியினை வைத்துள்ளனர். சில கோயில்களில் நந்திக்கென தனி மண்டபமே அமைத்துள்ளனர்.

ஒவ்வொரு நகரக் கோயிலிலும் நந்தியில் உருவம் மிகப் பெரியதாக அமைக்கப்பட்டுள்ளது. உயர்ந்த மேடையில் அமர்த்தப்பட்டுள்ளது. மாத்தூரில் நந்திக்குச் சிம்ம பீடம் அமைக்கப்பட்டுள்ளது. வயிரவன்பட்டியில் நந்திக்காகத் தனியே ஒரு மண்டபம் கட்டப்பட்டுளது. இவ்வாறு நந்தி சிறபத்திற்குத் தனிச் சிறப்பினை அளிப்பது நகரத்தாரின் தனித்தன்மையாகும்.

## 5.7.10. பன்னிரு இராசிச் சிற்பங்கள்

நகரத்தார்கள் இறை நம்பிக்கை மிக்கவர்கள். பன்னிரண்டு இராசிகளின் போக்கில்தான் வாழ்க்கைப் பாதை அமைகின்றது எனும் கோள் நம்பிக்கை உடையவர்கள். எனவே, நகரத்தார்கள் தாங்கள் கட்டுவித்த கோயில்கள் அனைத்திலும் சுவாமி சன்னிதியில் கொடிமரத்திற்கு முன்பாக உள்ள மேல் விதானத்தில் பன்னிரண்டு இராசிகளையும் செதுக்கி வைத்துள்ளனர்.

மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் ஆகிய பன்னிரு இராசிகளின் சிறபங்களும் மிகத் திருத்தமாக நகரத்தார் கோயில்களில் காணப்படுகின்றன.

கீழச்சிவற்பட்டியில் உள்ள பன்னிரு இராசிச் சிறபங்கள் (நி.ப.எ.55) சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

## 5.7.11. அங்கிகள்

கோயிலில் உள்ள மூலவர், அம்மன், விநாயகர், முருகர், வயிரவர் ஆகிய ஐவருடைய சிற்பங்களுக்கும் ஏற்ற அளவில் செப்புத் தகடு, வெள்ளித் தகடு, தங்கத் தகடு ஆகியவற்றால் அங்கிகளைச் செய்து வைப்பது நகரத்தாரின் தனிக்கலையாகும்.

மூலச் சிலையில் உள்ள தலையணி, கழுத்தணி, தோளணி, கையணி, மார்பணி, இடையணி, காலணி, விரலணி ஆகிய அனைத்தும், அங்கியிலும் இடம் பெற்றிருப்பது இதன் நனிச்சிறப்பாகும்.

மூலச் சிற்பங்களின் அளவுகளையும் அழகுகளையும் மெழுகுப் படிமத்தில் எடுத்து அங்கிகள் சரியான அளவில் வார்த்து எடுக்கப்பட்டுள்ளன. பிள்ளையார்பட்டியில் உள்ள கற்பக விநாயகரின் சிற்பம் மிகப் பெரியது எனினும், அதற்கும் ஒரு வெள்ளிக் கவசத்தினைச் செய்துள்ளனர் (நி.ப.எ.56)

பிறகோயில்களைக் காட்டிலும் அதிக அளவில் செம்பு அங்கி, வெள்ளி அங்கி, சொர்ண (தங்க) அங்கி ஆகியனவற்றை நகரத்தார் கோயில்களில் காணமுடிகின்றது. அங்கிச் சிற்ப வளர்ச்சி நகரத்தாரின் தனிச்சறப்புக்களில் ஒன்றாகும்.

### 5.7.12. வாகனங்கள்

சிவன், அம்மன், விநாயகர், முருகன் ஆகியோருக்காகப் பிற கோயில்களில் காளை வாகனம், பெருச்சாளி வாகனம், மயில் வாகனம் ஆகியன மட்டுமே இருக்கின்றன. ஆனால் நகரத்தார் கோயில்களில் அவற்றுடன் பல சிறப்பு வாகனங்களும் காணப்படுகின்றன.

சிம்ம வானம், குதிரை வாகனம், யானை வாகனம், யாளி வாகனம், அன்ன வாகனம், கைலாச வாகனம், கருட வாகனம், கற்பகத்தரு வாகனம், காமதேனு வாகனம் ஆகிய மர வாகனங்கள் நகரத்தார் கோயில்களில் உள்ளன.

செல்வ வளம் மிக்க தேவகோட்டை, காரைக்குடி, கோட்டையூர், பொன்னமராவதி, ராயபுரம், கீழச்சிவற்பட்டி, இரணியூர், வயிரவன்பட்டி முதலிய கோயில்கள் பலவற்றில் மர வாகனங்களுக்கு வெள்ளி அங்கியும் தங்க அங்கியும் சார்த்தப்பட்டுள்ளன.

இறைவன் இறைவியர் திருவீதி உலா வருவதற்காக வெள்ளிக் கேடகங்கள், வெள்ளித் தேர்கள் ஆகியனவற்றையும் நகரத்தார் திருப்பணியாகச் செய்துள்ளனர்.

நகரத்தார்கள் பல்வேறு வகையான மரச் சிற்ப வாகன வளர்ச்சிக்குப் பெரும் துணை புரிந்து வருகின்றார்கள்.

### 5.7.13. சமயப்பொறை

நகரத்தார்கள் சங்ககாலச் சைவர்கள். எனினும் வைணவத்தை அவர்கள் வெறுப்பதில்லை. சிவன் கோயில் கட்டினாலும் அவற்றுள்

பெருமாளுக்கும் ஒரு சிற்றாலயம் அமைத்துள்ளனர். கோயில் தூண் சிற்பங்களிலும், சுதைச் சிற்பங்களிலும் இராமர், லெட்சுமணர், அனுமன் ஆகியோர் உருவங்களும் தசாவதாரக் காட்சிகளும் இடம் பெற்றுள்ளன. சிவன் கோயிலில் வைணவச் சிற்பங்களைப் படைத்ததன் நோக்கம், சைவமும் வைணவமும் ஒன்றே என்பதைத் தெளிவாக்குவதேயாகும். வைணவ சமயத்தைத் தாழ்வடையச் செய்யும் நோக்கிலோ, திருமாலின் பெருமையைக் குறைக்கும் வகையிலோ, சிற்பங்களைப் படைக்கவில்லை. திருமாலின் அழகிய சிற்பங்களும், அவற்றை நிறுவியுள்ள இடங்களும் மேற்கூறிய கருத்துக்கு அரண் செய்வன.

சிறு தெய்வங்கள் எனப்படும் கிராம தேவதைகளாக நகரத்தார்கள் மாரியம்மன், ஐயனார், கருப்பர் முதலிய தெய்வங்களை வழிபடுகின்றனர்.

நகரத்தார்கள் பூம்புகாரிலிருந்து இராமநாதபுரம் மாவட்டப் பகுதிக்குக் குடிவந்த காலத்தில் அச்சிறு தெய்வக் கோயில்கள் நடைமுறைச் செலவிற்குப் பொருளின்றிச் செயல்படாமல் இருந்தன. அவற்றைத் தமது கோயில் நிருவாகத்துடன் ஏற்று நகரத்தார்கள் நடத்தி வருகின்றார்கள்.

கீரணிப்பட்டியில் உள்ள முத்து மாரியம்மன் கோயிலின் நடைமுறைச் செலவையும் நிருவாகத்தையும் இளையாற்றங்குடி நித்திய கல்யாண உடனாய கைலாசநாதர் கோயில் அறங்காவலர்களே கவனித்து வருவது இதற்கு ஒரு சான்றாகும். அதனால் அக்கோயில் முத்து மாரியம்மன் திருவீதி உலா ஐம்பொன் சிற்பம் (நி.ப.எ.51) இளையாற்றங்குடியிலேயே உள்ளது.

கிராம தெய்வங்களையும் சிவன் கோயில் நிருவாகத்துடன் சரிசமமாக ஏற்று செயற்படுத்துவதும் நகரத்தார்களின் சமயப் பொறையினைக் காட்டுகிறது. இச் சமயப் பொறையும் நகரத்தார் பாணிகளுள் ஒன்றாகும்.

### 5.7.14. பழையன காத்தல்

பழைய சிற்பங்கள், ஓவியங்கள் முதலியவற்றைப் பாதுகாத்துப் பேணி வைத்திருப்பதும் நகரத்தாரின் தனித்தன்மையாகும்.

சிலைகள் உடையாமல் சுற்றிலும் கம்பிகள் போட்டுப் பாதுகாப்பதைக் கீழச்சிவற்பட்டி, மாத்தூர் ஆகிய ஊர்களில் காணலாம்.

வயிரவன்பட்டியில் மாணிக்கவாசகரின் சிலையில் உள்ள வலது கை அபய முத்திரை உடைந்திருந்தாலும், அதே போல ஒரு செப்புக் கூட்டினைச் செய்து பொருத்[illegible]யை பொருத்தி [illegible]வைத்துள்ளனர்.

கற்சிற்பங்கள் உடைந்தாலும் அவற்றைத் தூக்கி எறிந்துவிடுவதில்லை. ஆதிச் சிற்பங்கள் என்று திருச்சுற்றின் ஒரு பகுதியில் மருந்திட்டுப் பதித்து வைத்துள்ளனர்.

இச்சிறப்பினை இரணியூர், பிள்ளையார்பட்டி, சூரைக்குடி முதலிய ஊர்களில் உள்ள கோயில்களில் காணலாம்.

செப்புச் சிலைகளைப் பாதுகாக்க முறைப்படி புளிக்காப்பு இட்டு வருகின்றனர். இச்சிறப்பினை இளையாத்தங்குடி ஸ்ரீநித்தியகல்யாணி உடனாய கைலாசநாதர் கோயிலில் சிறப்பாகக் காணமுடிகிறது.

கோயில் முழுமையையும் பாதுகாப்பதற்காக அடிக்கடி குடமுழுக்கு விழாவினைச் செய்து வருகின்றனர். இவ்வாறு பழையனவற்றைப் பேணிப் பாதுகாப்பதும் நகரத்தார் பாணியாகும்.

## அடிக்குறிப்புகள்

1. டாக்டர் இரா. நாகசாமி, "தமிழ்நாட்டுச் சிற்பங்கள்", தமிழகக் கோயிற்கலைகள், ப. 89.
2. Ibid. ப. 90.
3. டாக்டர் இரா. நாகசாமி, ஓவியப்பாவை, ப. 63.
4. கம்பன் அடிப்பொடி சா.கணேசன், "சிற்பச் சிறப்புமிக்க திருக்கோயில்", கோவிலூர் திருக்குட நீராட்டு மலர், ப. 22.
5. வை. கணபதி ஸ்தபதி, மாமல்லபுரம், நேர்காணல், நாள்:13.9.83.
6. ராஜாமாணி குருக்கள், வயிரவன்பட்டி, நேர்காணல், நாள்: 20.5.83.

# 6. முடிவுரை

கோயில்கள் சமயப்பணிக்கும் சமுதாயப்பணிக்கும் மையமாக அமைந்தன. எனவே, பல்லவர் முதலிய மன்னர்கள் கோயில்களைக் கட்டிக் கொடுத்து வந்தனர். முடியாட்சி மறைந்து குடியாட்சி தொடங்கியதும் பழைய கோயில்களைப் பேணிக் காப்பதற்கும் புதிய கோயில்களைச் சிற ட ஆகம முறைப்படி கட்டுவதற்கும் நகரத்தார்கள் முன்வந்தனர். காலத்திற்கேற்ற சிறந்த இத்திருப்பணியினைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் கீழ்வருமாறு குறிப்பிடுகின்றார்.[1]

தமிழகப் பேரரசுகள் மலைபடு கதிரென மறைந்தன. திருக்கோயில்கள் பேணுவாரை எதிர்பார்த்து ஏங்கின. நகரத்தார் சமூகம், வரலாற்றிற்கும் திருக்கோயில் பாதுகாப்புக்கும் புதியதொரு திருப்புமுனையை -அத்தியாயத்தை உண்டாக்கிற்று. நகரத்தார் சமூகம் பழந்தமிழர் நெறிபற்றி வாழ்வதில் சிறந்த சமூகம் . . . பழைய அரசர்களைப் போலவே செந்தமிழையும் சிவ நெறியையும் போற்றி வளர்த்து வருகின்றனர்.

கோயில் வழியதாகக் குடிகளை அமைத்துக் கொண்ட ஒப்பற்ற நாகரிகம், இன்று நகரத்தார் சமூகத்தில்தான் நிலவுகின்றது. அதனால் அச்சமூகத்தினர் திருக்கோயில்களுக்கு வழங்குவதில் கணக்குப் பார்ப்பதில்லை. வழங்குவதோடு மட்டுமின்றி முறையாக வழிபாடுகள் செய்வதிலும் ஈடுபட்டார்கள்.

நகரத்தார் சமூகம் தமிழகத்தின் வரலாற்றுக்குத் தொடர்ச்சி யூட்டிய சமூகம். தமிழக் கலைக்கும் நாகரிகத்திற்கும் உயிரூட்டிய சமூகம்.

நகரத்தார்கள், கி.பி ஏழாம் நூற்றாண்டிலிருந்தே பாண்டிய நாட்டில் கோயில் திருப்பணிகளில் ஈடுபட்டார்கள் என அறிஞர் கூற்றுக்களும் செவிவழிச் செய்திக்கும் தெரிவிக்கின்றன.[2] எனினும் 19, 20ஆம் நூற்றாண்டுகளில் அவர்கள் செய்த கற்றளித் திருப்பணிகள்தான் காலவாரியாக நூல்களில் பதிவு செயப் பெற்றுள்ளன.[3]

அரியகுடியில் அமைந்துள்ள சீனிவாசப் பெருமாள் கோயில்தான் முதன் முதலில் கற்றளி செய்யப்பட்டது. கி.பி.1818ஆம் ஆண்டில் திருப்பணி முடிந்து முதற் குடமுழுக்கு நடந்துள்ளது. இரண்டாவதாக 1820இல் சிறுவயல் பொன்னழகியம்மை கோயில் திருப்பணி நடந்துள்ளது.

நகரத்தாரின் 80% கோயில் திருப்பணி 20ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தது.

விலைவாசி கூடிக்கொண்டே வரும் 20ஆம் நூற்றாண்டில் கோயில் திருப்பணிகளைச் செய்தாலும், பழைய சிற்ப நூல்களும் ஆகம நூல்களும் கூறியுள்ள முறைப்படியே அப்பணிகளைச் செய்துள்ளனர்.

நகரத்தார் கோயில் சிற்பங்கள், வாஸ்து சாஸ்திரம், மயமதம், மானசாகரம், சகளாதிகாரம்,காசியப சில்பம், சாரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரம், ப்ராஹ்மீய சித்ரகர்ம சாஸ்திரம், ஸ்ரீ தத்துவநிதி ஆகிய சிற்ப நூல்கள் கூறுகின்ற இலக்கணங்களின்படி காணப்படுகின்றன.

நகரத்தார்கள் காமிகாகமம், காரணாகமம் ஆகிய ஆகம நூல்களின்படி கோயில் சிற்பங்களை அமைத்து வழிபாடு செய்து வருகின்றனர்.

நகரத்தாருக்கு முந்திய சிற்பக்கலை வளர்ச்சியில், சங்ககாலச் சிற்பக்கலை பற்றிய இலக்கியச் சான்றுகள் மட்டுமே காணக்கிடைக்கின்றன. சங்ககாலச் சிற்பங்கள்,இன்று வரை அகழ்வாய்வில் கிடைக்கவில்லை.

பல்லவர்காலச் சிற்பங்களாக நடுகற்களும், நடனமாடுவோர் சிற்பங்களுமே மிகப் பழமையானதாகக் கிடைக்கின்றன. பின்னர், கங்கைவார் சடைக்கரந்த அண்ணல், துவாரபாலகர், ஐங்கரன், ஜேஷ்டாதேவி, ஆனந்தக்

கூத்தன், நிசும்ப சூதனி ஆகிய தெய்வச் சிற்பங்கள், முதல் பகுதியாகக் காணக் கிடைத்துள்ளன. நாம் அதன் பின்னர் பல்வேறு சிற்பங்களை நாயக்கர் காலம்வரை காணமுடிகின்றது.

வணிகர் குலத்தைச் சார்ந்த நகரத்தார்கள், மகாலெட்சுமியின் சிலையை மட்டுமே தங்கள் கோயிலில் அமைத்தனர். அவளது மூத்தவளான ஜேஷ்டாதேவியின் சிற்பத்தைத் தமது கோயிலில் வைக்கவில்லை.

நகரத்தார்கள் நம நாட்டின் பல பகுதிகளையும் வணிகம் காரணமாகச் சுற்றிப் பார்த்தபோது பல்வேறு கோயில் அமைப்புக்களையும் கூர்ந்து நோக்கியுள்ளனர்.

நகரத்தார்கள், பல்லவர் முதலிய மன்னர்கள் அமைத்த கோயில் சிற்பங்களில் காணப்படும் நிறைகளைத் தொகுத்து அவற்றின் வளர்ச்சியாகத் தமது கோயில் சிற்பங்களை அமைத்துள்ளனர்.

பல்லவர் பாணியின் சிறப்பாக அமைந்துள்ள ஒற்றைக் கற்றளித் தன்மையில் சண்டிகேசுவரருக்கு ஒரு கோயில் அமைத்துள்ளனர். அக்கோயிலை வயிரவன் பட்டியில் காணலாம். அதே பாணியில் தூண்களைக் குடைந்து மழை நீரை வெளிப்படுத்தும் குழாய்களாக இரணியூர்க் கோயில் அமைத்துள்ளனர். பல்லவர் சிலை வடித்த உருவங்கள் மிகப் பெரியன. சிறு உறுப்புக்கள் நுட்பமாகச் செதுக்கப்படவில்லை. எனவே அக்குறை நீங்கச் சிறந்த கற்களைத் தேர்ந்தெடுத்து மிக நுட்பமான சிறு சிறு உறுப்புக்களும் நரம்புகளும் தெரியும் வண்ணம் சிறப்பாகச் சிலைகளைச் செதுக்கியுள்ளனர்.

சோழர் காலச் சிற்பங்கள் கட்டடத்தின் ஒரு பகுதியாக மாறிவிட்டன. அவை தனித்துத் தெரியும்படியான இடத்தைத் தேர்ந்தெடுத்து அமைக்காதது சோழர் பாணியில் உள்ள ஒரு குறையாகும். அக்குறையினை விடுத்து ஒவ்வொரு கடவுள் திருவுருவமும் ஆகம முறைப்படி எங்கெங்கு இருக்கவேண்டுமோ அங்கங்கு அவற்றின் தனித்தன்மை புலப்படுமாறு நகரத்தார்கள் அமைத்துள்ளனர்.

பாண்டியர் பாணியில் கோபுரங்கள் மட்டுமே மிக உயரமாகக் கட்டப்பெற்றன. விமானங்கள் மிகச் சிறியதாகவே அமைக்கப்பட்டன. அவற்றிலும் சுதைச் சிறபங்கள் குறைவாகவே காணப்பட்டன. இக்குறைகள் நீங்கும் வண்ணம் நகரத்தார்கள் கோபுரத்தை ஒட்டிய உயரத்தில் விமானங்களை அமைத்தனர்.

இவை இரண்டிலும் புராண விளக்கமாகவும், தெய்வ தத்துவ விளக்கமாகவும், பண்பாடுமிக்க இலட்சிய வாழ்க்கைக்கு வழிகாட்டியாகவும் ஆயிரக்கணக்கான சுதைச் சிற்பங்களை அமைத்தனர்.

விஜயநகர மன்னர் பாணியிலும் நாயக்கர் பாணியிலும் அதிகமான அணிகலன்கள் சிற்பத்தில் இயற்கை அழகை மறைக்கும் வண்ணம் அமைந்துள்ளன. அவ்வாறு அதிக அணிகலன்களின்றி அளவான அணிகலன்களுடன் நகரத்தார்கள் சிற்பத்தை அமைத்தனர்.

இறைவனுக்குரிய கருவறையினை உயர்த்தி, இறையடியார்கள் சுற்றிவரும் திருச்சுற்றினைப் பள்ளமாகத் தாழ்த்தி அமைக்கும் பள்ளப்பத்தி அமைப்புமுறை நகரத்தார் பாணியைச் சேர்ந்ததாகும்.

நகரத்தார்கள் முழுமையான இறை நம்பிக்கை உடையவர்கள். எனவே, பார்க்குமிடமெங்கணும் பரம்பொருளின் உருவம் நீக்கமற நிறைந்திருக்க வேண்டும் என்ற பேராவலால் கருவறைச் சுவர், கும்ப பஞ்சரம், தூண்கள், ஆகியவற்றில் இறைவனின் பல்வேறு திருவிளையாடற் கோலங்களைச் சிற்பங்களாக்கியுள்ளனர்.

நகரத்தார்கள் தல விருட்சத்திற்கும் சிலைவடித்துள்ளனர். இதனால் தமிழர்களின் பண்டைகால வழிபாட்டுமுறை தெரியவருகின்றது.

தட்சிணாமூர்த்தி கல்மண்டபம், மர உத்திரங்களை வரிசையாக அடுக்கி வைத்தாற்போல அமைந்துள்ளது. இதனால் பழங்காலத்தில் மரத்தாலேயே கோயில்கள் கட்டப்பட்டதை நன்கு உணரமுடிகின்றது.

அங்கிகள், வாகனங்கள், கண்ணாடி, பன்னிரு இராசிச் சிற்பங்கள் போதிகையில் சிங்க உருவம் ஆகியன நகரத்தார் பாணியின் தனிச் சிறப்புக்களாகும்.

சிவபெருமானின் லிங்கத் திருமேனிச் சிற்பத்திலிருந்து நாயன்மார் சிற்பங்கள் வரை அனைத்துச் சிற்பங்களும் நகரத்தார் கோயில்களில் காணப்படுகின்றன.

தெய்வ தத்துவத்திற்கும், சிலை அழகிற்கும் சம அளவு சிறப்புக் கொடுத்துள்ள சிற்பங்களே நகரத்தார் கோயில்களில் திருக்காட்சி தருகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. குன்றக்குடி அடிகளார், வரலாற்று வழிவந்த வாழ்வு. நகரத்தார் மாநில மாநாட்டுமலர், ப.291.
2. வீர.லெ.சின்னையச் செட்டியார், தனவைசியராகிய நாட்டுக் கோட்டை நகரத்தார் சரித்திரம், ப.16-17. அ.இராமநாதன் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, ப.51.
   Dr.V.Sp.Manickam, Collected Papers, pp.112-114.
3. அ. இராமநாதன் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, ப.48-290.
   ராய.சொ., திருத்தலப்பயணம், பக்.408-422.

## 7.2 நகரத்தாரின் கோயில் திருப்பணி

### 7.2.1. ஒன்பது நகரக் கோயில்களில் நகரத்தார் திருப்பணி

| வரிசை எண் | ஊர்ப்பெயர் | திருப்பணிப் பொருளளவு ரூபாய் |
|---|---|---|
| 1. | இரணியூர்க்கோவில் | 16,06,000 |
| 2. | இலுப்பைக்குடிக் கோவில் | 4,50,000 |
| 3. | இளையாத்தன்குடிக் கோவில் | 19,00,000 |
| 4. | சூரைக்குடிக் கோவில் | 2,00,000 |
| 5. | நேமம் கோவில் | 6,87,000 |
| 6. | பிள்ளையார்பட்டிக் கோவில் | 13,69,000 |
| 7. | மாற்றூர்க் கோவில் | 10,00,000 |
| 8. | வைரவன் கோவில் | 14,05,000 |
| 9. | வேலவன்குடிக் கோவில் | 13,25,500 |
| | ஆக மொத்தம் ரூபாய் | 1,05,42,500 |

### 7.2.2. நகரத்தார் வாழிடங்களில் செய்த திருப்பணி

| வரிசை எண் | ஊர்ப்பெயர் | திருப்பணிப் பொருளளவு ரூபாய் |
|---|---|---|
| 1. | அமராவதிபுதூர் | 2,65,000 |
| 2. | அரண்மனைச் சிறுவயல் | 12,000 |
| 3. | அரிமளம் | 7,05,000 |
| 4. | அரியக்குடி | 15,38,500 |
| 5. | அலவாக்கோட்டை | 1,79,000 |
| 6. | க.அழகாபுரி | 50,000 |
| 7. | கொ.அழகாபுரி | 45,000 |
| 8. | ஆத்தன்குடி | 14,10,000 |
| 9. | ஆத்திக்காடு தெற்கூர் | 4,29,000 |
| 10. | ஆவினிப்பட்டி | 80,000 |

| வரிசை எண் | ஊர்ப்பெயர் | திருப்பணிப் பொருளளவு ரூபாய் |
|---|---|---|
| 11. | உ.சிறுவயல் | 2,82,000 |
| 12. | உலகன்பட்டி | 1,35,000 |
| 13. | ஒக்கூர் | 8,000 |
| 14. | கடியாப்பட்டி (இராமச்சந்திரபுரம்) | 10,75,000 |
| 15. | கண்டமாணிக்கம் | 5,10,000 |
| 16. | கண்டவராயன்பட்டி | 1,30,000 |
| 17. | கண்டனூர் | 17,19,000 |
| 18. | கருங்குளம் | 1,00,000 |
| 19. | கல்லல் | 10,16,000 |
| 20. | கல்லுப்பட்டி | 60,000 |
| 21. | காரைக்குடி | 16,38,000 |
| 22. | காளையார்மங்கலம் | 35,000 |
| 23. | கானாடுகாத்தான் | 14,00,000 |
| 24. | கீழச்சிவற்பட்டி. பி.அளகாபுரி | 18,70,000 |
| 25. | குருவிக்கொண்டான்பட்டி | 4,30,000 |
| 26. | குழிப்பிரை | 4,15,000 |
| 27. | கொத்தமங்கலம் | 6,92,000 |
| 28. | கொப்பனாபட்டி | 2,75,000 |
| 29. | கோட்டையூர் | 67,20,000 |
| 30. | கோனாப்பட்டு | 7,65,000 |
| 31. | சக்கந்தி | 20,000 |
| 32. | சண்முகநாதபுரம் (ஆறாவயல்) | 1,30,000 |
| 33. | சிராவயல் | 60,000 |
| 34. | சிறுகூடற்பட்டி | 1,18,000 |
| 35. | செம்பனூர் | 1,46,000 |
| 36. | செயங்கொண்டபுரம் (செக்காலை) | 37,000 |
| 37. | செவ்வூர் | 1,37,000 |
| 38. | சொக்கநாதபுரம் | 1,00,000 |
| 39. | சொக்கலிங்கபுரம் (மதகுபட்டி) | 2,50,000 |
| 40. | சொக்கலிங்கம்புதூர் | 1,77,000 |
| 41. | சோழபுரம் | 5,16,500 |
| 42. | சொர்னநாதபுரம் (தானிச்சாவூரணி) | 57,000 |
| 43. | தேவகோட்டை | 28,29,500 |
| 44. | தேனிபட்டி | 1,10,000 |
| 45. | நடராஜபுரம் | 48,000 |
| 46. | நற்சாந்துபட்டி | 7,37,500 |
| 47. | நாச்சியாபுரம் | 3,75,000 |

| வரிசை எண் | ஊர்ப்பெயர் | திருப்பணிப் பொருளளவு ரூபாய் |
|---|---|---|
| 48. | நாட்டரசன்கோட்டை | 13,10,000 |
| 49. | நெற்குப்பை | 2,55,800 |
| 50. | நேமுத்துப்பட்டி | 2,90,000 |
| 51. | பட்டமங்கலம் | 11,20,000 |
| 52. | பலவான்குடி | 2,13,000 |
| 53. | பள்ளத்தூர் | 11,45,000 |
| 54. | பறியமருந்துப்பட்டி | 3,50,000 |
| 55. | பனங்குடி | 38,500 |
| 56. | பனையப்பட்டி | 1,20,000 |
| 57. | பாகநேரி | 2,42,000 |
| 58. | பிள்ளையார்பட்டி (அறச்செயற் பொருளளவு நகரக்கோவில் வரிசையில் சேர்க்கப்பெற்றுள்ளது) | |
| 59. | புதுப்பட்டி | 87,000 |
| 60. | புதுவயல் | 3,02,000 |
| 61. | பூங்குடி | 2,45,000 |
| 62. | பூலாங்குறிச்சி | 1,70,000 |
| 63. | பொன்னமராவதி | 39,000 |
| 64. | மகிபாலன்பட்டி | 47,000 |
| 65. | மாநகரி | 25,000 |
| 66. | மிதிலைப்பட்டி | 5,60,00 |
| 67. | ஆ. முத்துப்பட்டினம் | 56,000 |
| 68. | மேலைச்சிவபுரி | 1,08,000 |
| 69. | ராங்கியம் | 80,000 |
| 70. | ராயவரம் | 4,70,000 |
| 71. | கொ. லெட்சுமிபுரம் | 95,000 |
| 72. | நெ. லெட்சுமிபுரம் | 48,000 |
| 73. | வலையபட்டி | 5,09,000 |
| 74. | விராமதி | 85,000 |
| 75. | விரையாச்சிலை | 2,50,000 |
| 76. | வெற்றியூர் | 81,000 |
| 77. | வேகுப்பட்டி | 66,400 |
| 78. | வேந்தன்பட்டி | 70,000 |
| | ஆக மொத்தம் ரூபாய் | 3,83,14,700 |

## 7.2.3. நகரத்தார் தத்தம் ஊர்களுக்கு அண்மையிலுள்ள வேற்றூர்களில் செய்த திருப்பணி விவரம்

| வரிசை எண் | ஊர்ப்பெயர் | திருப்பணிப் பொருளளவு ரூபாய் |
|---|---|---|
| 1. | அரளிப்பாறை | 47,000 |
| 2. | இரவிசேரி | 3,00,000 |
| 3. | இளங்குடி | 1,40,000 |
| 4. | உப்பூர் | 1,20,000 |
| 5. | உமையாள்புரம் | 1,20,000 |
| 6. | எழுவங்கோட்டை | 62,500 |
| 7. | கண்டதேவி | 4,37,000 |
| 8. | கல்லாங்குடி | 1,00,000 |
| 9. | களத்தூர் | 10,000 |
| 10. | காட்டுக்கோவில் | 48,000 |
| 11. | கீழக்கோட்டை | 62,000 |
| 12. | குன்றக்குடி | 7,83,000 |
| 13. | கோவிலூர் | 14,90,000 |
| 14. | கோட்டூர் (நயினார் கோவில்) | 2,00,000 |
| 15. | கோட்டூர் (புதுக்கோட்டைப் பகுதி) | 1,11,000 |
| 16. | கோட்டைவயல் | 75,000 |
| 17. | சாக்கோட்டை | 3,95,000 |
| 18. | செங்கரை | 35,000 |
| 19. | திருக்களக்குடி | 15,000 |
| 20. | திருமெய்யம் | 4,00,000 |
| 21. | துவார் | 10,000 |
| 22. | நயினார்கோவில் (நயினார்பட்டி) | 60,000 |
| 23. | நல்விபட்டி | 18,000 |
| 24. | நெய்வாசல் | 1,43,000 |
| 25. | பிடாரனேந்தல் | ...... |
| 26. | பில்லமங்கலம் | 1,20,000 |
| 27. | பேரையூர் | 1,47,000 |
| 28. | மலைக்கொழுந்தீசர் கோவில் | 1,31,000 |
| 29. | மானாமதுரை | 1,23,000 |
| 30. | முறையூர் | 3,35,000 |

| | | |
|---|---|---|
| 31. | மூலங்குடி | 1,05,000 |
| 32. | வன்னியன் சூரைக்குடி | 3,00,000 |
| 33. | வெளிமுத்தி | 50,000 |
| | ஆகமொத்தம் ரூபாய் | 64,92,500 |

## 7.2.4. ஸ்ரீ காசியிலும் சோழநாட்டு தலங்களிலும் நகரத்தார் செய்துள்ள திருப்பணி

| வரிசை எண் | தலப்பெயர் | திருப்பணிப் பொருளளவு ரூபாய் |
|---|---|---|
| 1. | ஸ்ரீகாசி | 9,35,000 |
| 2. | கோவில் (சிதம்பரம்) | 43,00,000 |
| 3. | அண்ணாமலைநகர் | 55,00,000 |
| 4. | புலீச்சரம் இளமையாக்கினார் கோவில் (சிதம்பரம்) | 5,99,000 |
| 5. | அனந்தேசுவரம் (சிதம்பரம்) | 1,00,000 |
| 6. | திருவேட்களம் | 2,00,000 |
| 7. | திருநெல்வாயில் (சிவபுரி) | 3,37,500 |
| 8. | திருக்கழிப்பாலை | 61,000 |
| 9. | திருநல்லூர்ப்பெருமணம் | 90,000 |
| 10. | திருமயேந்திரப்பள்ளி | |
| 11. | திருப்பல்லவனீச்சரம் | 27,000 |
| 12. | திருவெண்காடு | 2,00,000 |
| 13. | சீர்காழி | 3,00,000 |
| 14. | திருக்கோலக்கா (திருத்தாள முடையார் கோவில்) | 1,80,000<br>3,50,000 |
| 15. | திருப்புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுவரன் கோவில்) | 3,33,000 |
| 16. | திருக்கண்ணார் கோவில் | 3,25,500 |
| 17. | திருநின்றியூர் | 1,60,000 |
| 18. | திருப்புன்கூர் | 30,000 |

| வரிசை எண் | தலப்பெயர் | திருப்பணிப் பொருளளவு ரூபாய் |
|---|---|---|
| 19. | திருநீடூர் | 1,00,000 |
| 20. | திரு அன்னியூர் | 70,000 |
| 21. | திருநாரையூர் | 50,000 |
| 22. | திருக்கடம்பூர் | 50,000 |
| 23. | திருக்கஞ்சனூர் | 20,000 |
| 24. | திருவாயலூர் | ...... |
| 25. | திரு இன்னம்பர் | 35,000 |
| 26. | திருவையாறு | 10,90,000 |
| 27. | திரு அன்பிலாந்துறை | 2,00,000 |
| 28. | திரு ஆனைக்கா | 10,45,000 |
| 29. | திருவரங்கம் (ஸ்ரீ ரங்கம்) | 3,50,000 |
| 30. | திருக்கடம்பந்துறை (குளித்தலை) | 2,00,000 |
| 31. | திருப்பராய்த்துறை | 10,19,000 |
| 32. | திருமூக்கிச்சுரம் (உறையூர்) | 4,00,000 |
| 33. | திருச்சிராப்பள்ளி (மலைக்கோட்டை) | 50,000 |
| 34. | திருவெறும்பியூர் | 35,000 |
| 35. | திருத்தென்குடித்திட்டை | 4,25,000 |
| 36. | திருக்குடந்தைக்காரோணம் (மகாமகக்குளக்கரை) | 85,000 |
| 37. | திருநாகேச்சுரம் | 50,000 |
| 38. | திருவிடைமருதூர் | 9,14,000 |
| 39. | திருவியலூர் | 1,00,000 |
| 40. | திருவைகன் மாடக்கோயில் | 1,50,000 |
| 41. | திருத்துருத்தி (குத்தாலம்) | 50,000 |
| 42. | குத்தாலம் (இராசகோபாலபுரம்) | 12,000 |
| 43. | திருமயிலாடுதுறை (மாயூரம்) | 23,66,000 |
| 44. | திருக்கடவூர் வீரட்டம் | 10,000 |
| 45. | திருவேட்டக்குடி | 2,25,500 |
| 46. | கோயிற்பத்து (திருத்தெளிச்சேரி) | 2,07,000 |
| 47. | திருத்தரமபுரம் | 75,000 |
| 48. | திருத்தக்களூர் | 75,000 |
| 49. | திரு அம்பர் மாகாளம் | 1,50,000 |
| 50. | திருத்திலதைப்பதி | 1,00,000 |
| 51. | திருவீழிமிழலை | 50,000 |
| 52. | திரு அரிசிற் கரைப்புத்தூர் | 1,50,000 |
| 53. | திருக்கலயநல்லூர் | 15,000 |
| 54. | திருப்புகலூர் | ...... |

